# ஸ்ரீ தியாகோபநிஷத்



"ஹரிகதா ரத்ஞகர"

T. S. பாலகிருஷ்ண சாஸ்திரி.

# ஸ்ரீ தியாகோபநிஷத்.

*

ஆசிரியர் :
ஸத்கதாம்ருத கலாநிதி, ஹரிகதா ரத்னகர
தியாக கானலோல,
T. S. பாலகிருஷ்ண சாஸ்திரி.

*

ஸ்ரீ ஸத்குரு கிருபா பிரசுரம்,
34, ஸ்ரீனிவாஸா அவின்யூ, ராஜா அண்ணாமலைபுரம்,
சென்னை—28.



## कल्याणरामचन्द्रः कामितफलदायकः

நீநாமரூபமுலகு நித்யஜய மங்களம்

தெலிஸிராம சிந்தனதோ நாமமு ஸேயவே

ஈமேனு கலிகினந்துகு ஸீதா ராம நாமமே பல்கவலெனு

ராம நீயெட ப்ரேமரஹிதுலகு நாமருசி தெலுஸுனா.

एष सर्वस्व भूतस्तु परिष्वङ्गो हनूमतः ।
मया कालमिमं प्राप्य दत्तश्चास्तु महात्मनः ॥



आप्तसुलभः श्रीरामचन्द्रः

கீதார்த்தமு ஸங்கீதாநந்தமு......
ஸீதாபதி சரணுப்ஜமு நிடு கொன்ன
வாதாத்மஜுனிகி பாகதெலுஸுரா.

# முன்னுரை.



"வைதிக தர்ம வர்த்தனி" எனும் தார்மிக பத்திரிகையில் அவ்வப்பொழுது "தியாகோபநிஷத்" என்ற தலைப்பின்கீழ் வெளிவந்துள்ள எனது கட்டுரைகளைத் தொகுத்து இப்புத்தகத்தில் வெளியிட்டிருக்கிறேன். ஸ்ரீ ஸத்குரு தியாகராஜ ஸ்வாமிகளின் கீர்த்தனங்களுள் விளங்கும் எல்லையற்ற ஞான பாகமும் பக்தி ரஸமும், அதன்மேனி கலையாமல், என் சிற்றறிவுக்கெட்டியபடி, சில எழுதியுள்ளேன். நினைக்க நினைக்க கருத்தில் அடங்கா அவருடைய உள்ளன்பை நாம் காண முடியாவிடினும் ஓரளவு அறிய முடிகிறது. இதில் காணும் கீர்த்தனங்கள் யாவுமே எல்லோரும் அறிந்தது. ஸங்கீத வித்வான்கள் பலமுறை பாடிக் கேட்டவை. ஆதலால் அவைகளுக்கு ஸ்வரக்குறிப்புகள் காட்டவில்லை.

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி பெரியவாளும், ஜகத்குரு ஸ்ரீ சிரிங்கேரி மகா ஸன்னிதானமும், அடியே னிடம் காட்டிவரும் பெருங்கருணை காரணமாக வும், பூஜ்யர்களான எனது மாமனர் பிரும்மஸ்ரீ ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா அவர்களுடைய உளம் கனிந்த அன்பும், குருபக்த சிரோமணி பிரும்மஸ்ரீ வைத்ய சுப்ரமண்ய அய்யர் அவர் கள், ஸ்ரீ ஸத்குரு கீர்த்தனங்களில் மிக்க ஈடுபாடு கொண்டுள்ள டாக்டர் ஸ்ரீ R. கிருஷ்ணஸாமி அவர்கள், மற்றும் பல ஸங்கீத வித்வான்கள், பெரியோர்கள் எனக்கு அளித்துவரும் ஊக்க மும் என்னை இச்சிறு பணியில் ஈடுபடுத்தின. அவர்களுக்கு என் மனமுவந்த நமஸ்காரங்களை இந்நூல் முகமாக தெரிவித்துக் கொள்கிறேன்.

இப் புத்தகத்தை வெளியிட உதவிய, கடவாசல் ஸ்ரீ மீனாக்ஷி அச்சக உரிமையாளர் A. வெங்கட்டராமனுக்கு ஸ்ரீ ஸத்குரு கிருபை யால் எல்லா நன்மைகளும் உண்டாகப் பிரார்த் திக்கிறேன்.

ஸ்ரீ ஸத்குருவிடம் எனக்கு பக்தி உண்டாகக் காரணமாக இருந்த, என் ஆப்த நண்பர், ஸங்கீத லக்ஷண வித்வான் காலம் சென்ற ஸ்ரீ விஸ்வநாத தர்வாடி (Translator, State Bank of India) அவர்களுக்கு அவர்களின் ஞாபகமாக இம்மலரை ஸமர்ப்பிக்கிறேன்.

இதைப் படித்தின்புறும் நல்லோர்களின் ஆசீர்வாத பலம், அடுத்த பாகத்தை வெளியிட எனக்கு விரைவில் உதவும் என நம்புகிறேன்.

"ஸ்ரீஸத்குரு"
34, ஸ்ரீனிவாஸா அவின்யூ
ராஜா அண்ணாமலைபுரம்,
சென்னை-28. 30-3-77

T. S. பாலகிருஷ்ணசாஸ்திரி.

## கீர்த்தனைகளின் விஷய அட்டவணை.

உ

ஸ்ரீ ராமஜயம்.



# ஸ்ரீ தியாகோபநிஷத்.



## ராக ரத்ன மாலிகை.

ஸ்ரீ ஸத்குரு தியாகராஜ ஸ்வாமிகள் மும்மூர்த்திகளின் அம்சமாக நம்முடைய க்ஷேமத்தைக் கருதி, தென்னாட்டிலே தோன்றினார். வால்மீகியின் வாக்கும் நாரதபகவானின் ஸங்கீதாம்சமும், ஸ்ரீ பரமேச்வரனின் ராம நாம ஸ்வானுபவமும் கொண்டவர். அவரைச் சிறந்த ஸங்கீத மேதையாகவும், வாக்கேயகாரர்களில் சிரேஷ்டமானவராகவும் ஸங்கீத உலகம் போற்றி மகிழ்கிறது. வால்மீகி வெறும் சொற்களின் சுவையை மாத்திரம் தன்னுடைய ராமாயண காவியத்தில் கொடுக்கவில்லை. சொல்லில் ஆழ்ந்து புதைந்த கருத்துக்கள் வால்மீகியின் தனிச்சிறப்பாகும். நாரத முனிவர் ஸங்கீதத்தினால் பகவானைக் கண்டவர். காட்டுபவர்.

" ஸகலலோகங்களுக்கும் ஸத்குரு " என்று எல்லோ ராலும் போற்றப்படுபவர். அதேபோன்று சிவபெரு மான் ஸங்கீதத்தின் ஆதி தெய்வமானவர். நாதமே தனு (சரீரமாக) வாகக் கொண்டவர். அப்பெருமான் ஸ்ரீ ராமபிரானின் நாம வைபவத்தை அனுபவிக்கிறார் என புராணங்கள் கூறுகின்றன.

ஆகவே, ஸ்ரீ ஸ்வாமிகளின் "த்ரிமூர்த்தி" அம்சம் அவருடைய கீர்த்தனங்களில் ஸங்கீத நடையைக் கொண்டு, பேரின்ப நிலையை அடைய உதவும் பரமாத்மாவின் ஸமீபத்தில் அழைத்துச்செல்லும். தமது சொந்தமான உண்மையுள்ள அனுபவ வாக்கி யங்கள் யாவும் ஒரு மகரிஷியின் வாக்குகள். தபஸ்வி யின் வாக்குகள். முற்றும் துறந்த ஒரு ஜீவன்முக்தரின் வாக்குகள். ஒரு பரம பாகவதோத்தமரின் வாக்குகள். மற்றும் பரமாத்மா ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தியால் அருளும் அங்கீகாரம் பெற்றவை. உலகினர்களின் புகழ்ச் சிக்குப் பாடினவை அல்ல. உலகினர் உய்யவே பாடினவை.

உலகின்கண் ஒருவனுக்கு இல்லறத்திலும் தியாக நிலைதான் உரிய நன்மைகளைக் கொடுக்கவல்லது. அதை எல்லா மக்களுக்கும் (குலம், குணம், ஜாதி, மதம், படிப்பு, அந்தஸ்து இவைகள் எதுவும் பாகு படுத்தாமல்) உண்மையான க்ஷேமம் கருதின ஸ்ரீ ஸத் குரு தியாகராஜ ஸ்வாமிகளின் வாக்குகள் தியாகோப நிஷத் என்று ஸம காலத்திய பண்டிதர்களால் அழைக்கப்பட்டது. தம்முடைய அனேக கீர்த்தனங் களைப் பாடுவதால் ஏற்படும் பயனை இந்த கீர்த்தனை யின் மூலம் ஸ்ரீ சுவாமிகள் தெரிவிக்கிறார். இதில். தான் பாடியுள்ள கீர்த்தனைகளின் பெருமையையும் குறிப்பிடுகிறார்.

ராகம்-ரீதிகௌளை] [தாளம்-ரூபகம்.

பல்லவி

ராகரத்ன மாலிக சே
ரஞ்ஜில்லு நட ஹரிசத — (ரா)

அனுபல்லவி

பாகஸே விஞ்சி ஸகல
பாக்ய மந்து தாமுராரே — (ரா)

சரணம்

1 நைகம ஷட் சாஸ்த்ர புரா
ணுகமார்த்த ஸஹிதமட

2 யோகிவருலு ஆனந்தமு
நொந்தே ஸன்மார்க்கமட

3 பாகவ தோத்தமுலு கூடி
பாடே கீர்த்தனமுலட

4 த்யாக ராஜு கடதேர
தாரகமனி சேஸின (சத) — (ரா)

பொருள் :— பல்லவி : *நூறு ராகங்கள் என்ற ரத்னங்களால் அமைக்கப்பட்ட பாமாலையை அணிந்து கொண்டதனால் ஸ்ரீ ஹரி (என் ராமபிரான்) ரொம்பவும் சந்தோஷம் அடைகிறான். (ரொம்பவும் அழகாக இருக்கிறான்.)*

அனுபல்லவி : *அப்பெருமானை நன்கு ஸேவை செய்து எல்லா பாக்கியங்களையும் பெறுவோம் வாருங்கள்.*

சரணம்: (1) வேதங்கள் நான்கு, (2) வேத அங்கங்கள் ஆறு, புராணம், ஆகமம் முதலிய உப அங்கங்களும் எந்தப் பொருளைச் சொல்லுகின்றனவோ, அந்தக் கருத்தைத் தன்னுடன் கொண்டது இந்த மாலை

(2) யோகிகள் (முனிவர்கள், ஜீவன் முக்தர்கள்) இந்த மாலையைக்கண்டு இதுவே பேரானந்தம் கண்டுணர்த்தும் முக்தி வழி என்று ஈடுபடுவர்.

(3) உத்தம பாகவதர்கள் (பகவத் பக்தியையே தமக்கு ஜன்ம காரியமாகக்கொண்டுள்ளவர்கள்) ஒன்றாகச் சேர்ந்து (கோஷ்டியாக) பாடவல்ல தகுதி உடையது.

(4) மற்றும் இந்த தியாகராஜன் நற்கதி பெற இவனைக் காப்பாற்றும் இந்த நூறு ராகங்கள் எனும் ரத்னமாலையினால் ஸ்ரீ ஹரி மகிழ்ச்சியுடன் (பொலிவுடன்) விளங்குகிறான்.

கருத்து:— ராகங்கள் என்றால் ஆசைகள். பகவானிடம் அன்பால் கட்டுப்பட்ட ஆசை ஏற்படுமானால் அது உயர்ந்த பக்தி ஆகின்றது. தாய், தந்தை, குழந்தை, புத்ரன், புருஷன், மனைவி, யசமானன், ஸேவகன், குரு என்று இவர்களிடம் காட்டிடும் அன்பு பகவானிடமும் அதேபோல் வைக்கப்படுகிறது. பகவானையே தந்தை, தாய், நாயகன் இப்படி எல்லா உறவும் கொண்டு அன்பு பொங்கிய ஹ்ருதயத்தின் பலவிதமான உணர்ச்சிகளை கோபம், பிரிவாற்றாமை, ப்ரேமை, ஏகாந்தம், ப்ரணயம் (ஊடல்) இவைகளைப்போன்று நூற்றுக்கணக்கான மனிதஜன்மம் கண்டுணரும் பாவங்களை ரத்னங்களாக மாலை தொடுத்து பகவானுக்கு ஸமர்ப்பித்திருக்கிறேன். ராகங்கள் என்பவை மனித ஜன்மாவுக்கே உரிய

தனிப்பெருமை. இந்த மனித உலகியல் ஆசையை பகவானிடம் வைக்க முடிந்தது இந்த மனிதப்பிறவியில் தானே! விலங்குகளுக்கு இந்த உணர்வைப் பிரித்துக் கொள்ள முடியாதே?

ஸ்ரீ ஸ்வாமிகளின் கிருதிகளில் அவருடைய நூற்றுக் கணக்கான ஹ்ருதய பாவமே மலிந்து காணப்படுவதால், அது ஸ்ரீ ராமனுக்கு, தான் அணிவித்த மாலை என்கிறார். அதை தரித்துக்கொண்டு ஸ்ரீ ராமன் என்னமாகத்தான் இருக்கிறான்? இது அவனுக்கு ரொம்பவும் பிடித்திருக் கிறதாம். (ரஞ்ஜில்லுசுட) என்று கொஞ்சுகிறார். அத் துடன் நிற்கவில்லை, நம்மையும் அழைக்கிறார். அது உத்தம பாகவதனின் பண்பு. நன்றாக தரிசனம் செய்து கொள்ளுங்கள். உங்கள் கோரிக்கை எல்லாம் ஈடேறும். எல்லா பாக்யங்களும் உங்களுக்குக் கிடைக்கச்செய்வான் என் ஹரி; ஏன்? இப்பொழுது ரொம்ப சந்தோஷமாக இருக்கிறான் அல்லவா?

ராகங்கள் என்று சொன்னது, ஸங்கீத மயமான, பாடக்கூடிய ஸப்த ஸ்வரகணிதமான, ஆரோஹண, அவ ரோஹண, மூர்ச்சன, வாதி, ஸம்வாதி, அனுவாதி, விரோதி, ப்ரயோகங்களுடன், 72 மேளகர்த்தா ராகங்கள், அதில் ஜன்யமான, ஸம்பூர்ண, ஷாடவ, ஔடவஸஞ்சாரங் கள், கமக ப்ரயோகாதிகளுடன் லய கதி விஸ்தாரமுடன் மிளிரும் நூற்றுக்கணக்கான (சப்த ஜாலங்கள் எனும் ஒளியைக் கக்கும்) ரத்தினங்களை உள்ளக்குழைவு கொண்ட இந்த தியாகராஜனின் பக்திக் கூடான தங்க முகப்பில் வைத்து, பாடப்பாட, காணக்காண, நினைக்க நினைக்க புதிது புதிதாகும் மணிமாலையுடன் என் ஹரியை (ராமனை)ப் பார்க்க வாருங்கள். அதாவது நான் பாடின ஹரியை நீங்களும் அதே கிருதிகளால், ராகங்களால், பக்தியால், ஹ்ருதய பாவத்தால்

பாடிப்பாருங்கள், ஸ்ரீ ஹரி என்ன அழகு, என்ன மகிழ்ச்சி கொண்டு காட்சியளிக்கிறான் என்பதை அறிந்து கொள்வீர்கள்.

ஹரியின் குணங்களைப்பாட நான் யார்? என்ன தகுதி? என்று நினைக்காதீர்கள். நீர் பாடினதை நாங்கள் பாடவேண்டுமா? நாங்களே அதைவிடச் சிறப்பாகப்பாடக் கூடியவர்கள் ஆயிற்றே! என்று சொல்லிக்கொண்டு இருக்காதீர்கள். உங்களுக்கும் அந்தப் பெருமையை ஸ்ரீ ஹரி கொடுப்பான். என் வார்த்தைகளில் அமிருதத்தன்மையை அவன்தானே கொடுத்தான். வேத, வேதாந்தங்கள், உபநிஷத்துக்கள், சாஸ்திரங்கள், ஆறு சமயங்கள், புராணங்கள், இவைகள் யாவும் பகவானின் அருளால் தானே வெளிவந்தன. அந்தத் திருவருள் எனக்கும் கிடைக்கச்செய்து என்னைப்பாட வைத்துள்ளான். பரமயோகிகள் பாடினால் அவர்கள் இதில் முக்தி இன்பத்தைக் காண்பார்கள். பாகவதர்கள் ஒன்றுகூடி பக்தி கலையாமல் பாடக் கூடியது. எனக்கு யோகியின் நிலையையும், பக்தனின் நிலையையும் பாடும்பொழுது கிடைத்ததால்தான் அதை உங்களுக்கும் சொல்லுகிறேன். என்னைக் கடைத்தேறச் செய்தவன் அப்பெருமான். என்னைக் காப்பாற்றினவன் அப்பெருமான். எனக்கு சந்தோஷம் உண்டுபண்ணி, தான் அதனால் சந்தோஷம் அடைந்தவன் அப்பெருமான். என்னைப் பாடவைத்து, என் பக்தி பாவங்களையே ரத்தின மாலையாக ஏற்றுச் சூடிக்கொண்டு எனக்கும், யாவர்க்கும் பெருமைப்படக் காட்சி யளிக்கிறான். என் கிருதிகள் அவன் அளித்தவை. அவனை அடைய, அவனே அருள் செய்தவை. அவனிடம் நாம் போவோம் வாருங்கள்! எல்லா பாக்யங்களையும் பெறுவோம் வாருங்கள்!!

# ஸ்ரீ ராமாவதாரம்.

ஸ்ரீ ராமாவதாரம் விஷ்ணுவின் அவதாரங்களில் ஒன்று என நாம் அறிவோம். மற்றும், ஸ்ரீ ராமன் சிவஸ்வரூபி, என்பவரும்; ஸ்ரீ ராமனாக ஈச்வரியும், ஸீதையாக ஈச்வரனும் வந்துதித்தனர் என்பவரும் உண்டு. இன்னும் 'ராம' தாரக மந்த்ர ஸ்வரூபி இவரே என்று ஜபிப்பவரும், ராமனை உத்தம மனுஷ்யனாகக் கொண்டாடுபவரும், பற்பலவிதமாக ஸ்ரீ ராம பக்தியை வளர்க்கின்றனர். இங்கு ஒரு ஸாது, ராம பக்தியில் திளைத்தவர், 'ராமா! நீ யார்?' என்று ராமனையேக் கேட்டு அதற்கு விடையும் அவன் முன்னிலையில் ஸமர்ப்பித்தார்.

ராகம்–தர்பார்] [தாளம்–த்ரிபுட.

பல்லவி

எந்துண்டி வெடலிதிவோ, ஏ ஊரோ நே தெலிய,
இபுடைன தெலுபவைய (ஸ்ரீ ராம)— (எங்)

அனுபல்லவி

அந்த சந்தமு வேறே நடதலெல்ல த்ரிகு
ணாதீ தமை யுன்னதே கானி ஸ்ரீ ராமா நீவு— (எங்)

சரணம்

1 சிடுகண்டென பராத சய முல தகிலிஞ்சே
சிவலோக மு காது

2 வடுருபுடை பலினி வஞ்சிஞ்சி யணத் ஸ்வானி
வைகுண்ட மு காது

3 விடவசன மூலாடி சிரமு த்ரும்ப பட்ட
விதிலோக மு காது

4 திடவு தர்மமு ஸத்யமு ம்ருது பாஷலு கல்கு
திவ்யரூப த்யாக ராஜவிநுத நீவு— (எங்)

பொருள்:— பல்லவி: ஸ்ரீ ராம! நீ எங்கிருந்து வந்தாயோ? உனக்கு எந்த ஊரோ? எனக்குத் தெரியவில்லை. இப்பொழுதாவது தெரிவிக்க வேண்டும் ஐயா!

அனுபல்லவி: சிருங்காரம் நிறைந்த உன் அழகு ஒருபக்கம் இருக்கட்டும், உன் காரியங்களைக் கவனிக்கும் பொழுது அவைகளெல்லாம் மூன்று குணங்களுக்கும் அப்பாற்பட்டதாக இருக்கிறதே! (அதனால் நீர் யார்? எந்த ஊர்? என்று தெரியவில்லை.)

சரணம்: 1. ஒரு சிறு பொழுதுக்குள் அபராதங்கள் வந்து விடுமோ என்று பயப்படும் சிவலோகத்தைச் சேர்ந்தவரல்ல.

2. மாணவ வடிவத்தில் (வாமனனாக வந்து) மஹாபலியை ஏமாற்றி அடக்கிய விஷ்ணு வஸிக்கும் வைகுண்டமும் உம்மிருப்பிடம் அல்ல.

3. பொய்ச்சொல்லி தலை அறுபட்ட ப்ரும்மா வஸிக்கும் ஸத்ய லோகமும் (நிச்சயமாக) உம்மிருப்பிடமில்லை. அபராதம் பண்ணினவர்களுக்கு மன்னிப்பே அளித்திருக்கிறாய். அதை நினைக்கவும் மாட்டாய். உபகாரமே செய்திருக்கிறாய். ஏமாற்றுகிற பேச்சு உன்னிடம் காணவில்லை. ஒரே சொல், ஒரே பாணம், ஒரே பத்னி, கபட நாடகம் உனக்குத்தெரியாது. (ஸத்யமே உருவான

உன் உறுதிமொழிகளை) உன் தம்பி பரதனுக்கு சித்ர கூடத்தில் நீர் செய்த உபதேசம் கேட்டுளேன்.

4. தைர்யம், தர்மம், ஸத்யம், இனிய பேச்சு இவை களெல்லாம் திவ்ய ரூபத்துடன் ராமனென்று வந்தது என்கிறேன். சரிதானா! தெரிவிக்கவேண்டும் ஐயா!

கருத்து :— முக்குணங்களுக்கு அப்பாற்பட்ட, மும் மூர்த்திகளுக்கும் மேலான பரப்ரும்மமே, தர்மம், ஸத்யம் இவைகளைக் கடைப்பிடித்துக் காட்ட, தைர்யம், வீர்யம், சௌர்யம், கருணை இவைகளுடன் மதுரமான மொழியிலும் இயல்புடன் அழகு நிறைந்த வடிவமுடன் தனிப்பெருமைகொண்ட 'ராமன்' என்று தேன் இனிக் கும் பெயருடன் அவதரித்ததாம்.



# அவதார தத்துவம்.

ஸ்ரீ ராமபிரானுடைய அவதார தினத்தை நாடெங் கும் கொண்டாடுகிறது. 'ராம்' எனும் திவ்ய நாமம் எல்லோருடைய செவியிலும், மனத்திலும் நிலை பெற்று வருகிறது. அந்தப் பரமனின் திரு அவதாரத்தையும், திவ்ய சரிதமாகிய ஸ்ரீமத் ராமாயண காவியத்தையும் படித்தும் கேட்டும் பேரின்பம் அடைகிறோம். ஸ்ரீ ராம பிரானின் அவதார தத்துவத்தை சுருக்கமாக, நம் மனதில் பதிய வைக்கும்படி கீழ்க்கண்ட கீர்த்தனம் அமைந்துளது.

ராகம்—ஹரிகாம்போதி]                    [தாளம்—ரூபகம்.

### பல்லவி

உண்டேதி ராமுடொகடு
ஊரக செடி போகு மனஸா— (உ)

### அனுபல்லவி

சண்ட மார்த்தாண்ட மத்ய
மண்டலமுனனு செலங்குசு— (உ)

### சரணம்

தாமஸாதி குண ரஹிதுடு
தர்மாத்முடு ஸர்வ ஸமுடு
க்ஷேமகருடு தியாகராஜ
சித்த ஹிதுடு ஜகமுனிண்டி— (உ)

பொருள் :— பல்லவி: *ராமன் என்ற பெயர் கொண்ட ஒருவன் இருக்கையில் வீணாக அலைந்திருக்க வேண்டாம் மனமே.*

அனுபல்லவி: *பிரகாசமான ஸூர்ய மண்டலத்தின் மத்தியில் விளங்கும் சைதன்ய ஸ்வரூபியான பரபிரும்மமே ஸ்ரீ ராமன். (பிரசித்தமான ஸூர்ய வம்சத்தின் மத்தியில், அந்த வம்சத்தை விளங்கச் செய்பவன் எங்கள் ஸ்ரீ ராமன்.)*

சரணம்: *தாமஸ குணங்கள் அற்ற சுத்த ஸத்வ குண ஸம்பன். தர்மமும், ஸத்யமும், அடக்கமும் அவனுடைய ஆத்மா. எல்லாம் தனக்குள் அடங்கக் கண்ட*

ஆத்ம ஞானி. உலகில் யாவர்க்கும் சுகவாழ்வு அளிப்பவன். தன்னை என்றென்றும் நினைப்பவர்களுக்கு (ஸ்ரீ தியாகராஜர் போன்றவர்களுக்கு) எப்பொழுதும் ஹிதமே (நன்மையே) செய்பவன்.

கருத்து : இந்த எளிய கீர்த்தனத்தின் சரணத்தில் அவதார புருஷனை ஸ்ரீ ராமனையும், ஸர்வ சைதன்ய ஸ்வரூபியான ப்ரும்மத்தையும் சேர்த்துக் காட்டியிருக்கிறார். தர்மமும் ஸத்யமும் முடிவில் ஆனந்தத்தில் நிலை பெறும். அவ்வானந்தமே பிரும்மத்தின் இயல்பு. அந்த ப்ரும்மமே தேஜோமண்டலத்தின் சைதன்யமாக விளங்குகிறது. அந்த சைதன்ய சக்தியே, உலகத்தின் க்ஷேமாபி விருத்திக்கு அவசியமாகும்.

நிதமும் ஸந்த்யோபாஸனை செய்யும் தியாகராஜ ஸ்வாமிகளுக்கு, அந்த ஸந்த்யோபாஸனையிலும், ஸ்ரீ தாரக ப்ரும்மமான தன் இஷ்ட தெய்வத்தைக் கண்டு ஆனந்திக்கிறார்.



# ஸத்ய வ்ரதன்

ஸூர்ய மண்டலத்தின் மத்தியில் விளங்கும் பரமாத்மாவின் ஸ்வரூபமே ஸ்ரீ ராமனாக அவதரித்தது என்பதை முன்வந்துள்ள கீர்த்தனத்தில் கண்டோம். ஸத்ய தர்மானுஷ்டானம் இவைகளைத் தானே கடைபிடித்து எல்லோர்க்கும் க்ஷேமத்தைச் செய்த ஸ்ரீ ராமனின் திரு அவதாரத்தை முன்கண்ட கீர்த்தனத்தில் விளக்கியுள்ளார். "தர்மாத்முடு ஸர்வசமுடு" என்பதனுல், தர்மஸ்வரூபியான பரமன், எல்லாவற்றையும்

தன்னுள் அடக்கியவன். தானும் அடங்கியவன். ஜிதேந்த்ரியன் என்பதைக் குறிப்பிட்டுள்ளார்.

கீழ்க்கண்ட கீர்த்தனத்தில் அந்த தர்மானுஷ்டானம் எதை அனுசரித்து முக்யத்வம் பெற்றுள்ளது என்பதைக்காட்டி, ஸ்ரீ ராமபிரானின் கல்யாண குணங்களின் மிகச் சிறந்த அம்சங்களைப் பாடித்துதிக்கிறார்.

ராகம்–ஹரிகாம்போதி] [தாளம்–ரூபகம்.

பல்லவி

ஒகமாட ஒக பாணமு
ஒகபத்னீ வ்ரதுடே மனஸா — (ஒ)

அனுபல்லவி

ஒக சித்தமு கலவாடே
ஒக நாடுனு மறவகுவே — (ஒ)

சரணம்

சிரஜீவித்வமு நிர்ஜர வர
ஸௌக்ய மொஸங்குனே
த'ர பரகெடி தேவுடே
தியாகராஜ வினுதுடே — (ஒ)

பொருள் :– பல்லவி, அநுபல்லவி : ஏ மனமே! *ஒரே வார்த்தை, ஒரே பாணம், ஒரே பத்னீ இவைகளை விரதமாகக்கொண்டவன் ஸ்ரீ ராமச்சந்த்ரமூர்த்தி அன்றோ! (மாறுபடாத) ஒரே சித்தம் கொண்டவன். இவனை ஒரு நாளும் மறக்காதே (ஏ மனமே!)*

சரணம்: வெகு காலம், மூப்பில்லாத சுக வாழ்வை அளிப்பவனுன ஸ்ரீ ராமன், இப்புவியில் யாரும் நன்கறிந்த தெய்வமே.

கருத்து: 'ஒகமாட' என்பதால் ஸத்யமும், 'ஒக பாணமு' என்பதால் மஹா பௌருஷமும், 'ஒக பத்னீ' என்பதால் ஜிதேந்திரியத்வமும் 'ஒக சித்தமு' என்பதால் சரணுகதவத்ஸலனின் 'ஆந்ருசம்ஸ்யம்' என்ற காருண்யமும் சொல்லப்பட்டது.

மூப்பற்ற வெகுகால ஸுக வாழ்வு என்பது ஸ்வர்க்க போகம். இம்மையில் சுகம் என்பதும் அதனுள் அடக்கம்.



# ஸ்ரீ ராமாவதார காரணம்.

## அவதாரிகை.

முன்பு வந்துள்ள இரு கீர்த்தனங்களிலும், ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் ஸ்ரீ ராம பரப்ரும்மத்தின் நிஷ்கல, ஸகல ஸ்வரூப தத்துவத்தை மனத்தில் கண்டு கொண்டு போற்றி மகிழ்ந்தார். இப்பொழுது அக் கருணைவடிவின் அவதார ப்ரயோசனத்தை, உலகனைத்தும் உய்யத் தோன்றின அதிசயத்தை, பக்திப் பெருக்கினுல் அந்த ப்ரபுவையே அணுகி அந்தரங்கமாக விசாரிக்கிருர். இந்த கீர்த்தனத்தின் ராக பாவ அமைப்பை நோக்கும்பொழுது ஸ்ரீ ஸ்வாமிகளின் உள் நோக்கு ஒன்று புலப்படுகிறது. வேதங்களாலும் விளக்க இயலாத ஓர் தனி முதல்வன், ஸ்ரீ ராமனுக அவதாரம் பண்ண வந்த காரண காரியங்களை, புத்தி வ்யூஹங்களாலும், பாண்டித்யத்தாலும் தலைக்கட்ட

முற்படுவது என்னே பேதமை? அவனன்றி இதன் கருத்தை அறிந்தவர் யாருமிலர் என்ற த்வனி ஏற்பட இக்கீர்த்தனத்தின் இசையும் பொருளும் அமைந்திருக் கிறது.

ராகம்–முகாரி] [தாளம்–ஆதி

பல்லவி

ஏலாவதார மெத்து கொண்டிவோ
ஏமி காரணமோ ஸ்ரீ ராமுடை — (ஏ)

அனுபல்லவி

ஆலமே புடகா அயோத்யா
பாலனசேஸே டெந்துகா ஸ்ரீ ராமா — (ஏ)

சரணம்

யோகுல ப்ரோசே டந்துகா பவ
ரோகுல ப்ரோசே டந்துகா சத
ராக ரத்ன மாலிகனு ரசிஞ்சின
தியாக ராஜு‾னிகி வரமொஸ குடகா — (ஏ)

பொருள் :— பல்லவி: *ஸ்ரீ ராமா! நீ எதற்காக ஸ்ரீ ராமன் என்ற இந்த அவதாரம் எடுத்து வந்தாய்? என்ன காரணமோ—*

அனுபல்லவி: *பசுக்களை மேய்க்கவா? அயோத்தி யில் இருந்து அரச பரிபாலனம் செய்யவா?*

*சரணம்: யோகிகளைப் பராமரிப்பதற்காகவா? பிறவி எடுத்துத் துன்புற்றலையும் மூட சேதனர்களைக் கரை சேர்க்கவா? (இவை யாவரும் அறிந்த நியாயம்). இந்த*

தியாகராஜன் நூற்றுக்கணக்கான ராகங்களால் (அன்பி னலும்) ரத்ன மாலைகள் தொடுத்துப் போடுவதை அணிந்து அருள் செய்து அவன் புத்தியை உருக்கி ஏற்றுக்கொண்ட ஓர் தெய்வமாகத் திகழவா? "ஆலமு ஸேயுடகா — என்று ஒரு பாடம் உண்டு. அதாவது யுத்தம் செய்வதற்காகவா, என்று பொருள். அதேபோல், யோகுலனு ஜூசுடகா என்று யோகிகளை தரிசிப்பதற் காகவா" ஒரு பாடம். ஸ்ரீ ஸ்வாமிகள் தனது ஸ்வானுபவ தசையில் பாடினதை என்ன அவருடைய கருத்து என்ப தில் நாம் எளிதில் அறிய முடியாது.



## ஸ்ரீ ராமன் அளித்த சுகம்.

ஸ்ரீ ராமபிரான் அவதரித்ததற்கு உகந்த காரணம் ஒன்று முன்வந்த கீர்த்தனத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் காட்டி னுர். "ஸ்ரீ ராமா! நீர் அவதரித்தது என் போன்றவர் களுக்காகவே. நீர் அவதரிக்காவிடில் இந்த தியாகராஜ னுக்கு ஏது கதி? உம்முடைய ஸச்சரித்ரம் உலகில் கேட்கப்படாவிடில் என் மனம் மெய் மொழிகளுக்கு இன்பத் தேனூறும் இனிய கீதம் ஏது? கீதப் பொருள் ஏது? உன்னை விட்டுப் பிரிய முடிகிறதா? இது எனக்கு மட்டுமா — உலகில் எத்தனை எத்தனை பிறவி களில் தோன்றியவர்களுக்கும் உன்னைக் கண்டு கொண்ட மாத்திரத்தில் திகட்டாத திவ்ய அம்ருத ரஸத்திலன்றோ ஆழ்த்திவிடுகிறீர்! உம்மைத் தனியே இருக்க யாரும் விடப்போவதில்லை. அன்றும் இல்லை, அது இன்றும் இல்லை. அரசன் என்றாலே, அவனுக் குத் தனிமை பறிபோய்விட்டது. நீர் ப்ரும்மம். அரச ளுக வந்தீர். உம்முடைய தனிமையும் இனி எங்கே? உம்மைப் பார்க்கிறபொழுது சுற்றம் சூழ நின்று காட்சி அளிக்கிறீர். ஒரு பக்கம் என் தாயார் ஸீதையம்மை

உம்மை நினைந்த வண்ணம் கடைக்கண் பார்வையால் கனிவு காட்டுகிருள். அருகே தம்பிகளும், கீழே ஆஞ்சநேயனும், இவர்கள் உம்மைச் சிறிதும் தனியாக விடமாட்டார்களா? ஏன் விடுவார்கள்? காரணம் இல்லாமலா உம்மைச் சூழ்ந்து கொண்டிருக்கிருர்கள்?''

ராகம்—அஸாவேரி] [தாளம்—ஆதி.

பல்லவி

லேகனு நின்னு ஜூட்டு கொன்னரு
ஏக ஹ்ருதயுலை நித்யானந்தமு— (லே)

அனுபல்லவி

ஸ்ரீகர கருணா ஸாகர நிருபம
சின்மயாச்ரித சிந்தாமணி நீ ஏட— (லே)

சரணம்

1. ஸௌந்தர்யமுலலோ ஸூகமு ஸீதம்மகு
ஸௌமித்ரிகி கனுல ஜாடலோ ஸூகமு— (லே)

2. ஸூந்தர முகமுன ஸூகமு பரதுனிகி
ஸூஞான ரூபமுன ஸூகமு ரிபுக்னுநிகி— (லே)

3. சரணயுகமுனந்து ஸூகமு ஆஞ்ஜனேயுனிகி
வரகுண த்யாகராஜ வரதானந்தமு— (லே)

பொருள் :— பல்லவி; காரணம் இல்லாமலா உன்னை இவர்கள் சூழ்ந்து கொண்டிருக்கிருர்கள். ஒரே விதமான (ஏகரஸம்) நித்யானந்தம் அல்லவா அவர்களுக்குக் கிடைத்துக்கொண்டிருக்கிறது.

சாதாரணமாக உலகில் ஒருவன் மற்றொருவனைச் சுற்றிக்கொண்டிருந்தால் அவனிடம் ஏதோ பொருளோ, பயனோ பெறத்தான் என்று நாம் நினைக்கிறோம். நீரோ—

அனுபல்லவி : ஸ்ரீகர ! லக்ஷ்மியுடன் கூடினவர். செல்வச் சீமான். (செல்வச் சீமானா? லக்ஷ்மியான அரசையும், லக்ஷ்மியான என் தாயையும் விட்டுப் பிரிந்தீரே) கருணாஸாகர—கருணைக்கடல் அல்லவா நீர் ! (கருணைக் கடல் என்றால், பரதனைக் கதறவைத்தீர், லக்ஷ்மணனுக்குப் பரீக்ஷைகள் வைத்தீர். சத்ருக்கனனுடன் ஒரு வார்த்தை தான் பேசியிருப்பீரா? ஸுக்ரீவனைப் பலதரம் கலங்க வைத்தீர். வாலியை மறைந்து அடித்தீர். சூர்ப்பனகை என்ற மூட ராக்ஷஸியை சின்னாபின்னமாக்கினீர். ராக்ஷஸர்கள் அத்தனை பேரையும் மலைமலையாகக் கொன்று குவித்தீர். பிறகு என் தாயாரை தனியேவிட்டுப் பொருத்திருந்தீர். இன்னும் உம்மை தயாநிதி என்கிறார்களோ ?)

நிருபம சின்மய—காரணம் தெரிகிறது. நீர் பெரிய ஞானி ஐயா! ஒப்புயர்வில்லாத ஞானி ஐயா நீர். இருந்தாலும் உம்மை விடாது பிடித்துக்கொள்ள வைப்பது உம்மிடம் உள்ள வசீகரம். நீர் ஆச்ரித சிந்தாமணி. தன்னை வந்து அடைந்தவர்களுக்கு அவர்கள் அறியாமலே அபீஷ்டங்களை ஈடேற்றி வைக்கும் தன்மை உம்மிடம் இருக்கிறது. அது தெரியாமலா எல்லோரும் உம்மைச் சுற்றிக்கொண்டிருக்கிறார்கள்.

சரணம் : 1. என் அன்னை ஜானகி உம்மிடம் என்ன கேட்டாள் ? எதுவும் அவளுக்குத் தேவையில்லை. நிகரற்ற உமது திவ்யத் திருமேனியைத் தனக்கு என்றே உரிமையுடன் அடைந்தவள். அதில் நித்யானந்த ஸுகத்தைக் காண்கிறாள்.

ஸௌமித்ரை என்ற ஞானியான தாய்க்குப் பிறந்த லக்ஷ்மணன் தன் வாழ்நாளில் ஸ்ரீராகவன் திருத்தொண்டு ஒன்று தவிர வேறேதும் உய்யும் வகையில்லை என்று உறுதிகொண்டு எந்த சமயமும் உமது கடைக்கண் பார்வையில் இடும் கட்டளைக்கு சிரம் சாய்த்துக் கொண்டிருக்கிறான். அவனுக்கு உம்முடைய ஸேவா கைங்கர்யத்தில் நித்யானந்த ஸௌகம் லயிக்கிறது. இல்லையா?

2. உம்முடைய திருமுகதரிசனம் தனக்குக்கிடைத்தாலன்றி அன்னபானம் அருந்தாமல் அல்லும் பகலும் தவம் கிடந்த இந்த பரதன் என்ற உமது தம்பி, உம்மைப் பதினான்கு வருஷத்தின் முடிவில் அயோத்தியில் நீர் ப்ரவேசிக்கக் கண்டதும், அவனடைந்த ஸௌகம் நிருபம நித்யானந்த ஸௌகமல்லவா! அடுத்த தம்பி சத்ருக்னன். அவனை அறியப்போவதே கடினம். அவனுக்குப் பெயர் வைத்தார்களே! என்ன நினைத்து 'சத்ருக்னன்' சத்ருக்களை வதம் செய்பவன் என்று நாமகரணம் இட்டார்கள்? இவன் எந்த சத்ருவோடு யுத்தம் பண்ணினன்? உமக்கல்லவோ, அல்லது லக்ஷ்மணனுக்காவது அந்தப் பெயர் சூட்டியிருக்கலாம்.

இந்தப் பிள்ளை, பரதன் பின்னேயே போனன், வந்தான், இருந்தான், படுத்தான். பரதன் தன் மாமா வீடு போனன். இவனும் அவன் பின்னே சென்றான். இவனை சத்ருக்னன் என்றார்களே! ஆனல் இவன் செய்த காரியத்தை மற்றவர்கள் யாரும் செய்யத் துணியவில்லை இயலவும் இயலாது. உலகமெல்லாம் "ராமா ராமா" என்று உமது திருமுகத்தைக் காண நிற்க, இவன் பரதன் பால் பட்டது விசித்திரம். இவனை நீர் இழுக்கவில்லையா? அல்லது இவன்தான் உம்முடைய கவர்ச்சியைத் தனக்கு இடையூராக நினைத்து, அதை ஜயித்து, பரதனுக்கே ஊழியக்காரனனை?

அதுவும் சரி, இவனும் அந்த ஞானியான ஸௌமித்ரை பெற்ற ஒரு பிள்ளைதானே, ஸ்ரீ ராமா! இவன் உம்மைப் பாராமல் பரதனைப் பார்த்தான் -என்பது சரியல்ல. உம்மைப் பரதனிடம் பார்த்தான் உம்மிடத்தில் பரதனைப் பார்த்தான். இது ஞானியினுடையவும், உத்தம பக்தனுடையவும் லக்ஷணமாகும் அந்த அனுபவத்தால் இவனும் உம்மைச் சுற்றிக்கொண்டு நிற்கிறான். நீர் இருந்த இடத்தில் பரதன் இருக்கிறான். பரதன் இருந்த இடத்தில் இவனும் இருக்கவேண்டியவனாகிறான். பூரண திருப்தி இவனுக்கு.

3. யாரைவிட்டாலும் விடுவீர். இந்த ஆஞ்ஜனேயனை விடமாட்டீர். ஏன் தெரியுமா? இவன்தான் உம்முடைய காலைப்பிடித்துக்கொண்டு விட்டானே! அவன் விட்டால் அல்லவோ, அவனை நீர் விட்டுப் புறப்படுவதற்கு! இந்த ஆஞ்ஜனேயனுக்கும் தகுந்த பரிசு அளிக்க வேண்டும் என்று நீரும், ஸீதாதேவியும் அடிக்கடி நினைத்தீர்கள். சொல்லவும் சொன்னீர்கள். கொடுத்தீர்களா? இவரோ பிறவியில் வானரம். அதற்கேற்ப பிரபு தானாகக்கொடுக்காததை, தனக்குப்பிடித்தமானதைத்தானே தட்டிப்பறித்து எதிரிலேயே அனுபவிக்கிறவர் அல்லவா? அதிலும் மஹா புத்திமானான வானரம் எதுவும் ஈடாகாத உம்முடைய பாதஸேவையைத்தானே தேடிக்கொண்டு ஸுகத்தில் ஆழ்ந்துவிட்டார். இத்தனை சொன்னேனே ஸ்ரீராகவா! எனக்கென்ன கிடைத்தது என்பாயோ? இத்தனை பேரும் உம்மை விடாமல் அருகிலிருந்து ஸேவிக்கும் பெருமைகளையும், அவர்களுக்கும் நீர் அருள்பாலிக்கும் வைபவத்தையும் பாடப் பிறந்தேனே, என் பாக்யம் எவருக்குண்டு ராமா! இந்த நித்யானந்த அனுபவம் இல்லாமலா உன்னை உலகம் என்றென்றும் நினைத்துக்கொண்டிருக்கிறது?

ஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன ஹனுமத் ஸமேத ஸ்ரீ ராமச்சந்திரனை எவ்வாறு ஸ்வாமிகள் பக்தி மணம்

கமழ இக்கீர்த்தனத்தின் மூலம் எதிரே வைத்து பூஜித்து விட்டார். அதுவும் ஸ்ரீ ராகவன் அவருக்கு அளித்த கலனே.



## துராசை.

பகவானை வழிபடும் விதங்கள் எத்தனையோ! அதைக் கடைபிடித்தவர்கள் சென்ற கடினப்பாதைகள் எத்தனையோ? அதில் கைவல்யம் கண்டு நிறைந்தவர்கள் எத்தனையோ பேர்! நமக்கோ காலமும் தேசமும் கார்யமும் எங்கெங்கோ இழுத்துச் செல்லுகையில் எதையும் செவ்வையாகச் செய்ய முடியாத நிலையில் இம்மையில் சுகவாழ்வு கிடைப்பதே முக்கியமாகக் கொண்டிருக்கும் நமக்கு எந்த பாதை உகந்ததோ அதையும் அறியோம். அறிந்தாலும் அதைப் பின்பற்றிப் பலன் அடையும் தகுதியும் அற்றுவிட்டோம். செய்யத் துணியும் சிறிய நற்கருமங்களிலும் பெரும்பலனைக் காணாத காலத்து மனமொடிந்து பெரும் ஏமாற்றத்தால் சிதைவுண்டு, நிலை தவறி நிற்கிறோம். நமக்கு ஓர் உபதேசமான இந்தக் கீர்த்தனத்தைப் பாடி மகிழ்வோம்.

ராகம்–சக்ரவாகம்] [தாளம்–ரூபகம்.

### பல்லவி

ஸுகுண முலே ஜெப்பு கொண்டி
ஸுந்தர ரகு ராமா — (ஸு)

### அனுபல்லவி

வகலெறுங்க லேகயிடு
வத்து வநுசு துராஸசே — (ஸு)

சரணம்

ஸ்நாநாதி ஸுகர்மம் புலு
தாநாத் யயனம் புலெறுக
ஸ்ரீ நாயக க்ஷமியிஞ சுமு
ஸ்ரீ தியாக ராஜ நுத — (ஸு)

பொருள் :— பல்லவி: ஸுந்தர ரகுராமா-அழகுள்ள ரகுராமா! ஸுகுண முலே ஜெப்பு கொண்டின்-உன் உயர்ந்த குணங்களையே சொல்லிக்கொண்டிருக்கிறேன்.

அனுபல்லவி : வகலெறுங்க லேக-உன்னிடத்தில் உபாஸித்து அடையும் வழிகளை அறியாதவன் நான். (ஆனால் நீ மாத்திரம்) இடு வத்து அனுசன்-என்னை நோக்கி இங்கு வருவாய் என்று, துராஸசே — தவறான (பொருந்தாத) ஆசையினால் (உன்னைப் பாடிக்கொண்டிருக்கிறேனா?)

சரணம் : ஸ்னானாதி கர்மம் புலு—ஸ்னானம் முதலிய கர்மாக்களுள், தானாத்யயனம் புலு — தானம், வேதாத்யயனம் முதலிய (எனக்கு வர்ணாச்ரம தர்மங்களில் விதிக்கப்பட்ட உயர்ந்த கருமங்களை); எறுகன் - ஒருக்காலும் பெற்றவன் அல்லன் நான். இதனால் ஸ்வாமி! நீர் கோபிக்க வேண்டாம்; ஸ்ரீ தியாகராஜ நுத— இந்த தியாகராஜனால் (எப்பொழுதும்) துதிக்கப்படுகிறவரே; ஸ்ரீ நாயகா - லக்ஷ்மிகாந்தனே; க்ஷமியிஞ்சுமு — க்ஷமிக்க வேண்டுகிறேன்.

உம்முடைய திவ்யானுக்ரஹத்திற்கு ஸாதனமாகத்தான் எல்லாக் கர்மாக்களும் உம்மாலேயே விதிக்கப்பட்டிருக்கிறது. அவைகளில் சிறைவு இருந்தாலும், குறைவு

கண்டாலும் நீரே உம்மை நினைப்பவர் பொருட்டு, தயவு காட்டி ஸம்பூர்ணமாக்கிக் கொடுப்பவர். உம்மை நினைக்கிறது ஒன்றையே விரும்பித் தெரிந்து விடாது பற்றி நின்றவர்களுக்கு, மற்ற கருமாக்கள் எது செய்யினும் செய்யாதிருப்பினும் அவர்கள் கொண்ட பற்றுதல் உம்மிடமே சேர்த்துவிடும் என்பதை அறிவேன். பல கோடி வருஷங்கள் கர்மாக்களிலும், தவ நெறியிலும் நிலைபெற்றவர்களும், இடையே நேர்ந்த சிறிது தோஷங்களுக்கு உட்பட்டு அதனால் வினையின் பயனை அடைகிறார்கள். ஆனால் உம்மை அவர்களால் கண்டுகொள்வது என்பது துர்லபமாக இருக்கிறது என்பதை உம்முடைய சரித்திரங்களையும், லீலைகளையும் பாடியும் கேட்டும் அறிந்தேன். ஆனால் தவநெறியில் முற்றுப் பெறாதவர்கள், வர்ணாச்ரம தர்மங்களில் குறைவுபட்டவர்கள், சாஸ்திர வரையறையினின்று தவறினவர்களும், உம்மையே பற்றுக்கோளாகக் கொண்டவர்கள், பாலர்களாயினும் அவர்கள்பால் நீரே விரைந்து செல்கிறீர் என்பதையும் உம்முடைய குணமாக உம்முடைய சரிதங்களில் பாடியும் கேட்டும் அறிந்தேன். ஆதலின் இது என்ன, என் பேராசையா? —வாஸ்தவம் மற்றவர்கள் நினைக்க முடியாத ஆசைதான்— இதில் எனக்கு ஸுக வாழ்வோ பொருள் பற்றியோ நான் கேட்டேனா? ஸ்ரீ நாயகன் என்ற செல்வத்தின் தெய்வமான தங்களை நானாக அணுக இயலாதவன். தாங்கள் என்னை அணுகி வந்து அருள் செய்வது உமக்கு அரிதல்லவே! இதுவே உம்முடைய "ஸுகுணம்." இதையே சொல்லிக்கொண்டிருக்கிறேன். வேறொன்றையும் நினைத்தவன் இல்லை. அருள்புரியும்.

ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகள் தான் ஜீவித்திருந்தகாலம் முழுவதிலும், வர்ணாச்ரம தர்மங்கள் சாஸ்திர நியமங்கள் தவறினவர் அல்லர். தன்னால் இயன்றவரை அனுஷ்டானங்களுடன் சிலமும் குறையாதவர். அவைகளுக்கு

இடையே அனவ்ரதமும் பகவத் குண கீர்த்தனம் செய்து வந்தவர். அவரையே பகவான் அணுகி, தன் திவ்ய தரிசனம் அளித்தார் என்பதற்கு இதைவிட சாஸ்த்ர ப்ரமாணம் வேறு என்ன வேண்டும்?



## யாருக்கு உபதேசம்

"நம்முடைய வேதங்களின் தாத்பர்யங்களையோ, வேதாந்தம் முதலிய சாஸ்திரங்களையோ, அவைகளின் உள்ளடங்கிய அரிய கருத்துக்களையோ, எல்லோருக்கும் சரிசமமாக உபதேசிக்கும் அனுமதி நம்முடைய முன்னோர்களுக்கு இருந்ததில்லை. அதன் விளைவினால் நம்முடைய மதத்தின் மேன்மை நன்கு விளங்காமலே போய்விட்டது" என்று இப்பொழுது பலரும் வருந்துகிறார்கள். "பிற நாட்டவர்களும், மற்றவர்களும் துணிந்து, அவைகளைத் தாமே படித்துத் தம்முடைய மேதையால், தாம் தாம் அறிந்த வகையில் அவைகளுக்கு விளக்கங்கள் கூறிப் பல புஸ்தகங்களும் எழுதி நமக்கு உதவியிருக்கின்றனர். இவர்களின் உபகாரத்தால் நாமும் ஏதோ நம்முடைய மதத்தைப்பற்றி சிறிதளவாவது தெரிந்து கொள்ள முடிகிறது" என்றும் நினைக்கிறார்கள். ஆனாலும் பரம்பரை பரம்பரையாக வந்து, குரு சிஷ்ய கிரமத்தில் உதிர்ந்தவேதத்தின் உட்பொருள்கள் இன்னும் சிலருக்கே உரித்தாகி, புதைப்பொருள்களாகவே போய்விட்டன எனவும் வருந்துகின்றனர். இதன் நன்மை தீமைகளைப்பற்றி ஆராய்வதை விடுத்து சாஸ்திரக்கோட்பாடுகளுடன் அவைகளுக்கு ஸமாதானம் சொல்வதையும் தவிர்த்து, ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகளின் இந்த கீர்த்தனத்தில் லயித்து, அவருடைய அபிப்பிராயத்தில் கலந்துகொண்டு பார்ப்போம்.

ராகம்—குந்தலவராளி] [தாளம்—ஆதி.

பல்லவி

கலிநருலகு மஹிமலு தெலிபேமி
பலமன லேதா — (க)

அனுபல்லவி

இலனு வெலயு வர விருஷ ராஜுலகடு
லருசி தெலியு சந்தமுகா நீ— (க)

சரணம்

தாரஸுதுலகை தனமுலகை ஊரு
பேருலகை பஹு பெத்த தனமுகை
ஸாரெகு பக்த வேஷமு கொனுவாரிகி
தாரக நாம ஸ்ரீ தியாகராஜார்ச்சித — (க)

பொருள் : பல்லவி : இந்தக் கலியுகத்து மனிதர்களுக்கு ஈச்வரனின் மஹிமைகளைச் சொல்லி என்ன பயன் என்று சொல்லவில்லையா ?

அநுபல்லவி: இங்கே திரிந்துகொண்டிருக்கும் உயர்ந்த காளை மாட்டிற்கு அவல் (அதுபோன்ற நன்கு பாகம் பண்ணப்பட்டவஸ்துக்களின்) ருசியை அறிவிப்பது போலல்லவோ இருக்கிறது.

சரணம் : மனைவி, மக்களுக்காகவும் பொருள் தேடுவதிலும் ஊர், பெயர் (பதவி, புகழ்) இவைகளைக் குறித்தும் பெரும் செல்வத்தை நாடியும், இதற்கிடையில் பக்தனைப்போல் (கபடமாக ஈச்வர தத்வ விசாரத்தில் ஈடுபட்ட) வேஷம் போடுகிறவர்களுக்கு பிறவிக் கடலிலிருந்து கைதூக்கிக் காப்பாற்றும் பரிசுத்தத் திருநாமம் உடைய ஸ்ரீ ராமா! உன்னைத் துதித்திருக்கும் இந்த தியாகராஜன்,

அப்பேற்பட்டவர்களுக்கு உன் மஹிமைகளை உபதேசிப்பதால் பயன் எதுவும் காணவில்லை. ["வ்ருஷ ராஜ" என்று உலக்கைக்கும் ஒரு பெயர். அதன்படி 'உலக்கைக்கு தெரியுமா? அவலின் ருசி' என்று சிலேஷையாகவும் எடுத்துக் கொள்ளலாம்.]

கருத்து:— ஸ்ரீ ஸ்வாமிகள் இருந்த காலத்தில், சில பொறுமையால் இவருடைய ஏகாந்த பக்தியைக்கண்டு வேஷதாரிகள் தூற்றிவந்தனர். அதை எண்ணி, தன் உறுதியை ஸ்ரீ ராமபிரானிடம் இந்தக் கீர்த்தனம் மூலம் தெரிவித்துக்கொள்ளுகிறார்.

எத்தனை வித்தைகள் ஒருவன் கற்றிருந்தாலும், ஆத்ம வித்தை என்று கருதப்படும் இந்த ஈச்வர சிந்தனை, ஈச்வர பக்தி, அவரவர்களுடைய சிரத்தை, சீலம், குரு பக்தி இவைகளாலேயே தேடி அடையத்தக்கது. ஸ்வயமான பரிபாகமும், ஞானமும், பற்றற்ற தன்மையும் இவைகளுடன் இன்றியமையாத யோக்கியதாம்சமாகும். இவைகளை நன்கு பரீக்ஷித்தே ஒரு ஞான குரு ஈச்வரனின் பிரதிநிதியாக இருந்து உபதேசிக்க மனமிரங்குகிறார். அன்றி அவசரமோ, பொழுது போக்குக்கான நேரமோ, புத்திக்கும் படித்த படிப்புக்கும் விருந்தாவதோ இவைகளுக்கு நிமித்தமல்ல. காளை மாட்டிற்கு நல்லபசி எடுத்தபோது உயர்ந்த பக்ஷ்யங்களின் வகைகளையும் அதில் கண்டுள்ள ருசியையும் பற்றி அதனிடம் பேசி என்ன பயன்! நல்லதொரு முயற்சியில்லாத அபாத்ரனுக்கு ஈச்வர தத்துவங்களைச் சொல்லாதே என்பது சுருதிகளின் மூலம் ஈச்வரனின் உத்தரவு. அவ்வாறெனில், ஸ்ரீ ராமபிரானின் நாம ஸ்மரணம் ஒன்றுதான் ஸகல தத்துவங்களின் மேலான ஸாரம் என்பதை எப்படி இவர்கள் தெரிந்து கொள்ளப் போகிறார்கள். இவர்களுக்கு உபதேசிப்பதில் என்ன பயன் காணமுடியும்.

# எல்லோர்க்கும் இனியவன்.

ஒருவனுடைய தயவு நமக்கு வேண்டுமென்றால் சில காரியங்களை நமக்குப் பிடித்தமோ பிடித்தம் இல்லையோ செய்கிறோம். அடிக்கடி அவனைப் பார்க்கிற போது, புன் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு வந்தனம் தெரிவிக்கிறோம். அவனுடைய க்ஷேம லாபங்களை அக்கறை உள்ளவர்போல விசாரிக்கிறோம். அவனுக்குண்டான சில கஷ்டங்களைக் குறிப்பாகக் கேட்டு நம்மாலான வாய்மொழி ஆறுதல் ஏதோ சொல்லித் தேற்றுகிறோம். அவனை நம் வீட்டுக்கு போஜனம் செய்ய அழைக்கிறோம். அவன் அழைத்தாலோ, அழைக்காவிட்டாலுங்கூட, உரிமை பேசிக் கொண்டு தவறாமல் செல்லுகிறோம். அடிக்கடி அவனுடைய குணங்களை அவன் காதில் படும்படி பிறர் முன்னிலையில் பேசி அவனை மகிழ்விக்கிறோம். இதற்கெல்லாம் சிலசமயம் நம்மிடத்தில் நடிப்புத்திறமையும் தேவைப்படுகிறது. அந்தரங்க சுத்தமுடன் ஒருவனிடம் பேசிப்பழகுவது மிகவும் துர்லபம். எளிதில் இவ்வுலகத்தில் பயன் தருவதுமில்லை.

உண்மை மனத்துடன் எல்லோரிடமும் இனிமையாகப் பேசுகிறவனுக்கே வெற்றி என்பது பழைய வார்த்தை. தன் உள்ளத்தை ஒளிக்காமல், அதே சமயம் இனிமையும் கனிவும் கலந்து பேசுவதும் பழகுவதும், ஸத்யமும் தருமமும் பிசகாதபடி நடத்தலும் மிகவும் ஆச்சர்யமான தெய்வ குணம். அதிலும், எல்லோரிடத்திலும் ஒரே விதமாக, இந்த உன்னத இயல்புடன் பழகுவது ஆச்சர்யத்திலும் ஆச்சர்யம். இந்த மஹோன்னதமான குணம் ஸ்ரீ ராமபிரானிடம் விளங்கிவந்தது என்று வால்மீகி பகவான் அயோத்யா காண்டத்தில் பலமுறை காட்டியிருக்கிறார். அதைக் கருத்தில் கொண்ட ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகளும் "இது

எவ்வாறு ஸாத்தியமாயிற்று? ராமா? இதை நான் அனுபவிக்கக் கொடுத்து வைக்கவில்லையே'' என்ற வியப்பும் ஏக்கமும் த்வனிக்க ஸ்ரீ ராமபிரானையே கேட்கிறார்.

ராகம்—தோடி] [தாளம்—ஆதி

பல்லவி

ஏமனி மாட்லாடி திவோ ராம
எவரிமனஸு கேவிதமோ தெலிஸி— (ஏ)

அனுபல்லவி

மாம மறது லனுஜுலு தல்லி தண்ட்ருலு
பாமலு பரிஜனுலு ஸ்வவசமௌட— (ஏ)

சரணம்

ராஜுலு முனுலு ஸுராஸுருலு வரதிக்
ராஜுலு மறி சூருலு சசிதர தின
ராஜுலு லோபடி நடுவனு தியாக
ராஜ வினுத நய பயமுல முத்துக— (ஏ)

பொருள்:— *எப்படி. என்று பேசினையோ எவ ரெவர்களுடைய மனதிற்கு ஏற்றபடி, எங்கெந்த வித மாகவெல்லாம் தெரிந்து (பேசினையோ) மாமன் மைத்து னர்கள் தம்பிமார்கள் தாயார், தகப்பனர் முதலியோர் கள் ஸ்த்ரீகள் வேலைக்காரர்கள் உன்னிடம் வசப்படும்படி (எப்படியெல்லாம் பேசினையோ) ராஜர்களும் முனிவர் களும் அஷ்ட திக்கைப் பரிபாலிக்கும் தேவர்கள் மற்றும் சூரர்கள், வீரர்கள் சிவனும், சூரிய சந்திரர்களும் விநயமும். பயமும் கொண்டு அன்புடனும் அடங்கி நடக்கும்படி (எப்படி எல்லாம் பேசினையோ)!*

கருத்து:— நமக்கு வரும் விசனங்களில் பல, நம் உறவினர்களிடம் நல்லபடிப் பேசிப் பழகாததால் தானே, அப்படியேபேசினுலும் பழகினுலும், விசனங்கள் விட்டு விடுவதில்லை. உறவினர்கள் ஒருவரிடத்தில் பேசுவது போல் மற்றொருவரிடத்தில் பேச முடிவதில்லை. பேசினல் அவர்கள் மகிழ்வதும் இல்லை. ஸ்ரீ ராமா எல்லா உறவினர்களும் ஒன்று பட்டு உன்னிடம் பிரியம் வைக்க நீ என்னதான் அவர்களிடம் பேசினுய்? போகட்டும், பெண்கள் எல்லாம் உன்னையே நினைத்துருக அவர்களை மயக்கும் பேச்சுதான் என்னவோ? இதென்ன விந்தை, எந்தெந்தப் பெண்களுடன் நீர் பேசிப் பழகினீர்? வேலைக்காரர்களை திருப்தி படுத்துவதற்கு என்னென்ன அவர்களுக்குச் செய்தீர், எந்த வேலைக்காரன் ஐயா உமக்கு முரணுக நடந்து கொண்டான். எல்லாம் உம்முடைய முகராசி. இதுவன்றி மற்றும் எல்லா அரசர்களும், முனிவர்களும், தேவர்கள், அஸுரர்கள், திக்பாலர்கள், சூரியன், சந்திரன், பரமசிவன் எல்லோரும் உனக்கு உட்பட்டு உண்மையுடனும் அன்புடனும் நீ சொன்னபடி எல்லாம் செய்யக் காத்திருக்கிறுர்களாமே!

இந்த அதிசயம்தான் என்ன? உம்முடைய பேச்சுத் திறமையாலே இவர்களை வசப்படுத்தி விட்டீரா? எல்லோருடைய உள்ளத்திலும் பரவி நிற்கும் உம்மொருவரால்தான் இது முடியும். ஸத்யமும், தர்மமும், தியாகமும் சேர்ந்து வழி நடத்தத்தோன்றினதல்லவா தங்களது திருவுருவம். உம்மிடமிருந்து உதிரும் முத்து மொழிகள் வேதப்பழத்தில் கனிந்தெடுத்த சுசிதி அமுதம் அல்லவா! அதில் மோகித்திருப்பது நிஜமான ஆத்ம ஸுகம் அல்லவா? அதை ஜீவராசிகள் அனைவருக்கும் தடையின்றி அளிக்கத் தோன்றிய திரு அவதாரம் அன்ருே தாங்கள்.



# மதுர மொழி.

ஸ்ரீ ராமபிரானின் மேன்மையான குணங்கள் பல வற்றுள் அவருடைய மதுரமான பேசும் திறமையை முன் கீர்த்தனத்தில் வியந்து போற்றின. ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள், இங்குவரும் கீர்த்தனத்தில், அந்த இயல்பை நாயக நாயகி பாவத்துடன் காட்டுகிறார். ஸ்ரீ ராமபிரானை பரவாஸுதேவனாக நினைந்து, பரமானந்த வைகுண்டபுரத்திலே, அனந்த வைபவங்களுடன் உலகெலாம் தமக்கே பணிசெய நாயகிகளாக வந்துற்றதை நினைவு கூர்ந்து அந்தத் திருக்கூட்டத்தில் தன்னையும் ஒரு பணியாளனாகச் சேர்த்துக் கொண்டு, ஸ்வானுபவ, ஆத்மானந்தம் கமழ, கானம் பண்ணுகிறார்.

ராகம்—நவரஸ கன்னடா] [தாளம்—ஆதி.

### பல்லவி

பலுகு கண்ட சக் கெரனு கேருனே
பணதுலார கூடரே — (ப)

### அனுபல்லவி

கொலுவு கூடமுனனு கொலுஸுவாரினி
பிலசி தாசரதி ப்ரேம மீர பல்கே — (ப)

### சரணம்

ஸுருல காமினீ மணுல கானமா
தரண நாலகிஞ்சுசுனு ச்ருங்கார
ரஸயுக்த வார ரமணுலாட ஜூசி
ஸரஸ தியாகராஜுனிதோ பொகடே — (ப

பொருள்—: மதுரமொழிகள் கட்டிச் சக்கரையைப் போல் இனிக்குமே, பெண்களே, பாருங்கள், கொலு அமரும் ஸபைதனில் அமர்ந்திருக்கும் சபையோர்கள், மந்திரி பிரதானிகள், நகரமக்கள், பணியாட்கள் போன்ற அனைவரையும் (தனித்தனியே) அழைத்து அன்பு ததும்ப விசாரித்து உரையாடுவது (கற்கண்டைப் போலினிக்குமே) தேவஸ்த்ரீகள், அப்ஸரஸ்ஸுகள் (செய்யும்) கானத்தை ஆதரவுடன் செவியுற்றும் சிருங்காரம் முதலிய நவரஸங்கள் ததும்ப (அபிநயத்துக்காட்டும்) நடன மாதர்களின் நாட்டியத்தையும் பார்த்து ரசித்து இடை இடையே இனிநாகத் தியாகராஜனுடன் பேசும் மொழிகள் கற்கண்டுபோல் இனிக்குமே.

கருத்து:— ஸாகேத புரத்தில் பெரிய ஸபை கூடியிருக்கிறது. ஸபை நிறைந்து, மந்திரிகள், அரசர்கள், தேவர்கள், ரிஷிகள், பட்டணத்து ஜனங்கள் என்று எல்லோரும் கூடியிருக்கின்றனர். லோகநாதனை ஸ்ரீ ராமசந்த்ர ப்ரபு ஸபையில் பிரவேசிக்கிறார். அவருடைய வருகைக்காக எல்லோரும் ஆவலுடன் காத்திருக்கின்றனர். ஸ்ரீ ராமபிரான் அங்கு ஸபையில் அமர்ந்துள்ள அனைவரையும் கவனித்து, அதில் முக்கியமாக தனக்குப் பணிபுரியும் வேலைக்காரர்களை அருகே அழைத்து அன்புடன் அவர்கள் க்ஷேம லாபங்களை விசாரித்தறிந்து ஆதரவுடன் அவர்களுடன் பேசி அவர்களை எல்லையற்ற மகிழ்ச்சிக்குள்ளாக்குகிறான். ஸபையில், ஆஸனத்தில் அமர்ந்ததும் தேவ ஸ்த்ரீகள் பாட, அப்ஸரஸ்ஸுகள் ஆட ஸ்வாமி அதை மிகுந்த ரஸிகத் தன்மையுடன் அனுபவிக்கிறார். ரஸம் மிகுந்த இடங்களில் இடையிடையே திரும்பி அருகேகாத்திருக்கும் பணியாட்களுள் ஒருவனை இந்த தியாகராஜனையும் பார்த்து தான் அனுபவிக்கும் அந்த கானத்தைப்பற்றிப் புகழ்ந்து ஒரு சில வார்த்தை பேசி, தியாகராஜனுக்கும் தன் பேச்செனும் அமுதத்தைப் பருக வாய்ப்பளித்தருளுகிறான்.

உலகில் நாம் எவ்வளவு உயர்திருந்தாலும், பரமாத்மாவின் முன்னிலையில் நாம் அனைவரும் எளியவர்களே. இதில் எளியவர்களுள் எளியவனே, பகவானின் கருணைக்குப் பாத்திரமாகிறான். தாமே அவர்களை வலியத் தேடிச் சென்று அவர்களை இன்புறச் செய்வது அவருடைய இயல்பு. அவருக்கே பணிசெய்து, கருத்தில் அவரையே கொண்டிருப்பதே உலகில் அத்தனை பேருக்கும் மாறுபாடில்லாத கடனாகும்.

---

## நல்ல சிநேகிதன்.

ஸ்ரீ ராமபிரான் அவதரித்த புண்ணிய தினமாகிய ஸ்ரீ ராமநவமியை நாடெங்கும் கொண்டாடி வழிபடுகிறோம். ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தியின் திவ்ய சரித்திரமான ஸ்ரீமத் ராமாயணத்தைப் பாராயணம் செய்தும், அவனுடைய புண்ணிய நாமத்தை உச்சரித்தும், அவருடைய பிம்பத்தை அலங்கரித்துப் பூஜித்தும், அவருடைய குண கீர்த்தனங்களைப் பாடியும் அகமகிழ்வடைகிறோம். ஸ்ரீ ராமபிரானை நம்முடைய சித்தத்தில் வைத்துக் கொள்ள, நாம் சித்த சுத்தியை அவனிடம் பிரார்த்திக்கும் தினம் இதுவே. சித்த சுத்தி இன்றி நாம் கடைத்தேற முடியாது. ஆசாபாசங்களால் மனம்போன வழியில் பிணைக்கப்பட்ட நமக்கு ஆண்டுதோறும் ஒரு நாளாவது பரிசுத்தம் அடைய இதுவே உபாயம் ஆகும். இதையே ஸத்குரு ஸ்வாமிகள் இந்தக் கீர்த்தனையின் மூலம் பிரார்த்தித்துக் கொள்ளுகிறார்.

ராகம்—மலயமாருதம்] [தாளம்—ரூபகம்.

பல்லவி.

மனஸா எடுலோர்த்துனு நா
மனவி சேகொனவே — (ம)

## அனுபல்லவி

தினகர குலபூஷணுனி தீனுடவை பஜன சேஸி
தினமு கடுபுமனின நீவு வினவவேல குணவிஹீன— (ம)

## சரணம்

கலிலோ ராஜஸ தாமஸ குணமுலு கலவாரி செலிமி
கலஸி மெலஸி திருகுத்ஸ மரிகாலமு கடபகனே
ஸலபமுகா கடதேரனு ஸகனலனு தெலிய சேயு
இலனு தியாக ராஜமாட வினவதேல குண விஹீன— (ம)

பொருள்:—நல்லகுணமே இல்லாத ஏ மனமே! ஏன் கேட்கமாட்டேன் என்கிறாய். (உன்னுடன் படும்) கஷ்டத்தை நான் எப்படித் தாங்குவேன். ஸூர்ய வம்சத்திற்கு ஆபரணம்போல் அவதரித்த ஸ்ரீ ராமனை தைன்யத்துடன் (எளிமையும், வினயமும் கூட) பஜனை செய்து, காலைக் கழித்துக்கொண்டிரு. இந்த என் சொல்லை, மனமே! நீ கேட்டு நடக்கக்கூடாதா?

இந்த கலியுகத்தில் ராஜஸமும் தாமஸமும் நிறைந்த ஜனங்களுடன் ஸ்நேகம் செய்துகொண்டு, நன்றாக அவர்களுடன் பழகிப்பழகித் திரிந்துகொண்டு காலம் (வீணாக) கழிக்கிறாய். அதைவிட்டு ஸுலபமாக எல்லோரும் இங்கு கடைத்தேறும் உபாயங்கள் இந்த தியாகராஜன் சொல்லுகிறேன். ராமனையே பஜித்திடு என்றிரு. அதைக்கேட்டு நல்வழிப்படலாகாதா?

கருத்து:— இது தன் மனத்தையே அழைத்து உபதேசிக்கும் எத்தனையோ கீர்த்தனங்களில் ஒன்று. சொல்லுகிறவர் யார்? யாருக்குச் சொல்லுகிறார்? மனத்திற்குச் சொல்லுகிறார் என்றால், தான் வேறாகி அல்லவோ சொல்லவேண்டும். மனத்தைத் தன்னிடமிருந்து பிரித்துச் சொல்லுகிறவர்க்கு மனம் என்னகேடு விளைவிக்கப் போகிறது? மனத்தை ஒரு கல்லஸ்நேகிதனாகவும், தன்னை

ராம கைங்கர்யத்தில் மூழ்கிய ஒரு பக்தனுகவும் ஆக்கிக் கொண்டு பேசுகிருர். மனமே, உன் வழியில் என்னை இழுக்காதே. என் வழியில் நீ வா. மனமே, உனக்கு எத்தனையோ ராஜஸமும் தாமஸமும் நிறைந்த இடங்களில் செல்ல ஆசை உண்டு. அங்கு செல்லாமல், என்னுடனே இரு. எனக்கு அந்த பரமாத்மா அளித்த திருவருளில் நீயும் லயிவது விடு. அது இருவருக்கும் க்ஷேமமாகும். மனத்தையும் ஒன்று சேர்த்து, வாக்கினுலும், காயத்தா லும், ஸ்ரீ ராமனை பஜனை செய்வதே நாம் கடைத்தேற ஒரு வழி என்று காட்டுகிருர். வாக்கும், காயமும் அநேக மாக, ஸ்ரீ ராமனுடைய உத்ஸவாதி காரியங்களில், புண் ணிய தினங்களில் ஈடுபடும். ஆனல் மனம் தன் வழியே போய்க்கொண்டிருக்கும். மனம் செவ்வைப் படாத போனுல், கர்மாவிலும் பக்தியிலும் நிறைவுகாண முடி யாது. அதனுல்தான் மனத்தை வற்புறுத்தித் தன்னுடன் சேர்ந்துக்கொள்ள அழைக்கிருர்.



## சேஷ கைங்கர்யம்.

வால்மீகியின் அம்ஸ பூதர்களான ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள், வால்மீகி தன் ஸ்ரீ ராம சரித்திரத்தில் சொல்ல விட்டுப்போன சில இன்பக் காட்சிகளை நினைவுபடுத்தித் தானும் ஆனந்தித்து, நம்மையும் ஆனந்தப்படுத்துகிருர்.

ராகம்—கரஹரப்ரியா] [தாளம்—ஆதி.

பல்லவி

மித்ரி பாக்யமே பாக்யமு ஸெள — (மி)

அனுபல்லவி

சித்ர ரத்னமய சேஷதல்பமந்து
ஸீதாபதினி யுனிசி யூசு ஸௌ — (மி)

சரணம்

பாருக விந்தராகமுல ஞலாபமு
சேயகா மேனு புலகரிஞ்சகா
த்யாகராஜ நுதுடகு ராமுனி
தத்வார்த்தமுனு பொகடி ஜூசு ஸௌ — (மி)

பொருள்: : விசித்ரமான ரத்னங்களால் இழைக்கப் பட்ட ஆதிசேஷனென்ற படுக்கையின்மேல் ஸீதாபதியை சயனிக்கச்செய்து ஆட்டும் லக்ஷ்மணனுடைய பாக்யமே பாக்யம். பலவித விசித்திர ராக ஙளை நன்ருக ஆலா பனம் செய்து மெய்சிலிர்க்க தியாகராஜனுல் துதிக்க பட்ட ராமனுடைய நிஜ பரதத்வ ஸ்வபாவத்தைப் பாட வும் தரிசிக்கவும் பாக்யம் பெற்ற ஸௌமித்ரியின் பாக்யமே பாக்யம்.

கருத்து: ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தி, தேவியுடன் ஊஞ் சலில் அமருகிருர். அருகில் லக்ஷ்மணன் நிற்கிருன். ஸ்வாமியை சிறிது சயனித்துக்கொள்ளவேண்டி கேட்டு கொள்ளுகிருன். ஸ்வாமியும் இசைந்து படுத்துக்கொள் ளுகிருர். இந்த வேளை, பக்தர்களின் கானமும், ஆலாபன மும் காதில் மதுரமாக இசைக்கப்படுகிறது. ஸ்ரீ ராம பிரானுடைய குணங்களை விளக்கும் கானங்களில் லயித்து லக்ஷ்மணன் பரமாத்மாவை கண்குளிர தரிசனம் செய்து கொண்டு, மெதுவாக அந்த மஞ்சத்தை அசைக்கிருன்.

இது லக்ஷ்மணனுடைய இயல்பு. இது பூமியில் அவ தாரம் பண்ணின நாளாகத் தனக்குக்கிடைக்காமல் இருந் தது இன்று கிடைக்கிறது. முன்பு ஸ்வாமிக்கு ஆதிசேஷ னை உயர்ந்த படுக்கையாக விளங்கியவன். பூம் பட்டு போல் அவருக்குத் தன்னையே அணையாகக் கொடுத்தவன்.

தன் முடிகளில் துலங்கும் விசித்ரமான நாகரத்னங்களால் விளக்கிட்டு அவர் திருமேனியை அலங்கரித்தவன். அந்த பரமமூர்த்தி சேஷ நாராயணன் பூமியில் ஸ்ரீ ராமனாக அவதரித்த காலம் தொடங்கி, தானும் பூமியில் லக்ஷ்மணனாக அவதரித்து, அவருக்குப் பணிவிடைகள் ஓடி, ஆடிச் செய்தும், அவர் பின்னணியில் நின்றும் ஸேவித்தவன். இன்று பழைய ஸேவையை நினைவூட்டும் தருணம் கிடைத்துவிட்டது. ஸ்ரீ ராமன் படுத்திருப்பது அயோத்தியில் ஓர் அழகிய மஞ்சமா? அல்ல, தானே படுக்கையாக வந்த சேஷதல்பம். பக்தர்களின் கானம், அன்று அங்கு செய்யப்பட்ட நாரத, தும்புரு முதலான நித்ய ஸூரிகளின் வேத கீதம். அன்று படுக்கையாக இருந்து ஸ்வாமியின் முக கமலத்தை தனது இரண்டாயிரம் கண்களாலும் பருகினவன், இன்று படுக்கையுமாகி, அந்தப் படுக்கையை அசைக்கும் ஒரு ஸேவகனுமாகி நின்று, அந்த ஆனந்தத்தை நினைவிலும் ப்ரத்யக்ஷ தர்சனத்திலும் அடைகிறான். இந்த பாக்யம் ஆதிசேஷனாயிருக்கும் போது கிட்டாதது. ஸௌமித்திரையின் செல்வனாகப் பிறந்ததால் கிட்டினது.

கருத்து: ஸ்ரீ ராமபிரானே பகவான் வாசுதேவன். ஆதிசேஷனும் அந்த வாசுதேவனின் அம்சம். அவனைப் பூர்ணமாக ஸேவிக்கக்கூடிய பாக்யம் இந்த ஆதிசேஷனுக்கே உரியது என்றிருக்கவேண்டாம். பகவானே ஸ்ரீ ராமபிரானாக மண்ணில் மனிதனாக அவதரித்து விட்டான். ஆதிசேஷனையும் இந்த மண்ணில் லக்ஷ்மணனாகத் தோன்றச் செய்தான். அந்தப் பரம மூர்த்தியை தரிசனம் செய்ய நினைக்கும் புண்ணிய சீலர்கள், இந்த ராமபிரானை தரிசனம் செய்யும் பாடியும் எளிதில் அதிக பாக்யத்தை அடைகிறார்கள்.



# உடல் பெற்ற இன்பம்.

இந்த உடலில் உள்ள ஒவ்வொரு அவயவமும் மிகுந்த அவசியமாக இருக்கிறது. கண், காது, நாக்கு, மூக்கு, கை, கால்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதத்தில் உலகில் காணும் இன்பத்தையும், அதனால் இந்த உடலை வளர்க்கவும் பயன் படுகின்றது. இவைகளில் ஏதேனும் ஒன்று பழுதாய்ப்போனாலும், மனிதன் வீணாகுவதில்லை. பழுதடைந்த அவயவத்தால் காணும் இன்பத்தை மற்றதொன்றின் வளர்ச்சியால் அடைய முற்படுகிறான். கண்ணிழந்தவன் காதாலும், வாய் இழந்தவன் கண்ணாலும், கண் காது, வாய் இவைகள் அடைத்துப் போனாலும் ஸ்பரிசத்தாலும், உலகைப் புரிந்துகொண்டு காலம் தள்ளுகிறான். அதற்கு முக்கிய உறுப்பான புத்தி பழுதடையாமல் இருப்பதே காரணமாகும். புத்தி பிசகினவனுக்கு இதில் எந்த உறுப்பும் உதவாது. அதனால் புத்தியின் பலத்தைக்கொண்டே ஒருவன் உலகில் விழாமல் தன்னைத் தாங்கிக்கொள்ள முடிகிறது.

மனிதனின் புத்தியும் சிந்தனையும் வளர வளர, அதிசயிக்கக் கூடிய பேராற்றல் விளைகிறது. இங்கே ஒன்று தெரிவிக்கிறார். எவ்வளவுதான் சிந்தனைசெய்து பார்த்தாலும் உன்புத்திக்கே புலப்படாத ஒன்று எல்லாவற்றையும் கடந்து இருக்கிறது. எத்தனையோ கால காலங்களில் சிந்தித்துப் பார்த்தும் கண்டுகொள்ள முடியவில்லை. அந்தமுடிவான ஒன்றைக் கண்டுக்கொள்ளத்தான் இந்த உடலை உனக்கு அளித்திருக்கிறது என்று இந்தக் கீர்த்தனத்தில் வலியுறுத்துகிறார். இதை நீ உணர்ந்து கொள்ளாவிடில் ஒரு புத்தி பிசகினவன் கண்டகாட்சிக் கொப்பாகும் நீ இந்த உலகைக் காண்பது என்கிறார்.

ராகம் — நீலாம்புரி] [தாளம் — ஆதி.

## பல்லவி

என்னகா மனஸுகு ராணி
பன்னக சாயி ஸொகஸு
பன்னுகா கனு கொனனிகன்னுலேலே
கன்னுலேலே கண்டி மின்னுலேலே— (எ)

## சரணம்

1 மோஹமுதோ நீலவாரி
வாஹ காந்தி நிகேரின
ஸ்ரீ ஹரினி கட்டு கொனனி தேஹமேலே
தேஹமேலே ஈ கேஹமேலே— (எ)

2 ஸரஸிஜ மல்லெ துளஸி
விருவாஜி பாரி ஜாதபு
விருலசே பூஜிஞ்சனி கரமுலேலே
கரமுலேலே ஈ காபுரமுலேலே— (எ)

3 மாலிமிதோ த்யாகராஜு
நேலின ராமமூர்த்தினி
லாலிஞ்சி பொகடனி நாலிகேலே
நாலிகேலே ஸுஒத்ர மாலிகேலே— (எ)

***பொருள் :—பல்லவி :*** *எவ்வளவுதான் யோசித்துப் பார்த்தும், மனஸுக்கு எட்டாத (ஒரு பொருளை) ஆதி சேஷன்மீது சயனித்திருக்கும் பகவானுடைய திவ்ய ஸௌந்தர்யத்தை நன்ருகக்கண்டு களிப்படையாத மனிதனுடைய கண்கள் இருந்து என்ன பயன்? அந்தக் கண்களில் பார்வையிருந்தும் என்ன பயன்?*

*பகவான் எட்டாதவனாயினும், எல்லோருக்கும் தன்னைக் காணும் பொருட்டு அழகிய பள்ளிகொண்ட திருக்கோலத்துடன் காட்சி அளிக்கவில்லையா?*

சரணம்: (1) கரிய மேகம்போன்ற காந்திபடைத்த கண்ணனை ஆசையுடன் கட்டி அணைக்காத தேஹம் எதற்கு? ஏன்? கட்டி அணைப்பதற்குத்தான் இந்த வீட்டில் எத்தனையோ இருக்கிறதே? மனை, மனைவி, மக்கள் ஆகியவை வாஸ்தவம், இவைகளைக்கட்டி அணைப்பதால் உன் தேஹம் களைத்து கழன்று விடும். எவனைக் கட்டி அணைத்தால், உன்னை யறியாமல் உனக்கு இடப்பட்ட கட்டுக் கழன்று விடுமோ, அவனையே கட்டிக்கொள்ள ஆசைப்படு. அவன் கிடைப்பானோ? அவனுடைய சம்பந்தம்பெற்ற துளஸி ஹாரம், புண்ட்ரங்கள், பாகவத பாததூளி, அவனுடைய நிர்மால்யங்கள் உன் தேகத்தில் இருந்து சுகப்படுத்தட்டும்.

(2) தாமரை, மல்லி, துளஸி, இருவாக்ஷி, பாரிஜாதம் போன்ற புஷ்பங்களால் பகவானை அர்ச்சிக்காத கைகள் எதற்கு? அவ்வாறு உதவாத கைகளைச் சுமக்கும் இந்த ஜன்மந்தான் எதற்கு?

இந்தக் கைகளால் ஸேவை (சமக்கேயாவது அல்லது பிறர்க்காகவாவது) செய்கிறோம். ஸேவகமும் செய்கிறோம். பிறரை ஆட்டியும் படைக்கிறோம். நீ எத்தனை அதிசயங்கள் புனைந்தாலும் கைகளால் உனக்கும் உன் பிறவிக்கும் மணம் ஏற்படப் போவதில்லை. உடலுக்குத்தான் இந்தக் கைகள் உதவுகின்றன. மென்மையான மணம் நிறைந்த புஷ்பங்களைக் கையில் எடு! உன் கை பட்டவுடன் அவை தாங்காமல் வாடிவிடுகின்றன. வாடாத மலர் நாடி நாள்தோறும் நாரணன் தன் வாடாத மலரடிக் கீழ் வைக்கவே வகுக்கின்ற உத்தம கைங்கர்யத்திற்கானவை உன் கைகள்? அவைகளைக்கொண்டு உன் ஜன்மத்தை பாரமாக்காதே! ஜன்மபாரத்தை நீக்கிவிடு.

(3) அன்புகூர்ந்து, இந்தத் தியாகராஜனை காப்பாற்றின ஸ்ரீ ராமமூர்த்தியை லாலனை செய்து பாடாத நாக்கு

எதற்கு? கையில் சுற்றிக்கொண்டிருக்கும் ஜபக் கயிறு தான் எதற்கு? நாக்கு எவ்வளவோ பேசுகிறது! அந்தரங்க சுத்தத்துடன் பேசுவது எவ்வளவு? மிகவும் சொற்பம். உள்ளன்பு நெகிழ ஸ்ரீ ராமனைப் பாடினால், உன்கா அடையும் சுவை அறியமுடியாது. அந்தரங்க பக்தி இல்லாமல், வெறும் வறட்டுக்கூச்சலிட்டுப் பாடிக் கொண்டிருந்தால் என்ன பயன்? அது எது போல? ஒருவர் ஜபம் செய்து கொண்டிருந்தார். ஒரு கையில் துளஸி மாலை உருட்டிக்கொண்டிருக்கிறார். இன்னொரு கையில், இவர் ஜபம் பண்ணின கணக்குத் தெரியும்படி, கயிற்றை விரலில் சுற்றிக் கொண்டிருக்கிறார். இவர் மனமோ, எங்கேயோ லௌகிக கார்யத்தை எண்ணிக்கொண்டிருக்கிறது. இதனால் சுவை உண்டா? பயன் உண்டா?

---

# ஸீதாபதியின் ஸித்தாந்தம்.

பகவானிடம் நீங்காத பக்தி கொண்டிருப்பவர்களுக்கு பகவானேதான் எல்லா காலங்களிலும் ஆதரவான பொருளாக விளங்குகிறான். பக்தியினால் மனத்திற்கு சாந்தி ஏற்படுகிறது என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். அந்த சாந்தி துக்கப் பட்டவன், கலங்கிக்கிடக்கிறவன், பயத்தில் நடுங்கிக் காலம் கழிப்பவன், இவர்களுக்குக் கிடைப்பது அரிது. இவர்களுக்கு அருமருந்தான பகவத் ஸ்மரணம் ஒன்றே ஆதரவளிக்க வல்லதாகிறது. தங்கள் தங்கள் குறையை அடிக்கடி சொல்லிக் கொள்வதில் மனிதர்களுக்கு அந்தப்பாரம் மனத்திலிருந்து இறங்குவதுபோல ஸ்ரீ ராமபிரானிடம் முறையிடுவதாலே தன் குறை தீர்த்தும் பாரம் நீக்கியும், பரிசுத்தம் பெறுவதும் ஆன உயர்ந்தவழியில் கண்டனுபவித்த மஹானின் வாக்கைப் பருகுவோம்.

ராகம்— கமாஸ்] [தாளம் — ஆதி

## பல்லவி

ஸீதாபதே நாமன ஸுன
ஸித்தாந்த மனி யுன்ஞனுரா— (ஸீ)

## அனுபல்லவி

வாதாத்ம ஜாதுல செந்தனே
வர்ணிஞ்சின நீ பலுகுலெல்ல— (ஸீ)

## சரணம்

ப்ரேம ஜூசி நாபை பெத்த மனஸுசேஸி
நீ மஹி மலெல்ல நிண்டாரு ஜூபி
ஈமஹினி பயமேடி கன்ன மாட
ராமசந்த்ர த்யாகராஜ வினுத — (ஸீ)

பொருள் :— பல்லவி: ஸீதாபதே, என்னுடைய மனத்தில் (நீயே) ஸித்தாந்தம் (முடிவு) என்று நினைத்திருக்கிறேன்.

அனுபல்லவி : ஆஞ்ஜனேயன் முதலானோர்களுடன் கூடி இருக்கையில் அவர்கள் முன்பு என்னைப் பற்றிப் பேசின வார்த்தைகள் எல்லாம் அறிந்து "எனக்கு நீயே ஸகலமும்" என்ற துணிவு கொண்டு உன்னைத் தெரிந்து கொண்டு விட்டேன்.

சரணம்: நான் உன்னிடம் வைத்திருக்கும் அன்பைப் புரிந்துகொண்டு, பெரிய மனதுபண்ணி, உன் மஹிமை எல்லாம் நான் தெரிந்து கொள்ளும்படியாகச் செய்து விட்டாய். இனி இந்த உலகில் எனக்கு என்ன பயம் என்னும்படி நீயே அபயம் அளித்துவிட்டாய் இந்த

ஸித்தாந்தத்தையே கடைபிடித்து, உன்னையே அதன் உட்பொருளாக நினைத்திருக்கிறேன்—ஹே ராமசந்திர! தியாகராஜ விநுத—

இங்கு அநுபல்லவியில் குறிப்பிட்ட ரஹஸ்யமொழிகள் என்னவாக இருக்கும் என்று நம்மால் ஊஹிக்க முடியுமா? அதற்கு இடம்கொடுத்து, தான் கண்டு கொண்ட உபதேச ரஹஸ்யத்தை இந்த கீர்த்தனம் மூலம் வழங்கியுள்ளார்.

अभयं सर्व भूतेमयः ददामि एतत् व्रतं मम ॥

இதுவே, பகவான் தன்னை அறிந்துகொள்ளத் தானே உபதேசித்த ஸித்தாந்தம்.

---

## ஸீதா வல்லபன்.

பகவானின் அளவிட முடியாத அனுக்ரஹ சக்தி, மறைந்திருப்பதனாலேயே உலகில் அறியப்படுகிறது. தன்னை மறைத்து மானிட வடிவத்தில், இவ்வுலகில் நம் முன்னே நமக்காக யுகங்கள் தோறும் அவதரித்து வருகிறான். இந்த அவதாரங்களில் விசேஷமானது ஸ்ரீ ராமாவதாரம். அதில்தான் மறைந்திருந்ததுபோல, தன் சக்தியான ஸீதாதேவியையும் மறைத்துவைத்து இருவருமாக உலகை வாழ்வித்திருக்கிறார்கள். தன் தேவியின் துணைகொண்டு, அவளுடைய கற்பின் சக்தியாலே தன் அவதார லீலையை நடப்பித்துக்கொண்டார். இதுபோல வேறு எந்த அவதாரத்திலும் காணப்படுவதில்லை. இதையே தியாகராஜ ஸ்வாமிகளும் கருத்தில் வைத்து கானம் செய்கிறார்.

ராகம்-சங்கராபரணம்] [தாளம்-ரூபகம்.

### பல்லவி

வல்லகா தனக, ஸீதா வல்லப! ப்ரோவ-நா— (வ)

### அனுபல்லவி

வல்ல நாடி பக்த சரித மெல்ல வ்ராயனேலரா— (வ)

### சரணம்

ஸ்தம்பமுனனு தருமருகுன டிம்புலடயசோத ஒடினி
டம்புடைன முசுகுந்துனி டாஸி மருகுத்ஸு
ஸம்பவிஞ்சி யுக யுகமுன ஸரஸ தியாகராஜ வினுத
கும்பக ரேசக விதுலனு கோரிப்ரோசினுவு நா — (வ)

பொருள்:— பல்லவி: *ஸீதா வல்லப, உன்னைக் காப்பாற்ற என்னால் முடியாது என்று சொல்லிவிடாதே.*

*அனுபல்லவி: உன்னால் காப்பாற்றப்பட்ட பக்தர்களின் சரித்திரங்களை எல்லாம் என்னால் எழுத முடியாது. எதற்காக நான் எழுதவேண்டும்?*

*சரணம்: தூணில், மரத்தின் பின்னே, யசோதையின் மடியில் பாலகனுப், டம்பம் நிறைந்த முசுகுந்த சக்கரவர்த்தியை அணுகிச் சென்று மறைந்தும், ஒவ்வொரு யுகத்திலும் அவதரித்துக் காப்பாற்றினாய் (உன்னை அறிந்தவர்கள்) கும்பகம் ரேசகம் என்ற யோக வழி அறிந்தவர்கள் தங்கள் உள் நோக்கால் உட்புறமாய் மறைந்த ஹ்ருதய கமல வாஸனை உன்னை சரணம் அடைந்தவர்கள்.*

*இந்த கீர்த்தனத்தில், ப்ரஹ்லாதனுக்காக தூணில் மறைந்து வெளிப்பட்டதையும், ஸுக்ரீவனுக்காக மரத்தில் மறைந்து வாலியின்மேல் பாணம் செலுத்தியதையும்*

யசோதையிடம் அவள் பெற்ற பிள்ளை என்ற பாசம் பிறக்க பாலனாய் நடித்ததையும், காலயவனனைக் கொல்லுகிற காரணமாக, வெகு காயமாக குகையில் படுத்துத் தூங்கிக்கிடந்த முசுகுந்த சக்ரவர்த்தியை எழுப்பி தரிசனம் கொடுத்ததையும் குறிப்பிட்டார். ஸ்ரீ ராமா! இந்தச் செய்கைகள் எல்லாம் உம்முடைய பக்தர்கள் கோரிக்கையை மெய்ப்பிக்கவே எடுத்துக் கொள்ளப்பட்டன. இதைத்தவிர " ஆக்கையின் உள்ளும் புறத்தும், உன்னை நோக்கி நோக்கிக் காண்பான். ஆவலினால், " தவத்தில் கிடந்து பலகாலம்மெலிந்த அந்த தண்டகாரண்ய வாஸிகளுக்கு அன்று முன்னே நின்றீர். அவர்களுக்கு அபயம் அளித்தீர். தங்களுடைய ஜோதிவடிவை தங்கள் உள்ளுக்குள்ளே கண்டு ஆனந்தித்த அவர்கள். புறத்திலே, ஸீதா ஸமேதனாக எதிரே நின்று காக்ஷி கொடுத்ததை மறவாதவராகி புளகாங்கிதமடைந்தனர். அவர்கள் கோரிக்கையை ஈடேற்றிவைக்க, 'ராவண வதம்' முதலிய செய்ய எங்கள் தாயார் ஸீதையையும் கூட அழைத்து வந்துவிட்டீர். எங்கள் தாயார் ஸீதை இல்லா விடில் உங்களுக்கு "ராவணாரி" என்ற கீர்த்திதான் ஏது? இவ்வளவு ஈடேற்றிக்கொடுத்தத் தாங்கள் இந்தசிறியேன் விஷயத்தில் சிரமமே படவேண்டாம். ரொம்பவும் ஸரஸமாக முடித்துவிடலாம். என்றால் முடியாது என்று மாத்திரம் சொன்னால் நான் ஏற்கமாட்டேன்,



## எதைச் செய்தால் என்ன ?

இந்த உடலையும், அதில் உயிரையும், உடலுயிரால் உணர்வும், உணர்வால் உலகில் பல பொருள்களையும் கண்டுகொள்ள, எந்த சக்தி நமக்கிவைகளை அளித்ததோ, அந்த பராபரமே ஸ்ரீ ராமனாக வந்துற்றது.

அணைகடந்த அந்த சக்தியை நாம் அறியாதிருந்தும் அல்லது அறிந்து மறந்திருந்தாலும், நம்மை என்றும் அச் சக்தி அணைத்த வண்ணமிருப்பதால். அந்த பராபர வஸ்துவைக் கருணைக் கடல் என்று அழைக்கிறோம். அந்த கருணையே ஸ்ரீ ராமன் என்று வடிவுடையதாகி அன்று அயோத்தியில் திரு அவதாரம் செய்தது. ஆதலின் ஸ்ரீ ராமபிரானின் கடைக்கண் நோக்கம் யாருக்குக் கிடைக்க வில்லையோ, உலகில் எவ்வளவு பெரியோனாயினும், ஸமர்த்தனாயினும் உண்மையில் அவன் பெருமைக் குரியவன் அல்ல என்கிறார் ஸ்ரீ தியாக ப்ரும்மம். இதுவேதான் சுருதிகளின் முடிவான சித்தாந்தமும்.

ராகம்-தோடி] [தாளம்-த்ரிபுடை

பல்லவி

ஏமி சேஸின னேமி ஸ்ரீராம
ஸ்வாமி கருண லேனி வாரிலலோ— (ஏ)

அனுபல்லவி

காம மோஹ தாஸுலை ஸ்ரீராமுனி
கட்டு தெலிய லேனி வாரிலலோ— (ஏ)

சரணம்

(1) இம்மு கலிகினனேமி இல்லாலிகி
ஸொம்மு பெட்டின னேமி
கம்ம வில்துனி கேளி தெலிஸி யேமி
தம்மி கண்டிவானி கருணலேனி வாரிலலோ -(ஏ)

(2) ஸவமு சேஸின னேமி கலிமினி புத்ரோத்
ஸவமு கலிகின னேமி

புவிலோ நன்ய பீஜ ஜனிதுனி கொனியேமி
சிவகர ஸ்ரீராமுனி தயலேனி வாரிலலோ— (ஏ)

(3) மேட கட்டின னேமி அந்துன
லாந்தரு ஜோடு கட்டின னேமி
சேடியலனு மெப்பிஞ்ச தெலிசி யேமி
ஈடுலேனி ராமுனி தயலேனி வாரிலலோ— (ஏ)

(4) ராஜ்யமேலின னேமி பஹுஜனு லலோ
பூஜ்யுலைன னேமி
ஆஜ்ய ப்ரவாஹமுதோ னன்னமிடின னேமி
பூஜ்யுடைன ராமுனி தயலேனி வாரிலலோ— (ஏ)

(5) குருவு தானைநநேமி கண்டிகீ மேனு
குருவை தோசின னேமி
வரமந்த்ர மன்யுல குபதேசிஞ்சின னேமி
வரதியாகராஜனு துனிதயலேனி வாரிலலோ-(ஏ)

பொருள்:— பல்லவி--அனுபல்லவி: உலகில் ஒருவன் எதை செய்தால்தான் என்ன? ஸ்ரீ ராமஸ்வாமியின் கருணைக்குப் பாத்திரனாகாவிடில் அவன் எது செய்தாலும் உண்மைப் பயன் அடையாதவனே.

காமத்துக்கு வசப்பட்டவர்கள் உலகில் ஸ்ரீராம பிரானின் கட்டளைகளைத் தெரிந்துகொள்ள இயலுமா? அவர்கள் உலகில் எது செய்தால்தான் என்ன?

சரணம்! (1) நிறைய (ஸம்பாதித்து) சௌகர்யங்களுடன் வாழ்ந்தென்ன? மனைவிக்கு நகையாக வாங்கிப் போட்டு, மன்மத லீலைகளில் பல தெரிந்த சிருங்கார லோலனாக இருந்து என்ன? நீண்ட அரவிந்த லோசனனான ஸ்ரீ ராமனின் கருணைக்குப் பாத்திரமாகாவிடில் எது செய்தால்தான் என்ன?

(2) யாகம் செய்தால்தான் என்ன? நல்ல புத்திரனைத்தான் பிறந்திருக்கிறான். அதனால்தான் என்ன? பிள்ளை இல்லையா? இன்னொருவனை ஸ்வீகாரம் செய்து கொண்டான். இதுவெல்லாம் ஒரு செல்வமா? நன்மை தரும் ஸ்ரீ ராமபிரானுடைய தயவை அடையாதவர்கள் (என்ன செய்தால்தான் என்ன?)

(3) உயர்ந்த மாடமாளிகை கட்டி என்ன? அதில் அடுக்கு அடுக்கான விளக்குகள் எரிந்து காட்சி தந்தால் என்ன? ஸ்திரீகளை மயக்கி, அவர்களை களிக்க வைக்கும் திறமைகள் பெற்றிருந்தால் தான் என்ன? இத்தனையும் என் இணையற்ற ஸ்ரீ ராமனுடைய கருணையைப் பெறுவதற்கு ஈடாகுமா?

(4) அரச பதவி கிடைத்து அதை ஆண்டால்தான் என்ன? உலகில் பலரும் சேர்ந்து வெகுமானித்துப் போற்றும் பெருமை படைத்தால்தான் என்ன? அல்லது கை வழிவார நெய்யை ஊற்றி சிறந்த அன்னதானம் செய்தால்தான் என்ன?

(5) பலபேருக்குத்தானே குருவாக இருந்தென்ன? பார்ப்பவர்கள் எல்லோரும் இவனைப் பெரியவர் என்று சொல்லும் பெருமை படைத்தால்தான் என்ன? வரம் கொடுக்கும் பல மந்திரங்களைப் பிறர்க்கு உபதேசிக்கக் கூடிய தகுதி பெற்றால் என்ன? எல்லாம் என் ஸ்ரீ ராம ஸ்வாமி தயவைப் பெறுவதற்கு இணையாகுமா? அதைப் பெறாதவன் உலகில் எது செய்தால்தான் என்ன?

மேற்கண்ட, ஐந்து சரணங்களில் ஸ்வாமிகள் உலகில் காணப்படும் உத்தம, மத்யம, அதம காரியங்களிலும் அதில் ஈடுபட்டு அதுவே இந்த ஜன்ம லாபம் என்று

நினைத்துக் கொண்டிருக்கும் ஏழைகளுக்கு, கருணா ராம னின் பெருமையைத் தன் கருணை கூர்ந்த உபதேசத்தால் காட்டியருளினர். வுலகில் ஸ்ரீராம கிருபையை அடைய முற்படுங்கள். அது ஒன்றே போதும். ஆனால் அது நாமாகத் தேடிக் கண்டுபிடித்துவிடக் கூடியதல்ல. நீ அவனுக்காகக் காத்திருந்தாலும், அவனுடைய கடைக் கண் பார்வை உன் மேல் விழவேண்டுமே? அது கிடைத்து விட்டால் நீயே எல்லாம் பெற்றவனாவாய்! அது இல் லாதவரை நீ எது செய்தும் செய்தது ஆகாது. அவனு டைய திருநோக்கால் குற்றமும் குணமடையும். குணமோ இன்னும் பன்மடங்கு பிரகாசிக்கும்.



## நல்ல பிழைப்பு.

இப்பொழுதெல்லாம் நமக்கு உலகத்தில் நடக்கும் எந்த வியவகாரங்களையும் எளிதில் விரைவில் தெரிந்து கொள்ளமுடிகிறது பல நூறு மைல்களுக்கு அப்பால் நடக்கும் ஒவ்வொரு சம்பவமும், சில மணி நேரங்களுக் குள் நம்முடைய காதுக்கு எட்டிவிடுகிறது. தந்தி, டெலிவிஷன், ரேடியோ, பத்திரிகை, டெலிபோன் முதலியன செய்யும் உபகாரங்கள் இவை அடுத்த தெருவில் நடக்கும் விஷயமும் பத்திரிகை வாயிலாகப் படிக்கும்பொழுது நம்பிக்கை பிறக்கிறது அதனால் உலக ஞானம், பொது அறிவு அவசியம் என்று பள்ளிக்கூடங்களிலும், அதையே அவசியமாகப் போதிக்கிறார்கள். நூறு வருஷங்களுக்கு முன்பெல் லாம், இவ்வளவு வேகம் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. நாட்டு நடப்பு, அரசியல் போன்ற துறைகளில் எல் லோருக்கும் இப்பொழுதுள்ள ஆர்வம் இருந்ததாகத் தெரியவில்லை. 'ராமன் ஆண்டால் என்ன, ராவணன்

ஆண்டால் என்ன? என்ற மனப்பான்மை அப்பொழுது அதிகம் இருந்திருக்கலாமோ என்னவோ. இப்பொழுது ஆட்சிமுறை வழிகள் ஒவ்வொரு வீட்டிலும் நன்ருகத் தெரிந்திருக்கிறது. ஆனுல் எது நன்மை நிறைந்தது? எது கொண்டாடத் தக்கது? எது பின்பற்ற வேண்டியது? என்று எத்தனை பேர் அதன் ரஹஸ்யத்தை உண்மையுடன் அறிந்திருப்பார்களோ நாம் அறியோம்.

ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் வாழ்ந்து வந்த காலத்தில், உலகத்தின் பொது இயல் அறிவு அவ்வளவு வேகமாக எல்லோருக்கும் எட்டும்படியில்லை. அவரவர்கள் தங்கள் பிழைப்புண்டு, தாங்கள் உண்டு என்று இருப்பவர்கள். ஈச்வர பக்தி, அனுஷ்டானம், ஸ்வதர்மத்திற்குகந்த வித்யா அப்யாஸம் இவைகளிலேயே பொழுது சரியாகப்போய் விடும். பணம் சம்பாதிப்பது பெரும் வசதிகளுடன் வாழ வழி தேடுவது, இவைகள் அதிகம் இல்லாத காலம். ஆனுல் ஸ்ரீ ஸ்வாமிகளோ தனக்கு உலக ஞானம் உண்டு, எல்லா ரஹஸ்யங்களும் தனக்குத் தெரிந்திருக்கிறது என்று பெருமைப் படுகிருர். அவர் அதை எப்படிப் பெற்ருர் என்பதைக் கீழ்க்கண்ட கீர்த்தனம் தெரிவிக்கிறது.

ராகம்—நாயகி] [தாளம்-ஜம்பை

பல்லவி

தயலேனி ப்ரது கேமி
தாசரதீ ராம-நீ— (தய

அனுபல்லவி

வயஸு நூறைன ஈ
வஸுதனே லின கானி—

சரணம்

ராஜாதிராஜ ரதிராஜ சதலாவண்ய
பூஜ ஜபமுலவேள பொங்துகா செதுட
ராஜில்லி லோகாந்தரங்க மர்மமு தெலிபி
ஸயனி தியாகராஜ ஸன்னுத நீது— (தய)

பொருள் :— பல்லவி : ஹே தாசரதி! ராம, உன்னுடைய தயவு பெருத வாழ்க்கை என்ன பயன் உள்ளது?

அனுபல்லவி : நூறு வயது இந்த உலகில் ஆண்டு (அனுபவித்தாலும்) —ராம, உன்னுடைய தயவு இல்லாத வாழ்வு என்ன வாழ்வு!

சரணம் : ராஜர்களுக்கு ராஜனே. ரதி ராஜனுன மன்மதனின் நூறுபங்கு அழகுள்ளவனே! ராமா! நான் செய்யும் பூஜாகாலத்தின் பொழுதும், நான் உன்னை ஜபித்திருக்கும் வேளைகளிலும், அழகாக என்னெதிரில் வந்து பிரகாசித்துக்கொண்டு, உலகத்தின் அந்தரங்கங்களையும், அங்குள்ள மர்மங்களையும் எனக்கு அப்பொழுதப்பொழுது சொல்லி என்னை ஆறுதல் அடையச் செய்கிறீர்கள். இந்த உம்முடைய தயவு கிடைக்காதவர்களின் ஜன்மம் என்ன பிரயோஜனமாம்?

கருத்து:— ராம பக்தியே தனக்கு எல்லாம் என்று ராம கைங்கர்யத்திலேயே, பூஜை, ஜபம், தியானம், கானமிவைகளிலேயேத் தன் வாழ்க்கையை நடத்திவரும் இந்த உத்தமரை அந்த காலத்தில் சிலர் பரிஹஸித்தார்களாம். "இவனுக்கு என்ன தெரியும்? உலக நடவடிக்கைகள் என்ன கண்டான்? வெறும் பாட்டும் பஜனையும் எப்பொழுது பார்த்தாலும் வைத்துக்கொண்டு, பிழைப்பை விணுக்கிக்கொள்ளுகிறுன்" என்று கடிந்துகொண்டார்களாம். இந்த வார்த்தைகள் தன் காதில் விழவும், தனக்கு

தாயும் தந்தையுமான ஸ்ரீ ராமபிரானிடமே அதை முறையிட்டுக்கொண்டு, தனக்கு ஸ்ரீ ராமபிரான் செய்யும் உபகாரத்தை வேறு யாரும் அடையகூடியதில்லை. குருவாக வந்து தத்துவோபதேசமும், நண்பனாக வந்து ஆறுதல் நிறைந்து அளவளாவுகிற மூத்து மொழிகளும், தாயாக இருந்து தன் சரீரத்தையும், தந்தையாக இருந்து தன் குடும்பத்தையும் காத்து வருகிறன் என்றும் எண்ணி எண்ணி இது பெருதவர்களின் ஜன்மமே வீணுக்கின ஜன்மம் என்றும் ஸமாதானம் அடைகிறார்.

ஈச்வர பக்தியும், ஈச்வர ஸேவா கைங்கர்யமுமே ஒருவனை எல்லாம் வல்லவனுக்கும் என்று இது மூலம் நிரூபிக்கிறார்.

நான் செய்யும் பூஜைகளில் ஸ்ரீ ராமபிரான் நேரே அமர்ந்து ஏற்றுக்கொள்ளுவதுடன், தன்னுடன் ஸம்பாஷிக்கிறதாகவே சொல்லுகிறார். ஜபக் காலங்களில் இதே தோற்றம் தனக்குக் கிட்டுகிறதென்றும், தனக்கு எதிரே தோன்றும் அந்த அழகை, நூறு மன்மத அழகுக்கு மேற்பட்டதென்றும். ஒரு சக்ரவர்த்தியின் திருகோலத்துடன் அமர்ந்து. விதம் விதமான போதனைகளிடையே உலக ஞானத்தையும், ஸகல லோகங்களின் தத்துவ ரஹஸ்யங்களையும் வெளியிட்டு, ஜன்மம் எடுத்து பிரிந்து தவிக்கும் தன்னை ஆறுதல் சொல்லி, இகம் பரம் இரண்டும் எளிதில் அறிவிக்கிறார் என்று பெருமை கொள்ளுகிறார்.

ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகள் செய்யும் பூஜைகள் திரவ்யத்தில் அளவுகொண்டு இருந்தாலும், மனஸால் அளவு கடந்தது. ஜபத்திலோ, வேறு நினைவில்லாத ஏகாக்ர சிந்தை நிறைந்தது. அதனால் ஸ்ரீ ராம தரிசனம், ஸல்லாபம் போன்ற ஸாரூப்ய, ஸாலோக பாக்கியங்களைப் பெற்றவர் இவரே என்பதில் ஐயமேது?

# நாயகியின் விருப்பம்.

நவரஸங்களில் அதிக இன்பம் அளிப்பது சிருங்காரரஸம் என்பர். அது பக்தியுடன் பரமனிடத்திலே சேர்க்கப்பட்டால் பேரின்பம் அளிக்க வல்லது. இதை அறிந்து ஆழ்வார்கள் தங்களை பகவானுக்கு நாயகிகளாக எப்பொழுதும் ஆக்கிக்கொண்டு இடைவிடாத பக்திப் பெருக்கில் ஆழ்ந்திருந்தனர். அவ்வாறே மாணிக்கவாசகஸ்வாமிகளும், சிவபக்தியில் நாயகியின் ஸ்தானத்தில் தன்னை வைத்து, நாயகனை பரமேச்வரனை அழைத்துப் பாடிப் பரவசமடைந்தார்கள். ஸ்ரீ ஜயதேவ ஸ்வாமிகளின் கீத கோவிந்தம் என்ற கிரந்தத்தில் ராதா மாதவ கேளீ விலாஸம் என்ற சிருங்கார ரஸம் அபரிமிதமாக வழங்கப்பட்டுள்ளது.

நம்முடைய மதங்களில் மாத்திரம் அன்றி பிற மதங்களிலும் இந்த ரஸமும், பக்திபாவமும் நிரம்பக் காணக் கிடக்கின்றது. ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் தம்முடைய கீர்த்தனங்களில் இந்த ரஸத்தை வெகு அளவாகக் காட்டி வந்திருக்கிறார். தன்னையே நாயகியாக வைத்துப் பேசும் பொழுது, ஸ்வபாவமாக ஏற்படும் ஸங்கோசம் முதலியவை அந்த கிருதிகளில் காணும் அளவுடன் கூடி ப்ரயோகங்களில் ஸங்கீதாம்சம் நிறைந்தும் விளங்குகின்றது.

கீழ்வரும் கீர்த்தனத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் தன்னை மறந்த பரவச நிலையில் ஸ்ரீ ராமனைத்தேடி அழைக்கிற பாவம் நன்கு விளங்கும். அந்த கிருதியை சாந்தமாக, பாவ பக்தியுடன் பாடுகிறவர்களுக்கு, அந்த சிருங்கார ரஸத்தில் பக்தியெனும் அம்ருத ரஸம் திகட்டாத இன்பம் அளிக்கக் காண்பார்கள்.

ராகம்—ஹரிகாம்போதி ] [ தாளம்—ஆதி

## பல்லவி

த்சனி தோடி தேவே ஓ மனஸா

## அனுபல்லவி

கனிகர முதோ கனி கரமிடி
சிரகாலமு ஸௌகமனுபவிம்ப வேகமே— (த்ச)

## சரணம்

பதிதுல ப்ரோசே பட்டாதி காரிணி
பரமார்த்த மத வஸிஷ்டானு ஸாரிணி
த்யுதி நிர்ஜித சத சம்பராரிணி
துரீண த்யாகராஜ ஹ்ருச்சாரிணி (த்ச)

பொருள் :— சென்று அழைத்துவா ஓ மனமே! (மனதை இங்கு அந்தரங்க ஸகியாகப் பாவிக்கிறார்) அன்புகனிந்து என்னை நோக்கி என் கரத்தைப் பற்றி நீடுழிகாலமும் ஸௌகத்தை அநுபவிக்க வேகமே (சென்று அழைத்துவா) பதிதர்களையும் (பாவிகளை) காப்பாற்றும். விருது பெற்றவரும், பரமார்த்த தத்துவங்களை (ஞான பாகத்தை) வஸிஷ்டரை அநுசரித்துக் கேட்டுக்கொண்டிருப்பவருமான, அழகால் ஜயித்த நூறு மன்மதன்களை கொண்டவரும் மூக்கியம் பெற்றுவிட்ட இந்த தியாகராஜ வின் ஹ்ருதயத்தில் ஸஞ்சரிப்பவருமான (அவரை) அழைத்துவா!

நாயகனின் பெயர் சொல்ல வெட்கப்படும் பாவை போல, இந்த கீர்த்தனத்தில், ' ராமா' என்ற பதம் எங்கும் காணப்படவில்லை. இது அவருடைய கீர்த்தனங்களில் வெகு அபூர்வம்.

நாயகிக்கு வேண்டியது நாயகனின் அழகுருவடிவம். அதில்தான் முதலில் மையல் பட்டிருப்பதைச் சொல்லுகிறார். நூற்றுக்கணக்கான மன்மதனுடைய ரூபங்கள் சேர்த்தாலும் இவர் அழகுக்கு ஈடாகுமா? அடுத்தது அவருடைய குணம் பக்தர்களையும் பாதுகாக்கும் பரத்த குணம், அடுத்தது அவருடையதயவு. இவரோ பரமாத்மா என் போன்றவர்களின் ஹ்ருதயத்தில் வஸிக்கின்றவர். இவர் எதற்கு வஸிஷ்டரிடம் வேதாந்தம் கேட்க உட்கார்ந்திருக்கிறார்? இவரேதான் வேதாந்த ஸ்வரூபி ஆயிற்றே! ஏன் அங்கே வீண் பொழுது போக்குகிறார்? இங்கே என்னிடம் வரச்சொல். என் கையைப் பிடித்து, என்னைக் கனிவுடன் நோக்கி, என் இதயத்துள் நீங்காமல் இருந்து, எனக்குப் பிரும்மானந்த ஸுகத்தைக் கொடுக்கச் சொல். ஏ மனமே! நீயே துணைசெய், அந்த ராமனிடம்சென்று அவனிடத்தில் நின்று என் அந்தரங்கத்தை அடிக்கடி அவனிடத்தில் ஸ்துதி, ப்ரணாமாதிகளால் தெரிவித்து அவனுடைய கிருபை எனக்குக் கிட்டும்படிச் செய்து எனக்கு 'ஏகாக்ரம்' என்ற ஸம்யோகம் ஸித்திக்கும்படிச் செய்வாய்! சீக்கிரமாகச் செல்வாய்!



## தன் எளிமை.

தன்னிடமுள்ள குணத்தையோ தோஷத்தையோ அதிகமாகச் சொல்லிக் கொள்வது உத்தமரின் கொள்கையாகாது. குணத்தை அதிகப்படுத்தினால் தற்புகழ்ச்சியாகும். தன்னைக் குறைத்துக்கொண்டால் என்னவாகும்? பின் சொன்ன ஸ்வபாவம் சில பெரியோர்களிடத்திலும் காணப்படும். உண்மையில் அவர்கள் தங்களை அவ்வாறு நினைக்கிறவர்கள் அல்ல. ஒருகால் தமக்கு அகந்தை வராமல் தடுக்க, அடிக்கடி தன்னிடமுள்ள தோஷங்களை நினைத்து வருந்தியும்

பிறரிடம் சொல்லியும் ஒரு பழக்கம் ஏற்படுத்தி இருப்பார்களோ என்னவோ ? ஆனால் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் தன்னை மிகவும் குறைத்துக் குறைத்து ஸ்ரீ ராமனிடம் கதறுவதைக் காண நமக்குத் தாங்கவொண்ணாத துயரம் ஏற்படுகிறது. இதுவும் ஒரு ரஸமாகக்கொண்டு தான் சில சமயம் அனுபவிக்கிறோம்.

ராகம்—ஆஹிரி] [தாளம்—மிச்ரசாபு

பல்லவி

எடுல காபாடுதுவோ— ஸ்ரீ ராமசந்திர

அனுபல்லவி

மடுமாய ஸம்ஸாரமந்து தகிலின நன்நு— (எ)

சரணம்

1 அனுதினமுனு தார தனய வர்க்காதுலபா
லனமுஸேயு கொரகு தனமுலுகலிகின
மனுஜுலபொகடி ஆர்ஜிஞ்சின வைகமுலஜூசி
தனகு ஸரிலேதனி பிகுவுன திரிகின நன்னு— (எ)

2 காயஜ ஜனக நா ப்ராயமுலெல்லனு
மாயாபூரிதுலைன தாயாதுலசேத
ஸாயபரியந்தமு காய கிலேசமு ஜெந்த
நாயெனுகானி மௌனி த்யேய
நின்னுதெலிய லேனி நன்னு— (எ)

3 சதமனி பாந்தவுல ஜதனு நம்மி மதிகி
ஹிதவுலேக யோ பதிதபாவன ஸம்
ததமு த்யாகராஜஹித ஸுர நிகரபூ
ஜித நின்னே சரணு ஜொச்சிதி கானி நன்னு
ராமா— (எ)

பொருள் :— பல்லவி ; அனுபல்லவி: மாயை நிறைந்த இந்த ஸம்ஸாரமெனும் சுழலில் அகப்பட்டுக் கொண்ட என்னை ஸ்ரீ ராமசந்திரா ! எப்படி நீ காப்பாற்று வாயோ ?

சரணம் : 1 தினமும் மனைவி மக்களைக்காப்பாற்ற பணம் படைத்தவர்களைத் துதித்து ஸம்பாதித்த தனத்தைப் பெற்றுக் கொண்டு, எனக்கு ஈடு யாருமில்லை என்று கர்வம் தலைக்கேறித் திரியும் என்னை எப்படிக் காப்பாற்றுவாயோ ?

2 மன்மதனுக்குப் தந்தையான மஹாவிஷ்ணுவே என்னுடைய நாளெல்லாம் மாயைகள் நிரம்பின பந்து வர்க்கங்களால் ( மாலை வரை அவர்களுக்காக உழைத்து உழைத்து) உடல் இளைத்துக் களைத்துப் போனதைத் தவிர, உன்னைக்கண்டு கொள்ளவில்லை, மௌனிகளால் ஆராதிக்கப்பட்டவனே ! என்னை எப்படிக் காப்பாற்று வாயோ ?

3 பந்து வர்க்கங்களையே நிலையாக எண்ணி, புத்திக்கு ஆறுதல் (சாந்தி) இல்லாமல் கிடந்தேனே. அத்துடன் பதிதர்களைப் பாவனம் செய்யும் இந்த தியாகராஜனுக்கு பலம் செய்கிறவனல்லவா, ஹே ராமசந்திரா ! தேவர்களும் உன்னை பூஜிக்கிறார்கள். உன்னை எப்பொழுதும் தஞ்சமென்று அடைந்த என்னை எப்படிக் காப்பாற்றுவாயோ !

முன் சரணங்களில் சொன்ன தோஷங்கள் சிறிதளவும் தியாகராஜ ஸ்வாமிகளுடைய ஜீவிய சரித்திரத்திலே காணப்படவில்லை. தான் சொன்னவைக்கு நேர்மாறாக வாழ்க்கை நடத்தினவர் அவர். பணத்திற்கும் பதவிக்கும் வாழ்ந்தவர் அல்ல. தனிகர்களை துதிசெய்து பணம்

பெற்றவரல்ல. அவருடைய குடும்பமோ சிறியது. மனைவி அருந்ததிக்கு நிகரான உத்தமி அவருக்கோ பெண் ஒருவள்தான் இருந்தாள். பகவன் நாமாவை தவிர வேறு ஜீவனமும் கைக்கொண்டதில்லை. பந்துக்கள் ஸ்நேகிதரர்கள் அவருடைய உபாஸனையை கொஞ்ச காலம் தெரிந்துக் கொள்ளவில்லை என்றாலும், பிறகு உலகமே கொண்டாடும் இந்த உத்தமரை அவர்கள் தங்கள் குலத்திலகமாகவே போற்றிவந்தார்கள்.

அப்படிக்கிருக்க என் இப்படி வருந்துகிறார் தான் செய்யாததை நினைத்து உருகுவானேன்! உலகத்தார்க்கு உபதேசமா? அல்லது கவியின் கற்பனைப் பாடலா? உலகத்துக்கு நேரிடையாக உபதேசிப்பவரல்லவே? தன் மனஸையே அழைத்து அழைத்துப் பேசுவாரே அன்றி தனி உபதேசகராக எங்கும் அவருடைய வாய் மொழி களில் காணவில்லையே. பின்பு ஏன் இப்படி தூக்கப்படு கிறார்.

அதற்கு ஒரு சமாதானம் தோன்றுகிறது. அதை அவரே மற்றொரு கீர்த்தனத்தில் காட்டியிருக்கிறார்.



## மும்மதமும் ஸம்மதம்.

நீங்கள் த்வைதியா, விசிஷ்டா த்வைதியா, அத்வைதியா என்று நம்மைக் கேட்டால், "இந்த மூன்றில் ஒன்று" என்று உடனே சொல்லிவிடுவோம் 'ஏன் அப்படி? உங்கள் மதத்தில் என்ன மஹிமை இருக்கிறது? மற்ற இரண்டில் காணாததை இதில் என்ன கண்டு விட்டீர்?' என்றாலும், நம்மால் கூடியமட்டும் வாதாடிப் பார்த்து, இயலாத போனால் 'எங்கள் பெரியோர்கள் கடைபிடித்தவழி' என்று சொல்லித் தப்பித்துக்கொள்வோம்.

இந்த மூன்று ஸித்தாந்தங்களையும், உண்மை அனுபவத்தில் கொண்டுவந்து, இதைவிட இதுவே சிறந்தது என்று சொல்லக்கூடிய பழுத்த அனுபவ நிலை மஹான்களுக்கே, அவதார புருஷர்களுக்கே கைகூடுவது. பொதுவாக நாமும் சில சமயங்களில் த்வைதிகளாகவும், சிலசமயம் விசிஷ்டாத்வைதிகளாகவும், அத்வைதிகளாகவும் அமைந்துவிட வேண்டியிருக்கிறது. இன்னும் சாதாரணமாக உலக இயல்பில் நோக்கினுல், அத்வைத உணர்ச்சி எப்பொழுது நம்மை ஆட்கொள்கிறது என்பதும் தெரியவரும். எல்லா தெய்வங்களும் ஒரே ஈச்வர ஸ்வரூபம். மதங்களை த்வேஷிக்கலாகாது. எல்லா மதங்களும் அந்த ஈச்வரனை அடையவே வழிகாட்டுகின்றன. எல்லா ப்ராணிகளும் ஈச்வரனின் படைப்பு. அவைகளில் ஈச்வரனே விளங்குகிருன். நாம், பிறர் என்று பேதமில்லாமல் அன்பினுல் ஒன்றுபடவேண்டுமென்று இவ்வாறெல்லாம் நாம் உணர்ச்சி வசப்படுகிறபொழுது, சிறிதளவு அத்வைத நிலையை அடையப் பார்க்கிரேம். இருந்தாலும், ஆண்டவனின் சக்தியும் அவனுடைய அபார மஹிமையும் எண்ணுதல் முடியாது. எத்தனையோ படிகளில் தாழ்ந்து கிடக்கும் நான், ஒரு ஜீவன். அவன் எண்ணிறந்த படைப்புகளில் நானும் ஒருவனே அல்லாமல் அவன் பக்கலில் நிற்கவும் எத்துணை தயவுகள் கிடைக்க வேண்டும்? என்று நெஞ்சம் நெக்குருகும் எளிமையில் த்வைதியாகிரேம். ஸர்வேச்வரன் துணையிருக்க பயமேன்? அந்த ஸர்வேச்வரன் எவ்வளவுக்கவ்வளவு சக்தியுள்ளவரோ, அவ்வளவுக்கவ்வளவு என்னைக் காக்குமன்றே! கருணை என்ற ப்ரவாக

சக்தியுங்கொண்டவர். நான் எவ்வளவு கடையனேயாயி னும், 'ஹே மஹாதேவ! ஹே, வாஸுதேவ!' என்று பெயரிட்டு அவரையழைத்துத் தஞ்சமென்றுவந்தடைந் தேனுயின், என்னைத் தன்னிடத்தில் சேர்த்து மேன்மை பொருந்திய தனது பதத்தை எனக்கு அளிப்பவர் என்று துணிவுகொள்ளும் நேரம் விசிஷ்டாத்வைதிகள் ஆகிறேம். ஆக, மூன்று மத ஸித்தாந்தங்களின் உட் கருத்துக்களைத் தெரிந்தவர்களும் தெரியாதவர்களும், புரிந்து கொள்ளக் கூடியது. ஒன்றான அந்தப் பரம்பொருள் பற்பல வடிவங்களில் ஆவிர்ப்பவித்து, நம்மைத் தன் வசப்படுத்துகிறுன் என்பதே.'

இங்கு ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் தமது பக்திப் பெருக்கால் ஸ்ரீ ராமபிரானையே அறிந்து வழிபட்டவர். பரமசிவத்தை எப்படி மங்களம் பொங்க துதிக்கிறுர் ? என்று பார்ப்போம். ஸத்யசீலராதலால், இவருடைய சொல்லிலும் அந்த சொல் புறப்படும் நாதத்திலும், அந்த நாதத்தில் அடங்கின தன் ஹ்ருதய பாவத்தி லும், ஸதாசிவ மூர்த்தியை எப்படிக் கண்டு இன்புறுகு கிறுர் என்றும் விளங்கும்.

ராகம்—ஸிந்துராமக்ரியா] [தாளம்—ஆதி.

பல்லவி

தேவாதி தேவ, ஸதா சிவ
தினநாத ஸுதாகர தஹன நயன— (தே)

அனுபல்லவி

தேவேச பிதாமஹ ம்ருக்ய ஸமாதி
குணபரண கௌரீ ரமண— (தே)

சரணம்

பவ சந்த்ர கலாதர நீலகள
பானு கோடி ஸங்காச ஸ்ரீசனுத
தவ பாத பக்திம் தேஹி தீனபந்தோ
தரஹாஸ வதன த்யாகராஜ னுத— (தே)

பொருள்:— பல்லவி: எல்லா தேவதைகளுக்கும் மேலான தேவனே. ஸதாசிவ! ஸூர்யன், சந்த்ரன், அக்னி இவர்களை உம்முடைய முக்கண்ணில் வைத்திருக்கிறீர்களல்லவா?

அனுபல்லவி:— தேவேசனென மஹா விஷ்ணுவும் பிதாமஹரான பிர்ம்மாவும் உம்மை தேடினார்கள்! ஸமாதி என்ற ஆத்மானந்தனை உம்மிடம் ஆபரணமாக இருக்க, தேவி கௌரியுடன் இசைந்து விளங்குகிறீர்.

சரணம்:— ஹே பவ! சந்த்ரனை சிரஸில் வைத்திருக்கிறீர்! கழுத்தும் கறுத்திருக்கிறது. கோடி ஸூர்யனின் ஒளிபெற்றவர் தாங்கள், ஸ்ரீ காந்தனை விஷ்ணுவும் உம்மைத் துதிக்கிறார் அன்றோ! தீனர்களுக்குப் பந்து· புன்சிரிப்பு பூத்த முகப்பொலிவு கொண்டிருக்கிறீர். நித்ய மங்களகரமான ஸ்வரூபத்துடன் விளங்கும் (ஸதாசிவ) தாங்கள், இந்த தியாகராஜனுக்குத் தங்கள் திருவடியை மறவாதிருக்கும் பக்தியை அருளவேண்டும்.

கருத்து:— ஸதாசிவமும், ஸ்ரீராமனும் நிஷ்கள தாரக பிரும்மத்தின் ஸகலமான வெவ்வேறு தோற்றங்களே அன்றி, இரண்டும் ஒரே ஆனந்தமயமான பரமாத்மாவே என்ற வேதோபநிஷத்துகளின் முடிவைக் கண்டு கொண்டவர் ஆதலின், இருவரையும் ஸ்ரீ தியாகபிரும்மம் தர்சிக்கும் பொழுது அபேதமான ஆனந்தமடைகிறார்.

# ஏகாந்த சேவை.

உடலெடுத்தவர் எவராயினும் இவ்வுலகில் ஏதே னும் ஒரு கர்மாவைச் செய்யாமல் இருக்க முடியா தல்லவா? அவரவர்க்கு விதித்துள்ள கடமைகளைப் பிடித்தமோ, பிடித்தம் இல்லையோ செய்யவேண்டியவ ராகின்றனர் உடலுக்கு அதிக சிரமம் இல்லாததும், உள்ளத்திற்கு சிறிது இன்பம் காண்பதுவும், எளிதில் பயனைத் தர வல்லதுமானதும் நமக்குப் பிடித்த கடமைகளாகின்றன. இதைச் செய்வதில் இயல்பாக ஊக்கம் உண்டாகிறது. இந்த விருப்பந்தரும் செயல் கள், எண்ணியபடி பயன் அளிக்காவிடிலோ மனம் நொந்து, புத்தி தளர்ந்து, துக்கம் உண்டாகிறது. ஒரு துறவி அவ்வாறு விரும்புவது விரும்பாதது என்று எண்ணமில்லாதவன், ஆசையை ஆரம்பத்திலேயே கிள்ளி எறிந்தவன். அவன் ஆசையோ வேறோர் இடத்தில் நிலையாக நிற்பது. அகண்ட விஞ்ஞானத் தின் மூலப்பொருளான ஸர்வேச்வரனிடத்தில் தனித்து வாழ்கிறது. ஈச்வரனின் பல்வேறு தோற்றங்களில் மனம் பதிந்து, அதன் ரஸத்தையேப் பருகிப்பருகி பிறரால் விவரிக்கமுடியாத தனி இன்பத்தையே எந் நாளும் அடைந்து வாழவே அவன் முயற்சிகள் அவன் உலகில் மற்றவரைப்போல் செய்துவரும் கடமைகளும், இதற்கே சாதனமாகிறது சித்தத்தைத் தெளிவுபடுத்துகிறது. பலர் கூடியிருக்கும் இடத்தில் அவன் இருந்தாலும், அவன் உலகம் தனியே.

ஓர் அறையில் ஒருவனைத் தாளிட்டு வைத்தால் அவன் தனிமையில் இருப்பவன் ஆவனோ?

மற்றவர்களுக்கு இவன் இங்குதான் இருக்கிறான், இன்னது செய்துகொண்டிருப்பான் என்று தெரியும்' அவனுக்கும், நாம் அறையில் இருக்கிறோமே! மற்ற வர்கள் வெளியிலே இருக்கிறார்களே! எப்பொழுது வெளியே போய்விடுவோம் என்று எண்ணமிட்டுக் கொண்டிருக்கும். இது உண்மையில் தனிமை ஆகாது.

एकाकी यतचित्तात्मा निराशीर परिग्रहः ।

என்று கீதையில் பகவான் உபதேசித்த ஏகாகியின் நிலை வேறு. आत्मानम् रहसिस्थितः தன்னை யாரும் அறிய வொண்ணுது எல்லாவற்றையும் எப்பொழுதும் ஒடுக்கிக்கொண்டு, இன்ப ரஸத்தில் தியானித்து, அத்துடன் உலக வாழ்க்கை என்னும் யந்திரமும் ஓடிக் கொண்டிருக்கச் செய்கிறவன் யோகியாகிறான்.

இந்த யோகநிலைக்கு ஓர் எடுத்துக் காட்டாக வாழ்ந்து வந்தவர் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள். ஸ்ரீ ராம பிரானுடைய திருவடி ஸேவையே அவர் வாழ்ந்த தனி உலகம். மற்றவருடன், இருந்தும், பேசியும், பாடியும், உபதேசித்து வந்தாலும், அவர் சித்தமெல்லாம், ஸ்ரீ ராமனிடமே நிரந்தர நித்யவாசம் செய்தது. அதனுல்தான் அவரை ஒரு ஜீவன் முக்தர் என்று பெரியோர்கள் போற்றுகின்றனர்.

இந்த ஒரு கீர்த்தனத்தில், தானடைந்த ஏகாந்த அனுபவத்தை நமக்கும் சிறிது காண அவர் இசை வழியாகவந்த வாய்மொழி உதவுகிறது. அந்த ஏகாந்த ரஸத்தை நாமும் சிறிது பருகலாம் வாருங்கள்.

ராகம்—தன்யாஸி] [தாளம்—ஆதி

### பல்லவி

ராமாபிராமா மனஸு ரஞ்ஜில்ல பல்கக ராதா— (ரா)

### அனுபல்லவி

ஈமகினி வெலஸின தேல ஸதா நாதோ— (ரா)

### சரணம்

பங்காரு மேடி பான்புபை பாமாமணி ஜானகி
ச்ருங்கா ரிஞ்சு கொனி செலுவொந்த நின்னு கனி
பொங்குசு மல்லே விருல பூஜிஞ்சு வேள ஸ்ரீஹரி
ஸங்கீதமு பாடுமனி ஸ்வாமி தியாக ராஜுதோ— (ரா)

பொருள்:— *ஹே ராம, எல்லோர் மனத்தையும் வசப்படுத்தும் அபிராமா! இந்த உலகத்தில் அவதரித்தது எதற்காக? எப்பொழுதும் என்னிடத்தில் மனம்களிக்கும் படி சொல்லக்கூடாதா? (என்னைப்போன்றவர்களுக்காகத் தான் தாங்கள் இந்த உலகில் அவதரித்தீர்களல்லவா! 'ஆமாம்' என்று சொல்லுங்களேன்.) என்னிடத்தில் பேசமாட்டீர்களா? இதோ என் தாயார் ஜானகி வருகிருள்! தங்கத்தால் ஆன மஞ்சத்தில் பெண்களின் திலகமான ஜானகி தேவி தன்னை அலங்கரித்துக்கொண்டு மிகுந்த ப்ரகாசமுடன் ஸ்ரீ ஹரியான தங்களை தரிசித்து உள்ளம் பொங்கி வரும் ப்ரேமையுடன் மல்லிகை மலர்களால் அர்ச்சித்துப் பூஜிக்கும் வேளையில் (தங்களிடம் ஒன்று சொல்லுகிருள்) ஸ்ரீ ராமா இந்த தியாகராஜனிடம் ஒரு பாட்டு பாடு என்று சொல்லக்கூடாதா?*

கருத்து :— ஸ்ரீ ராமபிரானை நிதமும் முறைப்படி பூஜை செய்து வருகிறவர் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள். புஷ்பார்ச்சனை நடந்துக்கொண்டிருக்கிறது, ஆனால் அவர் உள்ளம் தனித்து ஸ்ரீ ராமமூர்த்தியின் ஏகாந்த ஸன்னதிக்குச் சென்றுவிட்டது. அங்கே அவர் கண்ட காக்ஷி இந்த கீர்த்தனம் மூலமாகத் தெரியவருகிறது.

"தங்கமயமான மஞ்சம். ஸ்வாமி ஸ்ரீ ராகவன் அதி ஸௌந்தர்யமுடன் வீற்றிருக்கிறார். தாயார் ஸீதாபிராட்டி மிக்க எழிலுடன் அங்கு வந்து மல்லிகை மலர்களால் அர்ச்சனைச் செய்கிறாள். நானும் அங்கு இருக்கிறேன். எழிலில் மயங்கிக் கிடந்த என்னைச் செயலில் ஈடுபடுத்தி தனக்கு ஸேவைச் செய்யத் தூண்டுகிறாள் தாயார். என் கானமே அவருதகந்த ஏகாந்த ஸேவை.

* * *

## ஆத்மா, ராம ஸேவை.

ஸ்ரீ ராமசந்த்ர மூர்த்தியை பரமாத்மா என்ற பாவனையில் கொண்டு ஈடுபடுகிறவர்கள் நித்ய முக்தர்களாகத் திகழ்கின்றனர். மற்றும் பலர் அந்த பரமாத்மாவை நமக்கு ஸகல அபீஷ்டங்களையும் பூர்த்தி பண்ணிவைக்கும் ஓர் கற்பகத் தருவாகவும் நினைத்து வழிபடுகின்றனர். அவர்களும் அப்படியே அவைகளை அடைந்து இன்புறுகின்றனர். ஆனால் இந்த இரண்டிற்கும் இடையே, "தன்னை உலகம் மெச்சிக்கொண்டாட வேண்டும், தனக்கு நிறைய பொருள் கிடைக்க வேண்டும்" என்ற அற்ப ஆசையுடன் சிலர் ராம பக்தர்கள் போல் வேஷம் போட்டுத் திரிகின்றனரே! இவர்களுடைய பிழைப்பிற்கும் ராமனே உதவுகிறானா?

ஸ்ஞுஞதி கர்மாக்களும், பூஜையும், ஜபமும் ஒருவனுக்குச் சித்தத்தைச் சுத்தப்படுத்தவல்லவோ ஏற்பட்டது. அதில் அஹங்காரம் என்ற களை படராமல் இருக்கவல்லவோ தர்ம சாஸ்த்ரங்கள் இவைகளை விதித்திருக்கின்றன. அதற்கு மாருக இந்த அஹங்காரம் எனும் அழுக்கைச் சேர்த்துக் கொள்ளவே, இந்த நித்ய நைமித்திக கர்மாக்களை ஒருவன் செய்துக்கொண்டு போனல் இதைவிட பரிதாபம் வேறு உண்டோ ?

இந்த பரிதாபத்தைக் கண்டு இரங்கி, தன் உள்ளத்தை ஸ்ரீ ராமனுடைய ஸந்நிதியில் முறையிடுகிருர் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள். இந்த கீர்த்தனத்தில் ராகபாவமும், அது அமைந்துள்ள ஹம்ஸகதியும், அவருடைய தூய்மையான மனதை வெளிகாட்டுகிறது.

ராகம்—கரஹரப்ரியா] [தாளம்—ஆதி.

பல்லவி

நடசி நடசி ஜூசே ரயோத்யா
நகரமு கானரே— (ந)

அனுபல்லவி

புடமி ஸுத ஸஹாயுடை செலங்கே
பூர்ணுனி ஆத்மா ராமுனி கூடியாட— (ந)

சரணம்

அட்டெ கனுல கூர்ச்சி தெரசி ஸூத்ரமு
பட்டி வெலகி வேஷ தாருலை
புட்டு சாவு லேனி தாவு தெலியக
பொகடேரு த்யாக ராஜநு துனி— (ந)

பொருள்:—பல்லவி: முயன்று முயன்று பார்த்தாலும் அயோத்யா நகரத்தைக் காணமாட்டார்கள்.

அனுபல்லவி:— பூமியின் பெண்ணான ஸீதாஸமேதனாகத் திகழும் பரிபூர்ண ஸ்வரூபனான, ஆத்மானந்தமளிக்கும் ஸ்ரீராமனுடன் கலந்துகொண்டாா. (முயன்று முயன்று பார்த்தாலும் அயோத்யா நகரத்தைக்காணமாட்டார்கள்)

சரணம்: அப்படியே கண்களை மூடிக்கொண்டும், திறந்துக்கொண்டும், கையில் ஜபமாலை வைத்துக்கொண்டும், வெளி வேஷம் போட்டுக்கொண்டும், பிறப்பு இறப்பு இவைகள் நீங்ின முக்திமார்க்கத்தை அறியாமல் (ஏதேதோ) பேசிக்கொண்டும், இந்த தியாகராஜன் அறிந்து அனுபவிக்கும் என் ராமனை (முயன்று முயன்று பார்த்தாலும் அயோத்யா நகரத்தைக் காணமாட்டார்கள்)



# மனதிற்கு உபதேசம்.

நமக்கு அந்தரங்கமான நண்பன் நம்முடைய மனமல்லவா? இது வைத்துக்கொண்டிருக்கிற நம்முடைய ரஹஸ்யங்களும் மர்மங்களும் வேறு எங்கும் அறிந்து கொள்ளமுடியுமா? மனதிற்குள் மாசிலன் ஆதல் அனைத்தே அறம் என்ற போதனை இத்தனை ரஹஸ்யங்களையும் வைத்துக்கொண்டு திண்டாடும் மனத்திற்கு எப்படி எட்டும்? பிறர் பெருளைக் கொஞ்சம் நாட்கள் வைத்திருப்பவன் அதைச் சிறிதாவது அனுபவிக்க நினைக்காதிருப்பானு? இத்தனை எண்ணங்களையும் தேக்கி வைத்துக்கொண்டிருக்க இந்த மனமானது, கொஞ்சமாவது செயல்படுத்த ஆசைப்பட்டு அலைந்து கொண்டிருக்கிறது.

"இவ்வளவு மர்மங்களைத் தெரிந்து கொண்ட என் மனமே! உனக்கு இன்னொரு அதிசயம் சொல்லு கிறேன். அதையும் வாங்கிப் போட்டுக்கொள். இந்த அதிசய மர்மம் என்றுவது ஒரு நாள் உனக்கு உபயோகமாக இருக்கும். உன் வீண் அலேச்சலேயா வது தவிர்க்கும்" என்று ஸ்ரீ ஸ்வாமிகள் இந்த நளின காந்தி ராக கீர்த்தனையில் சொல்லிக்கொள்ளுகிருர்.

ராகம் — நளினகாந்தி] [தாளம் —ஆதி.

### பல்லவி

மனவியால கிம்ப ராதடே
மர்மமெல்ல தெல்பெ தனே மனஸா— (ம)

### அனுபல்லவி

கனுடைன ராம சந்த்ருனி
கருணுந்தரங் கமு தெலிஸின நா — (ம)

### சரணம்

கர்மகாண்ட மதா க்ருஷ்டுலே பவ
கஹன சாருலே காஸி ஜெந்தக
கனி மானவ அவதா ருடை
கனிபிஞ்சி நாடே கடத் தியாக ராஜு— (ம)

பொருள்: ஏ மனமே! என் வேண்டுகோளை கேட்கக் கூடாதடா? என் மர்மங்களை எல்லாம் தெரிவிக்கிறேனே. பெருமைகள் நிறைந்த ராமசந்திரமூர்த்தியினுடைய? கருணை நிறைந்த அந்தரங்கத்தைப் (பெற்றிருக்கிற) அறிந்திருக்கிற என் வேண்டுகோளைக் கேட்கக் கூடாதா

கரும காண்டத்தில் காட்டின வழிகளை பற்றியவர்களை யும் ஸம்ஸாரம் எனும் காட்டில் திரிந்து திரிந்து அலை கிறவர்களையும் கண்ணேக்கி மனிதனுக அவதரித்து நடத்திக் காட்டினுனே.

கருத்து:— கருமாக்களை அனுஷ்டித்து வருகிற இந்த ஸம்ஸாரிகள் தாபம் அடைந்தால், அவர்கள் அதி னின்று மீளலாம் என்று ஸ்ரீ ராமாவதாரத்தில் தானே நடத்தி காட்டியுள்ளான். இதை மனமே, தெரிந்து கொண்டால் உனக்கு யாதொரு கவலையும் ஏற்படாது.

---

# நீயே துணை.

இந்த உலகத்தில் நாம் யாதொரு துணையும் இல்லாமல் வாழ முடிகிறதில்லை. நம்முடன் கூட வாழும் மனிதர்களின் உதவி பலவகையில் நமக்குத் தேவைப் படுகிறது. இப்படி உதவி செய்பவர்களை உற் ருர், உறவினர், நண்பர்கள், ஊரார், அரசாளுபவர், யஜமானர், ஸேவகர்கள் என்று பலபேர்கள் சூட்டி அவர்களால் நாம் பிழைத்துக் கொள்கிரேம். நமக்கு உதவ மறுப்பவனை பகைவன், த்வேஷி என்று ஒதுக்கு கிரேம். நம்முடைய வாழ்க்கையில் பிராணிகளும், பறவைகளும், செடி, கொடி, மரம் முதலியவையும் உதவுகின்றன. நமக்குத் தேவைப்பட்ட நன்மைகளை அவரவர்கள் தங்களுக்கு இயன்றவரை செய்கிருர்கள். பாலைக்கொடுக்கும் பசு தன் கன்றுக்கு மட்டும் அன்றி நமக்கும் கொடுக்கிறது. நாம் பசுவைக் காப்பாற்று கிரேம். காக்கை அசுத்தத்தை உண்டு, நம்மாலும்

பிழைக்கிறது. அப்படியே ஒருவருக்கொருவர் பயனை அடைந்து துணையாக இருந்து வாழ்கிறோம். நம்முடைய சரீரத்திலேயே ஓர் அங்கத்திற்கு மற்றோர் அங்கம் உதவுகிறது. முதுகில் தினவு எடுத்தால் கை இயன்ற மட்டும் சென்று உதவப்பார்க்கிறது. சிலருக்கு ஓர் அங்கம் பழுதானாலும், மற்றோர் அங்கத்தின் பலத்தால் அந்தக் குறையை நீக்கிக் கொள்ளுகிறார்கள். கண் தெரியாதவனுக்குக் காது நன்றாகக் கேட்கிறது. காதில்லாதவன் (செவிடன்) கண்ணால் குறிப்பை ஒரு நொடியில் புரிந்துக் கொள்கிறான், ஊமையன் உடலால் உழைத்துப் பயன் பெறுகிறான். காது, கண், வாய் மூன்றும் இல்லாதவன் தொட்டறிந்து புரிந்து கொள்ளுகிறான்.

அதனால் எப்படியும் மனிதனுக்குத் துணை எத்தனையோ விதம் பகவான் படைத்திருக்கிறார். அதனால் அவருக்கோ எந்தவித உபயோகமுமில்லை. எதிர்பார்ப்பதும் இல்லை. பின்பு ஏன் இத்தனையும் படைத்து விட்டு ஒன்றையும் எதிர்பாராமல் இருக்கிறார்? அவருக்குத் தேவை என்பதே கிடையாதோ? அவருக்கு யாருடைய உதவியோ துணையோ வேண்டியதில்லையோ பெருவாழ்வு வாழ்பவன் சிறு ஏழையின் உபகாரத்தை லக்ஷியம் பண்ணுவானா? அப்படியோ? இதற்குத் தகுந்த பதிலை ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகள் இந்தக் கீர்த்தனத்தில் ஸ்ரீ ராமபிரானிடம் பேசிக்கொண்டே சொல்லிக்காட்டுகிறார்.

ராகம்-ஜுஜாவளி] [தாளம்—ஆதி

### பல்லவி

பராகு சேஸின நீகேமி
பலமு கலிகெரா பராத்பரா— (ப)

### அனுபல்லவி

ஸுராவனி ஸுராப்த மா
வராஜ ரூப கண நாயட— (ப)

### சரணம்

மு தான நீது பதார விந்த
முலனு பட்டி ம்ரொக்க கலேதா
நி தான ரூப தரிதா புலே
து தார ஸ்ரீ த்யாக ராஜனுத — (ப)

பொருள்:— பல்லவி: பராமுகமாக இருந்தால் உனக்கு என்ன பலன் உண்டாகும்? நீ பராத்பரனல்லவா?

அனுபல்லவி: (ஸுர, அவனி ஸுராப்த) தேவர்கள், பிராம்மணர்கள் இவர்களுக்கு வேண்டியவன் நீ, (மாவர) ஸ்ரீலக்ஷ்மி நாயகன். (அஜர) கிழத்தனம் இல்லாதவன் (அபகண) அழகு நிறைந்த மேனியன். அப்பேர்பட்ட உனக்கு என்னிடம் பராமுகம் ஏற்படுவதேன்?

சரணம்: (முதான நீது) மகிழ்ச்சியுடன் உன்னுடைய பாதாரவிந்தங்களைப் பிடித்து நமஸ்கரிக்கவில்லையா? எல்லாவற்றிற்கும் முதன்மையான (நிதான ரூப) ரூபமுடையவனே! (தரிதாபுலேது) வேறு கதி எனக்கு இல்லை. நீயோ வாரி வழங்கும் உதாரகுணம் படைத்

தவன். உன்னையே துதிக்கும் இந்த யோகராஜனை என்னிடம் ஏன் பாராமுகம்?

கருத்து: வேத மார்க்கத்தைக் கடைபிடிக்கும் விப்ரர்களும், அவர்களுடைய கர்மாக்களால் திருப்தி அடைந்து பூமியைத் தங்களுடைய பௌதிக சக்தியால் மகிழ்விக்கும் தேவர்களும். உன்னால் காப்பாற்றப்படு கிறவர்கள். உன்னுடைய ஆப்தர்கள்.

உலகில் ஸம்பத்தையும், ஸௌபாக்யத்தையும் அளிக்கும் ஸ்ரீ தேவி, உன்னை ஸேவித்து ஸேவித்து உல குக்கு வேண்டியது அளிக்கிறாள்.

காலத்திற்கு அகப்படாத, என்றும் நீங்காத யௌவ னத்துடன் அழகுடைய திருமேனியுடன் விளங்குகிறவன் நீ. உதாரகுணம் படைத்த பிரபு அல்லவா? மற்றொரு வனை முதல்வனாக அடையாமல் நீயே எவற்றிற்கும் முதன்மையானவன்.

ஆதலின் எல்லாம் பெற்றிருக்கிற உனக்கு என்னால் ஆகவேண்டியது என்ன? நானோ பிறர் துணையில் மூச்சு விடுகிறவன். ஒன்றும் எனக்கென்றில்லாதவன். எதற் கும் பிறரை நாடுகிறவன். உன்னிடமோ எல்லாம் நிறைந்து காணப்படுகிறது. உனக்கு ஒருவரிடமிருந்து பெறவேண்டியது எதுவும் இல்லை. ஆனால் உன்னிடத் தில் வாரிக் கொடுக்கிறதென்ற உதார குணம் இருக் கிறது! அந்த குணத்தை என்னிடம் காட்ட வேண்டிய திற்குப் பதிலாக பாராமுகமாக இருக்கிறாயே? நான் உனக்கு ஏதாவது செய்ய வேண்டுமென்று என்னிடம் எதிர்பார்த்தால் எனக்கென்று என்ன இருக்கிறது?

ஒன்று இருக்கிறது! சொல்லட்டுமா. ஸ்ரீ ரகமா உன்னையே கதி என்று உன் பாதாரவிந்தங்களைப் கெட்டியாகப் பிடித்துக்கொண்டிருக்கிற காரியம் இருக்கிறது. அதற்கும் அசைந்துக்கொடுக்காமல் பராமுகமாக இருந்தால் அதில் உனக்கென்ன லாபம்? கொடுத்து விட்டால் உன்னுடைய நிதி குறைந்துபோய்விடுமா? நான் என்ன கேட்டேன்? எல்லா காலத்திலும், எல்லா வகைகளிலும் நீங்காத உன்னுடைய துணையை தானே கேட்கிறேன்! எத்தனையோ துணைகளுடன் என்னைப் படைத்தாலும், எல்லாவற்றிற்கும் மூல காரணமான உன்னையேதான் ஒவ்வொன்றிற்கும் காடி நிற்கிறேன். என்னை ரக்ஷித்தருள வேண்டும் பராத்பரனே, ஸ்ரீ ராமச்சந்திரா?



## பரிஹாஸ வார்த்தை.

தனக்கு ஸ்ரீ ராமனைத் தவிர வேறு பந்து யாருமில்லை என்று உறுதி கொண்ட ஸ்வாமிகள் சில ஸமயம் ஸ்ரீ ராமபிரானின் அனுக்ரஹம் தனக்கு கிடைக்காமல் போய்விட்டதோ என்று கவலைப்பட்டு, அந்த உள்ளத்தின் வேதனையே கானமாக அவரிடம் எழுந்து இருக்கிறது. ஸ்ரீ ராமனின் அருள்தான் பூர்ணமாக இவருக்கு கிடைத்திருக்கிறதே! அந்த ராம பக்தி எனும் செல்வமே இவருக்குப் போதிய ஐஸ்வர்யம் என்று நினைப்பவர் இன்னும் ஏன் கவலைப்படவேண்டும்? குழந்தை எப்படித் தன் தாயாரை விட்டு ஒரு கணமும் பிரிய நினையாதோ, பதிவ்ரதை தன் கணவன் நினைவிலிருந்து ஒரு நிமிஷமும் நீங்காதவளோ, ஏதேனும் சூழ்நிலையில் தாய் குழந்தையைப் பிரிந்தாலும், குழந்தை வாடுமன்றோ! அதன் ஏக்கம் பிறர் அறிய முடியுமா? அதேபோல் கணவன் வெளியூர்

சென்றால், மனைவி அவனையே நினைத்து அன்னம், அலங்காரம் விரும்பாதவாறே போல், தனது கணவன் வேறு கவனமாக இருந்தாலும், மனைவி தன்னை கணவன் மறந்து விட்டாரோ என்று வீண் மனக்கவலை படுவதே போல், ஏதாயிலும் ஒரு சூழ் நிலையில் ஸ்ரீ ராமபிரான் தன்னை மறந்து விட்டாரோ என்று சஞ்சலம் இயற்கையாக உதித்து அதைத் தன் கானவாயிலாக வெளிப்படுத்துகிறார். அப்படி வெளிவந்துள்ள அநேக கீர்த்தனங்களில் கீழ்வருவதும் ஒன்று

ராகம்— நாடகப்ரியா] [தாளம் — ரூபகம்.

பல்லவி

பரிஹாஸ கமா மாட
பதிகுரிலோ பொகடினதி— (பரி)

அனுபல்லவி

வெரபுன னனு மானமுன
வெஸனம்புன நே கோரி
சரணாகத ரக்ஷக நினு
ஸந்ததமுனு சரணண்டே— (பரி)

சரணம்

ஓகமுனிகை த்ரௌபதி
த்வாரக நிலயா சரணனக
ஒகமாடகு விபீஷணுடு
ஓர் வலேக சரணனக
ஸகலேச்வர ப்ரஹ்லாதுடு
ஜாலிசே சரணனக
ஹிதகருடை ப்ரோசிதிவே
த்யாகராஜுனி மாட— (பரி)

பொருள் :— பல்லவி; (என் சொல் உனக்கு) பரிஹாஸமாகத் தோன்றுகிறதா? பல (பத்து) பேர் முன்பு நான் சொன்னது பரிஹாஸமா?

அநுபல்லவி: பயப்பட்டும் வருந்தியும் துயரப் பட்டும் சரணாகதரக்ஷகனை உன்னை நான் வேண்டி எப்பொழுதும் சரணமென்று வேண்டிக்கொண்டேனே! அது பரிஹாஸ வார்த்தையாகத் தோன்றுகிறதா?

சரணம்: தூர்வாஸர் என்ற ஒரு முனிவருக்காக அன்று த்ரௌபதி, த்வாரகையில் வஸிப்பவனே. உன்னைச் சரணடைந்தேன் என்று அழைத்தது (பரிஹாஸ மாகத் தோன்றவில்லையா?) (தன் தமையன் சொன்ன) ஒரு வார்த்தைப் பொறுக்காத விபீஷணன், உன்னைச் சரணமென்று கடல் கடந்து வந்தானே, அது பரிஹாஸ மாகத் தோன்றவில்லையா? துக்கத்துடன் ப்ரஹ்லாதன் ஸகல வஸ்துக்களில் விளங்கும் ஈச்வரனை உன்னை அழைத்து சரணமென்றானே, அது பரிஹாஸமாகத் தோன்றவில்லையா? இத்தனைபேர் சொன்னது பரிஹாஸ வார்த்தையாக எடுத்துக்கொள்ளாமல் உண்மை என நம்பி அவரவருக்குத் தக்கபடி வந்து காப்பாற்றினையே! அப்படி இருக்க இந்த தியாகராஜன் சொன்னது மாத்தி ரம் சிரிப்புக்கும் அலக்ஷ்யத்திற்கும் ஆளாவதேன்?

கருத்து:— பக்தர்களைத் தேடிச்சென்று காப்பாற் றும் கருணை வடிவான ஸ்ரீராமனின் அனுகூலத்தை தான் அறிந்து கொண்டு அனுபவிக்கிறார்.

தன் அடுப்பங்கரை விஷயமான ஓர் சங்கடத்திற்கு பகவானை அழைத்தாள் த்ரௌபதி. பரமபதம் கொடுக்கும் பரமாத்மா இதை பரிஹஸிக்காமல் ஓடி வந்து அவளுக்கு உதவினன். தூர்வாஸர் பிக்ஷைக்கு வந்து விட்டார். அக்ஷயபாத்ரம் கவிழ்த்தாகி விட்டது. இனி மறுநாள் தான் ஆகாரம் உண்டாகும். இந்தக் கஷ்டத்தில் ஹா கிருஷ்ணா! த்வாரகாவாஸி! என்று த்ரௌபதி கதறவே பகவான் ஓடிவந்து அக்ஷய பாத்ரத்திற்குள்ளே இருந்த கீரையையும், சோற்றையும் தான் புஜித்து உலகமெல்லாம் திருப்தியடையச் செய்து தூர்வாஸரை பிக்ஷைக்கு வராமல் தடுத்து விட்டார்.

இந்த அற்பமான செய்கைக்கு த்ரௌபதி தன்னை அழைக்கிறளே என்று அலக்ஷியம் பண்ணுமல் வந்தான் அல்லவா ?

அண்ணன் 'வெளியே போ — நீ துரோஹி' என்று சொன்ன சொல் காரணமாகக்கண்டு உயரக்கிளம்பி ஸ்ரீராமனுடைய ஸமீபம வந்து சரணம் என்ற விபீஷணனை வேறு கவனம் இன்றி தன்னுடன் சேர்த்துக் கொண்டான். நல்ல நிலையில் வந்தாலும் பொல்லாதவனக வந்தாலும், என் செவி கேட்க சரணம் என்ருன். அதுவே அதிகம் என்று சொன்னது பெரிய சாஸ்த்ர வாக்யம் ஆகியதே.

தகப்பன் கொடுமையில் உம்மை அழைத்து "நீர் எங்கும் நிறைந்தவர்" என்று நிரூபிக்க உம்மை

தூணில் காட்டியதை வேடிக்கையாக நினையாமல் அதையே, மெய்ப்பிக்க ஸ்தம்பத்தில் புதுமைத் தோற்றம் கொண்டு வந்தீரே?

ஒவ்வொருவரும் ஒரு காரணத்தைக்கொண்டு. அதுவும் வெகுசிறியதொரு காரணத்தைக் காட்டி உம்மை அழைத்தார்கள். நானோ உம்மை ஒரு காரியத்துக்கோ காரணம் பற்றியோ அழைக்கவில்லை. பத்து பேருடன் கூடி (ஸத்ஸங்கத்தில் திளைத்து) உம்மை ஸதா பாடிக் கொண்டிருக்கிறேன். நான் எதிர் பார்ப்பது தங்களிடத்தில் மூன்று வித சிகிச்சை.

1 என் பயத்தைப் போக்கவேண்டும், என்னை தாங்கள் கைவிடும்படி நான் ஏதேனும் குற்றம் செய்து விட்டேனோ என்ற பயந்தான்.

2 அடிக்கடி ஏற்படுகிற ஸம்சயம் என்னை விட்டு ஓடச் செய்யவேண்டும். என் ஸ்வாமி! என் அபராதங்கள் கோடியானாலும், நான் தகுதியற்றவனாயினும் என்னைக் கைவிடமாட்டான் என்ற உறுதி ஏற்பட வேண்டும்.

3 என்னை வேறு கதியில் சேர்க்காமல், உன் திருவடியிலேயே பற்றுக்கொள்ள வைத்து உன்னிடமே சேர்த்துக் கொள்ளவேண்டும், இதுவே என் துயரம்.

ஆதலில் இந்த மூன்றும் உன்னைப்பற்றினதேயன்றி என்னைப் பற்றிய ஹேது எதுவும் இல்லை. நான் சரணடைந்தேன் என்பது, உண்மையாக எடுத்துக் கொள்ள தக்கது. பரிஹாஸம் வேண்டாம். என்னிடம் தயவுகாட்ட வேண்டும் ஸ்ரீராமா!

# ஸங்கீத ஞானம்.

ஸங்கீதம், ஞானத்தை அடைவதற்கு உதவும் ஓர் ஸாதனம். ஞானம் முக்தி என்ற ஜீவனுக்கு பிறப்பு இறப்பு முதலான துன்பங்களினின்றும் விடுபடச் செய்யும் நிலையை அளிக்கும். அந்த ஞானநிலை சரீரத்தோடு இந்த ஜன்மத்திலேயே பெற்றிருப்பவர்களை ஜீவன் முக்தர்கள் என்று அழைக்கிறோம். சரீரம் போனபிறகு, அடுத்த பிறவி எதுவும் தொடராமல் எங்கும் வ்யாபித்திருக்கும் பரப்ரும்மத்தினிடம் ஒன்றிப்போவதை விதேஹ முக்தி என்றும் அழைக்கிறோம். இந்த ஜன்மத்திலேயே பிறவியின் பயனைத் தெரிந்து, இன்ப துன்பங்களில் நடுநிலைமை கொண்டு, என்றும் ப்ரும்மத்தை தியானம் செய்து, எடுத்த பிறவியில் கிடைத்த கடமைகளை, தருமத்தை பற்றில்லாமல் செய்துகொண்டு, இடைவிடாது ஈச்வரனை பஜிப்பவர்கள், ஜீவன் முக்தர்களின் வழியைப் பின் பற்றுகிறார்கள். அதனால் இஹத்திலே பரத்தைக் காண்கிறார்கள்.

கானம் செவிக்கு இன்பம் தருகிறது. அதில் கேட்போர்க்குக் கிடைக்கும் இன்பத்தால் மனம் ஈடுபட்டு மயங்குகிறது. இதை 'ரக்தி' 'ராகம்' என்று பெயரிட்டு அழைத்தால், இதே 'ரக்தி' 'ராகம்' உலகில் காணும் பொருள்களிடத்தும் வைக்கும் அன்பு அல்லது ஆசை அல்லது பாசம் இவைகளுக்கும் பெயராக அமைகிறது. உயர்வான ஸங்கீதம் தன் வசப்படுத்தும் என்றதால் அதில் ஹ்ருதயத்தில் உணர்ச்சியைப் பெருக்கக்கூடும் தன்மையும் இருக்கிறது. உணர்ச்சியை தூண்டிவிடுகிறது என்பதனாலேயே ஸங்கீதம் பயிலுவதை நம் வைதீக மார்க்கத்தில் எச்சரித்து விட்டார்கள். இந்த உணர்ச்சிப் பெருக்கை ஈச்வரனிடம் வைக்கும் அன்பாக்கி இசையை ஆண்டவனின் ஸேவையாக

செய்து விட்டால், உன்னுடைய உணர்ச்சி பரவசம் நல்ல இடத்தில் பயனுள்ளதாக ஆகும். மனம் லயிக்கும் தெய்வத்திடம் வைத்த பற்றுதல், மற்ற பற்றுகளை நீக்கிவிட உதவும்.

தெய்வத்தின் வடிவம் ஆகாசமயமானது என்று உபநிஷத்துக்களின் கருத்தானதால், அதாவது வடிவமற்றது என்றதால், தெய்வத்தின் நிலை எவ்வாறு ஸாமான்யமானவர்களால் அறியக்கூடும். எப்படிப் பாடுவது? எப்படி மனம் அந்த தெய்வத்தில் லயிக்கும்? நம்மை வசப்படுத்த, நம் நினைவில் என்ஞான்றும் அன்பின் பல பல வகைகளால் தம் லீலைகளை நினைப்பவர்க்குப் பரவசமாக்க, பரப்ரும்மமான அந்த தெய்வம், உலகில் காணுவதற்கு உரிய லக்ஷணங்களுடன் ப்ரகாசமாக மானிட உருவில் ஸ்ரீ ராமபிரானாக அவதரித்தது அதன் பெரும் கருணையே யாகும்.

ஸங்கீத ஞானம் என்றால் பாடும் திறமை, பாட்டின் திறமை, அல்லது அந்த ஸங்கீத சாஸ்திரத்தின் லக்ஷணங்களை மாத்திரம் அறிந்து கொள்வது என்பதல்ல ஸங்கீதத்தினால் அடையக்கூடிய (நாத உபாஸனையினால் பெறக்கூடிய) ஆனந்தம் என்று பொருள் செய்துகொண்டால், அந்த நாதோபாஸனை ஒரு ஜன்மத்தில் எல்லோருக்கும் கிட்டக்கூடியதல்ல. அதுவும் பல தொடர்புகளால் முதிர்ந்த (ஜன்மாந்தரங்களில் ஏற்பட்ட புண்ணிய பலன்) அனுபவம் ஒன்றாலேயே அடையக்கூடியதாகும.

இந்த ஞானத்தைப் பெற்றவர்களே நம்முடைய பூர்வர்கள். நாரதர், தும்புரு, மதங்கர், அகஸ்தியர், சார்ங்கதேவர், பரதர், நந்திகேஸ்வரர், இப்படித்தாகிய மஹரிஷிகளில், புரந்தரதாஸர், தியாகப்ரும்மம் போன்றவர்களும் நம் யுகத்தில் அவதரித்த யோகபுருஷர்கள்.

ஸத்குரு ஸ்ரீ தியாகப்பிரும்மத்தின் வாழ்க்கை இந்த மஹான்களின் வழியிலே வந்த ஜீவன் முக்தர் இவர் என்று அறிந்து போற்றற்குரியது. அவருக்கு 'ஸ்வரார்ணவம்' என்று ஸங்கீத சாஸ்திர நூல், ஓர் யதியினுல் (நாரத மஹரிஷியினுல்) கொடுக்கப்பட்டது. அதை அறிந்து, நாதோபாஸனையின் மூலமாக, ஸ்ரீ ராமனைப்போற்றி ஹ்ருதயத்தில் வைத்து, வளர்த்து, ஸங்கீதத்தின் மேன்மையால், ஸ்ரீ ராமன் என்ற அந்த பரப்ரும்மத்தின் ஆனந்தத்தில் கலந்து விட்டார். அதனுல் அவர் அனுபவித்த இன்பத்தைக் கீழ் வரும் கீர்த்தனத்தின் மூலம் நமக்கும் அறிவிக்கிருர். ஜீவன் முக்தராகி எண்பது பிராயம் வாழ்ந்து விதேஹ முக்தியைத் தன் முயற்சியினுல், ராமன் கருணையாலும் அடைந்தவர் ஆதலால், அவருடைய வாக்குபொய்யா வாக்கு. உபநிஷத், வேதவாக்காகும்.

ராகம்—தேவகாந்தாரி] [தாளம்—ஆதி.

### பல்லவி

ஸீதாவர ஸங்கீத ஞானமு
தாத வ்ராய வலெரா ராம— (ஸீ)

### அனுபல்லவி

கீதாத்ய கிலோ பனிஷத் ஸார
பூதஜீவன் முத்துடௌடகு— (ஸீ)

### சரணம்

ஆகாச சரீரமு ப்ரஹ்மமனே
ஆத்மா ராமுனிதா ஸரிஜூ'சித்ஸத்ஸ
லோகாதுலு சின்மயமனு ஸஸ்வர
லோலுடௌ த்யாக ராஜ ஸன்னுத— (ஸீ)

பொருள்:— *ஸீதாபதியே, ஸ்ரீ ராமா, ஸங்கீதத்தை (சாஸ்த்ரீய ஸங்கீதத்தை) பாடியோ, கேட்டோ அடையக்*

கூடிய பேரின்ப அனுபவம் (ஒருவனுக்குக் கிட்டவேண்டு மானல்) படைத்தவன். (விதி) (தலையில்) எழுதி இருக்க வேண்டுமடா. கீதை முதலிய எல்லா (வேதாந்த) உப நிஷத்களின் முடிவான கருத்தை தெரிந்து கொண்டு ஜீவன் முக்தன் என்ற நிலையை அடைவதற்கு (ஸீதாவர! ஸங்கீதம் உதவக்கூடியது என்று ஞானம் பெற உன் னருள் இன்றி ஒருவனுக்கு இயலுமா?) பரப்ரும்மத் திற்கு சரீரம் ரூபம் இவைகள் இல்லை. ஒன்றும் இல்லாத வெட்ட வெளியான ஆகாசத்தை ப்ரும்மத்தின் சரீரம் என்று வேத, உபநிஷத்துக்கள் அழைக்கின்றன. (அந்த ஆகாசத்தில் பரமாத்மா சப்தம் அல்லது நாதம் என்ற குணத்தால் அறியப்படுகிருன்) ஆகாசத்தையே சரீர மாகக் கொண்டு பரப்ரும்மமாக ஸ்ரீ ராமனையே, தன் ஹ்ருதய ஆகாசத்தில் நாத மயமாகக்கண்டு கொண்டு தனனிடத்தில் அந்த பரமாத்ம பாவனை நன்கு ஈடுபடச் செய்துக் காணும் உலகங்களும், உலகப் பொருள்களும் அந்த ப்ரும்மமே வ்யாபித்துள்ளது என்றும் தெளிந்து சுத்த சாஸ்த்ரீய ஸங்கீதத்தில் நிலைத்திருப்பவன் ப்ரும்மா னந்தத்தைப் பெறுகிருன். அதற்கு ஆண்டவன் அருள் வேண்டுமே அன்றி இவனுல் மாத்திரம் அடைந்து விட முடியாது.

கருத்து:— கீதை, வேதங்கள், உபநிஷத்துக்கள், முதலியவை ஒருவனுக்கு நித்யானந்தம்பெறும்வழிகளில் ஜிவன முக்தனுகி இருத்தலையே மிகப் பெருமை உள்ள தாகக் கூறுகின்றன. அந்த ஜீவன் முக்தனின் நிலை ஸித்திக்க, ஸுஸ்வரமான ஸங்கீதமும், அதில் ஈடுபாடும் அந்த ஸங்கீத உபாஸனையுமே நன்கு உதவக்கூடியது. உண்மையான ஸங்கீத ஞானம் என்பதும் எல்லோர்க்கும் கிட்டக்கூடியதல்ல. அதற்கு பூர்வஜன்ம புண்ணியம் வேண்டும். அல்லது ஆண்டவன் திருவருள் பெற வேண்டும்.



# சுக ஜீவனம்

ஜீவனோபாயம் பலவிதம். இந்தக் காலத்தில் பொருள் தேடுவதுதான் நம்முடைய ஜீவதசையில் தாத்பர்யம் என்று பொழுது நமக்குப் போகிறது. இது ஒரு காலக்ஷேபம். (காலத்தைக் கழிப்பது) ''பொருள் இலார்க்கு இவ்வுலகம் இல்லை. அருள் இலார்க்கு அவ்வுலகம் இல்லை'' என்ற பழமொழியை நன்கு கடைபிடிக்கிறோம். நாம் பார்க்கிறது இவ்வுலகம் தானே. ஆதலின் பொருள் இல்லாது போனால் நாமே இல்லாமல் போய்விடுவோமே என்று அஞ்சி பிறந்த நாள் முதல் பொருளுக்கே நம்மை வளர்த்து விடுகி றோம். அருள் அவ்வுலகத்தில் தானே. அவ்வுலகமோ மறைபொருள். ஆதலால் அருளும் நாம் மறந்திருக் கும் பொருள்தானே! எப்படியாயினும் பக்தி பண்ணு என்பதற்கு பதிலாக எப்படியாவது, எந்தத் தொழிலா வது செய்து பிழைப்பைத்தேடு என்று நாம் ஆகிவிட்டோம்.

நம்முடைய முன்னோர்கள், ஏன்? நம்முடைய ஞாபகத்தில் இருந்த நம்முடைய குலத்து மூதாதையர் களும் பொதுவாக நம்மைப்போல் இப்படிப் பொரு ளுக்கு அலைந்ததில்லை. அவர்கள் சிறியதிலும் கண்டது திருப்தி என்னும் செல்வம். அதிலேயே அவர்கள் நின்றுவிட்டார்கள். நாம் அபிவிருத்தி அடைந்துவிட்டோம். திரைகடல் பறப்பதும் திரவியம் தேடுவதும் ஒரு சாதாரணமான செயல் என்றாகிவிட்ட நிலையிலே நாம் வளர்ந்துவிட்டோம். அப்படிப்பட்ட தருணத்தில் ஸத்குரு ஸ்ரீ தியாக ப்ரும்மம் போன்ற உத்யோகம் ஏதும் இல்லாத ஓர் ஏழை, சொல்லும் பிழைப்பு வழி நம் செவியில் படுமா இருந்தும் கேட்டுப் பார்ப்போம்.

ராகம்—நாதஸ்வராளி] [தாளம்—ஆதி

பல்லவி

ஸ்ரீபதே நீ பத சிந்தனமே ஜீவனமு—

அனுபல்லவி.

நேபரதேசி நாகாஸி—பாபவே
ஸனுவுன தயசேஸி— (ஸ்ரீபதே)

சரணம்

ராஜாதி ராஜ ரவிகோடி தேஜ
பூஜிஞ்சி நின்னிந்த்ராதுலு திக்
ராஜுலை வெலய லேதா
ராஜில்லு ஸ்ரீ தியாகராஜுனி கி— (ஸ்ரீபதே)

**பொருள்:**— *ஸ்ரீ தேவியின் பதியான ஸ்ரீ ராமா! உன்னுடைய பாதத்தை சிந்தித்திருப்பதே என்பிழைப்பு. நான் பரதேசி (பரம தரித்திரன்). என் மீது ஆதரவோடு தயவு வைத்து காப்பாற்றுவாய் சக்ரவர்த்தியே! கோடி ஸூர்யனின் ஒளியைக் கொண்டவனே உன்னைப் பூஜித்து இந்திரன் (வருணன், யமன், வாயு, நிருருதி) முதலான தேவர்கள் திக்கின் (லோக) பாலர்களாக விளங்க வில்லையா! நன்றாக (ஸௌக்யமாக) இருக்கும் இந்த தியாகராஜனுக்கு (உன் பாதத்தை சிந்தித்திருப்பதே பிழைப்பு).*

*ஸ்ரீ ஸத்குரு தன்னை ஒரு பரதேசி என்று பகவானிடம் சொல்லிக்கொண்டார். தன் தேசத்தைவிட்டு பிற தேசங்களுக்குச்சென்று, பிழைக்க விரும்புகிறவன்*

பரதேசி. இவனுக்குத் தன் சொந்த இடத்தில் பிழைப்பு இல்லை. அதனால் வேற்றூருக்குப்போய் பிழைக்கிறான். கஷ்டம், உன் சமீபத்தை விட்டு இந்த உலகத்தில் வந்து திண்டாடுகிறேனே! ராமா! இதுதான் என் பரதேச நிலை.

ஆயினும் ஒருவழி, பிழைக்கும்வழி தெரிந்து கொண்டேன். எந்தவெளி தேசங்களுக்குச் சென்றாலும், தன் சொந்த ஊரை (பிறந்த இடத்தை) நினைக்காதவனுண்டா? அதுபோல இந்த உலகில் வந்தாலும் உன் பாதத்தையே நினைத்துக் கொண்டிருக்கிறேன். இது தான் என் ஜன்மாவில் நான் செய்யும் வேலை. இப்படி இருந்தால் எப்படிப் பிழைப்பது? வயிறு இதனால் நிரம்பி விடுமா என்று கேட்பீரோ. சொல்லுகிறேன்.

உலகத்தை ஆளும் சக்திக்குக் காவலர்களாக பெரிய அதிகாரம் வஹிக்கிறார்கள் திக்பாலர்கள் என்ற தேவதைகள். மழைக்கு அதிகாரி இந்திரன், நெருப்பு ஒளி பெறச் செய்பவன் அக்னி, ஜலத்தைக் கொடுப்பவன் வருணன், காற்றை அலையச் செய்கிறவன் வாயு, இப்படி இவர்கள் பெரும் அதிகாரத்தை எப்படிப் பெற்றார்கள்? ராமா, உன்னைப் பூஜித்துத்தானே பெற்றார்கள்? அல்லது இவர்களாகவா அதை அடைத்து விட்டார்கள்?

உபநிஷத்துக்களில் சொல்லப்பட்டதைபோல உன் தயவு இல்லாவிடில், இவர்கள் தனியாகவோ அல்லது ஒன்றாகச் சேர்ந்தாலோ, ஒரு துரும்பைக்கூட அசைக்க முடியாதே. உன்னையே ஸ்மரித்துத் தான் இந்தப் பெருமையை அடைந்தார்கள். நானோ உன்னை நினைப்பதை அன்றி வேறொன்றை நினைப்பதை அறியவில்லையே! அதனால் தான் நான் எப்பொழுதும் (பரதேசி) ஏழையாகவே கிடக்கிறேன் என்று சொல்லுகிறார்கள்.

எனக்கு வேறு பிழைப்பு தெரியாதே ராமா! உன்னையே தான் நம்பிகிடக்கிறேன். உன்னிடம் வைத்த என் உறுதி யான நம்பிக்கைதான் நான் பார்க்கும் உத்தியோகம். நீ என்னிடம் புரியும் கிருபைதான் எனக்கு ஊதியம். இது போதுமே? இதுவே என்னை உன்னுடைய திவ்ய தேச மான பாத ஸன்னிதியில் சேர்த்து விடாதோ!

கருத்து: பகவானை நினைத்திருப்பதுதான் நாம் பெற்ற ஜன்மாவின் முக்கிய ப்ரயோஜனம். மற்றவை மற்றவை இடையிலே வந்த அவாந்தர ப்ரயோஜனம்.

ஸ்ரீ ராம பாத சிந்தனமே ஸுக ஜீவனம்.



## நாரத குரு.

மனித குலம் நன்கு வாழ வழிவகுத்தளித்தவர் வேதவ்யாஸ மஹா முனிவர். இவர் அளித்த நூல்களைக் கற்றவரும் கல்லாதவரும் பெருமைபெறும் வழிகாட்டிய வர் அம்மஹானே. அறிந்தவர் சிலரே. அறியாதவரோ உலகில் கோடி கோடியானவர். கடலைக் கண்டவர் கடலின் இனிய காற்றை அனுபவிக்கின்றனர். ஆனால் அக் கடலின் காற்றுதான் மழை பெய்யும் மேகமாக நாடெங்கும் செல்கிறது. கடலைக் காணாது பல காதங் களுக்கு அப்பால் வாழ்பவரும், கடல்தரும் மழையின் சிறப்பால் வாழ்கின்றனர். அதேபோல வ்யாஸ பகவா னின் இதிஹாஸ புராண வாக்குகள் இந்த பரந்த உலகில் எத்தனை எத்தனை மதத்தவர்களோ, எத்தனை எத்தனை நாகரீகங்களோ, சிந்தனைகளோ, புத்தித்திறங் களோ அத்தனையும் கொண்டவை. "உலகில் உள்ள எதுவும் இந்த மஹா பாரதம் என்ற இதிஹாஸத்தில்

சொல்லப்பட்டுள்ளது. அல்லது இதில் காணுத எந்த கருத்துக்களும் உலகில் எங்கும் காணமுடியாது'' என்று தன் கிரந்தத்திற்கு நூன்முகம் கொடுத்தவர் அவரே. அதையறிந்து, உணர்ந்து பேறுபெறும் நாமெல்லோரும் ஸமுத்திரக் கரையில் வாழும் புண்ணியசாலிகள். நம்முடைய மதத்திற்கு வைதீக மதம் என்றுதானே பெயர். அந்த வேத வழியைப் புகட்டி நடை முறையில் கலந்துகொள்ளத் திறனளித்தவர் வேதவியாஸர் என்ருல் அவருக்கும் வழித்தோன்றலாக விளங்கியவர், விளங்குபவர், ஸ்ரீ நாரத மஹரிஷியாவர். நாரதபகவானைக் குருவாக அடைந்த ஸ்ரீ தியாகராஜரின் காருமிருதத்தின் மூலமாக அந்த மஹா புருஷனின் பெருமையை நாமும் சிறிது அறிந்து கொள்வோம்.

ராகம்-தர்பார்] [தாளம்-ஆதி.

### பல்லவி

நாரத குரு ஸ்வாமி இகனைந நந்
நாதரிம்ப வேமி ஈகறவேமி— (நா)

### அனுபல்லவி

ஸாரெகு ஸங்கீத யோக நைகம
பாரங்கதுடைன பரம பாவன— (நா)

### சரணம்

இதிஹாஸ புராணுகம சரிதமு-லெவரி வல்ல கலிகே
பதினி தானமிய்ய புத்தி ஸத்ய-பாம கெடுலு கலிகே
த்வுதி ஜித சரதப்ர நினுவிஞமுனி-யதுல கெவரு கலிகே
க்ஷிதினி தியாகராஜ விநுத நம் மிதி
சிந்த தீர்ச்சி ப்ரஹ்லாதுனி ப்ரோசின— (நா)

பொருள்: — இனிமேலாவது என்னை ரக்ஷிக்க மாட்டீர்களா என்ன? இந்த பஞ்சம் ஏன்? என்றும் ஸங்கீதத்துடன் இசைந்த வேத வழியை நன்கு அறிந்து அதில் கலந்துவிட்டவரான மிகவும் சுத்தமானவரன்றோ தாங்கள்! ராமாயணம், பாரதம் போன்ற இதிஹாஸங்களும், பாகவதம் போன்ற புராண சரித்திரங்களும் யாரால் உண்டாகியது? தன் கணவனையே தானமாகக் கொடுக்க விரும்பின புத்தி, ஸத்யபாமாவுக்கு எவ்வாறு உண்டாகியது? சரத்காலத்தில் ஆகாசத்தில் விளங்கும் மேக கூட்டங்களின் வெண்மையும் தோற்கும் தூய வெண்ணிறம் உடையோனே!

நீரில்லாமல் முனிவர்களுக்கும், பசிகட்கும் யார் உதவி செய்தார்கள்? இந்த பூமியில் இந்த தியாகராஜனும் ஏற்றித் தொழும் பெரியோனே!

நம்பினேன் — என் சித்தாகுலம் தீர்க்க (வரவும்)

ப்ரஹ்லாதனைக் காப்பாற்றிய ஸ்ரீ நாரதகுரு ஸ்வாமியே!

கருத்து: ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளுக்கு ஒரு சமயம் நாரதருடைய தர்சனம் கிடைத்ததென்றும் அதையடுத்து அவருக்கு "ஸ்வரார்ணவம்" என்ற பழைய சங்கீத சாஸ்த்ர கிரந்தமும் கிடைத்ததாகவும் அவர் சரித்திரத்தில் அறிகிறோம். தியாகப்ரும்மம் தனக்கு குருவாக அருள் செய்த நாரத ப்ரும்மத்தை அந்த ராஜவித்யா பாரங்கதனை, பெரும் ஸிம்மாஸனமிட்டுத் தர்பாரில் அமர்த்தி, அன்னாருடைய மிகவும் விஸ்தாரமான

பெருமைகளை ஐந்து ரத்தினங்களாக காட்டியிருக்கிறது அதிசயம். (ஒன்று) வேத பாரங்கதன், (இரண்டு) வேதத்தால் உலகைப் பயனடையச் செய்ய இதிஹாஸ புராணங்களை அளித்தவர், (மூன்று) ஸாமான்ய புத்திக்கும் உதவும் அதிசய வைத்தியன். (நான்கு) தபஸ்விகளை வாழவைக்கும் சிந்தனையுடையோன். (ஐந்து) மறைவில் இருந்தபடி யாவர்க்கும் (அதிகார பேதமின்றி) உபதேசம் செய்து அருள்பவன்.

1 வேதபாரங்கதன்:—வேதத்திற்கு ஶ்ருதி என்று பெயர். கேட்கப்பட வேண்டியதன்றி, எழுதப்படுவதல்ல) அதற்கு சப்தமே ப்ரமாணம். இதன் உற்பத்தி ஆகாசம், ப்ரணவ ப்ரகாசமே. அதைக் கானம் செய்தவர் நாரத மஹரிஷி, மஹதி என்ற வீணையில் சுத்தமாக ஸ்வரங்களுடன் வேதத்தை இசைத்து, தன் வாக்கால் பாடி உலகை மகிழச் செய்பவர். ஆதலின் ஸங்கீதம் வேதமே, வேதத்தின் கீதமே என்று காட்டிய முதல் வழிக் குரு நாரதரே.

2 இதிஹாஸம்:— ராமாயணம் ஆதி காவ்யம். அதைப் பாடினவர் வால்மீகி—பாடச்செய்தவர் நாரதர். பின்பு வ்யாஸர் அளித்த பாரதம் என்ற மாபெரும் இதிஹாஸத்தையும் அமைக்க அருள்செய்தவர் நாரதரே. இதிஹாஸங்களையும், புராணங்களையும் அளித்த வ்யாஸ முனிவருக்குச் சாந்தி கிட்டுவதற்காக ஸ்ரீ நாரத மஹரிஷியே பாகவத புராணம் பாடும்படி அமைத்தார். ராமாயணம் ஒரு கீதகாவ்யம். பாரதம் அப்படி அமையாவிடினும், அதில் மிகவும் முக்யமானது பகவானின்

கிதம். பாகவதம் முழுவதும் பக்தியில் சுவைத்த கீதங்கள்.

3 ஸத்யபாமையின் கர்வம்போக, நாரதர் அவளைத் தூண்டி, ஸ்ரீ கிருஷ்ணனையே தானமாக வைத்துக் கொடுக்கச் செய்தார். இப்படியொரு பழைய கதை. ஒரு சமயம் ஸத்யபாமை தன் கணவனை வசப்படுத்தும் வழி என்ன என்று நாரதரைக்கேட்க, அவரும் யுக்தி யொன்று சொன்னார். பதியையேத் தானம் கொடுத்து பிறகு பதிக்குச் சரி எடை தனத்தை வைத்து அளித்து மீட்கலாம் என்றார். ஸத்யபாமை ஸ்ரீ கிருஷ்ணனிடம் இதைச் சொல்ல அவரும் இசைந்தார். ஸத்பாத்திரம் நாரதருக்கே கிருஷ்ணனைத் தானம் செய்து விடும்படித் தீர்மானிக்கப்பட்டது. நாரதர் கிருஷ்ணனைப் பெற்றுக் கொண்டார். அவரை மீட்க வேண்டி, அடுத்தபடி துலாபாரத்தில் சரி எடை இட்டுப் பார்க்க, தன் உடைமை எல்லாம் அளித்தாலும், கிருஷ்ணமூர்த்தியின் தட்டு கனத்து கீழேத் தங்கியது. இனி ஒன்றும் மிச்சமில்லை. பிறகு கிருஷ்ணபகவானை மீட்க வழி தெரியாமல் ஸத்யபாமை கலங்க, ருக்மிணி மனதால் தன் பதியை நினைத்துத் தன் பதிபக்தியையே பொருளாக வைத்து, அங்கு ஒரு துளஸீ தளத்தை இட்டு அர்ப்பணித்தாள். அந்த தட்டு கனத்துக் கீழே இறங்க, பகவானின் தட்டு மேலேச் சென்றது. கணவனையோ, தெய்வத்தையோ பக்தியினால்தான் (அன்பினால்தான்) வசப்படுத்த முடியும் என்று அறிவிக்க நாரதர் ஏற்பாடு செய்த விளையாட்டு, ஸத்யபாமைக்கு மறக்கமுடியாத ஒரு பாடம். அதன் கருத்து நமக்கு ஏற்கத்தக்கது என்பதால்

ஸ்வாமிகள் அதை உதாஹரணமாகச் சொல்லியுள்ளார். உலகெலாம் தேடியும் காணாத பரமபுருஷனை பகவானை பாமை பதி என்ற நெருங்கின உறவால், மறந்து, அவரையே தானம் கொடுக்கத் துணிந்தாள். இதற்கு உடந்தையாக இருந்தவர் நாரதர். ஸத்யபாமைக்கு க்ருஷ்ண பக்தியின் மேன்மையை உணர்த்துவதற்காக, அவள் வழியில் புத்தியைக் கிளறிவிட்டு வைத்தியம் பண்ணினார். இப்படி நாரதர் வரும் கதைகள் இல்லாத புராணங்களே இல்லை. ஸாமான்ய புத்திகொண்ட ஜனங்களுக்கும் அவர் துணைவர்.

4 யோகிகள், தபஸ்விகள் இவர்கள் துயரம் எல்லாம் பகவானிடம் சென்று முறையிட்டு, ஸாது ரக்ஷணம் செய்யப் பகவானை அவதரிக்கச் செய்தவர்.

5 கர்ப்பத்தில் இருக்கும் சிசுவென்றும் நினையாமல், பகவத் குணங்களையும், அஷ்டாக்ஷரத்தையும், அதன் உட்பொருளையும் ப்ரஹ்லாதன் என்ற அசுரன் வீட்டுக் குழந்தைக்கு உபதேசித்தவர்.

இக்கலியில் ஆதரவில்லாத இந்த தியாகராஜனை வாழ்விக்க ஸூக்ஷ்ம தரிசனம் கொடுத்து, மறைவாக வந்து, ஸ்வரார்ணவம் என்ற அரிய சாஸ்த்ரத்தை ஸங்கீதம், யோக நைகம வேதசாஸ்த்ரம் என்று காட்டியதும் அவரே. நாரத ஸ்வாமி! இதுபோன்ற உயர்ந்த குணங்களால் என்னைப் பலமுறை காப்பற்ற வேண்டும் என்று தியாகராஜ ஸ்வாமிகள் நாரத ப்ரும்மத்தின் பெருமையைப் பாடி மகிழ்ந்தார்.



# அன்பெனும் கோபம்.

அன்பு எங்கு அளவின்றி இருக்கிறதோ, அங்கே சிலசமயம் அளவு கடந்த கோபமும் உண்டாகும். ஆனால் இந்த கோபம் அன்பின் வகையே. இதனால் அன்பு இன்னும் அதிகரிக்கும். தான் வைத்திருக்கும் அன்புக்குப் பாத்திரமானவர் தன்னை மறந்தவர்போல் சிலசமயம் தோன்றுவதற்கும் அன்பின் அதிகமே காரணம். தான் முழு அன்பை அவரிடம் செலுத்துவது போல், தன்னையன்றி வேறொருவரை நினைத்தாலோ, பேசுதலோ வேறெதிலும் ஈடுபடுவதோ கூடாது என்ற மனப்ராந்தியில் கோபம் த்வனிக்கிறது. அதனால் தன் அன்புக்குகந்தவரை பலவாறு நிந்தித்துப் பேசுவதும் அவர் தன்னை நிராகரித்து விட்டார் என்று ஏங்கிக் கிடப்பதும் உண்மை அன்பின் சின்னங்களே.

தன்னுள் எழுந்த கோபத்தால் அவரை ஏசினாலும், என்றுவது அவருடைய இன்முகம் காணின் இந்த கோபமெனும் மூடுபனி சூரியனைக் கண்டது போல் மறைந்து, இருமனமும் ஒன்றாகி சொல்லற்கரிய இன்ப நுகர்ச்சியில் சிக்கிக்களிக்கின்றது.

இதை ஸ்ரீமத் ராமாயணத்தில், ஸ்ரீ ராகவன் ஸீதையை நினைத்திருப்பதும், தேவி ஸ்ரீ ராகவனை நினைத்து உருகுவதும், தன்னிலையை ஸ்ரீ ஜானகித் தாயார் அநுமானிடம் தனது உள்ளத்தின் ஆருத் துயரத்தைக் கொட்டிக் கொட்டிக் கதறி ஆறுதல் பெறுவதையும் காண்கிறோம்.

ஸ்ரீ ராமனே ஏகபத்னி வ்ரதன். அவரிடம் அதிசய ப்ரேமை கொண்ட ஸீதாதேவி பிரிந்து புலம்பினது எந்த நெஞ்சையும் உருக்கும்.

அந்தத் தேவியாரின் இடத்தை வேறுயாருக்கும் பகவான் அளிக்கவில்லை. ஸ்ரீ ராமாவதாரத்தில் தேவி ஒருவளுக்கே இந்த ப்ரேமை ரஸம் அளிக்கப்பட்டது. ஸ்ரீ தியாக ப்ரும்மம் ஸ்ரீ ராமனிடத்தில் தான் கொண்ட ப்ரேமை, தாயார் ஸீதாதேவியார் ஸ்ரீ ராமபிரானிடம் வைத்த ப்ரேமைக்கு எவ்விதத்திலும் குறைந்ததில்லை. ஆனால் ஸ்ரீ ராமமூர்த்தி தேவிக்குத் தன் அன்பை வாரிச் சொரிந்தார். தனக்கு அது கிட்டினதே இல்லை என்று பலதரம் கதறியிருக்கிறார். நான் ரொம்ப பேராசைக் கொண்டவன் ராமா! என்று வெட்கம் விட்டுப்பேசி ராமனைத் தன்னிடம் அழைத்திருக்கிறார். "மரகதமணி வர்ண" என்ற வராளிராக கீர்த்தனத்தில் "தரணீ தனய குன்ன ப்ரேம ரஸமு தியாகராஜுனகீயன்ன" என்று "பூமியின் பெண்ணான ஸீதாபிராட்டிக்களித்த ப்ரேமை இன்பத்தை இந்த தியாகராஜனுக்கு அளித்திடுவாய்" என குழைந்து குழைந்து கதறியுள்ளார்.

அந்த நெருக்கமும், பகவானிடம் கொண்ட சலுகையும் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு ஒரு சமயம் கோபத்தை உண்டாக்கியது. அதன் விளைவே கீழ்தரும் கீர்த்தனம். அதன் ராகம் அமீர் கல்யாணி. கோபத்தில்வரும் தெய்வீகச் சொற்களின் கம்பீரத்தையும் அதிகாரத்தையும், இந்த ராக நடை சித்தரிக்கிறது. பாடப் பாடத் திகட்டாது. அதன் உள்ளுணர்வையும் சொல்லின் நயத்தையும் நினைக்க நினைக்க எவர் மனமும் உருகும்.

ராகம்—அமீர்கல்யாணி] [தாளம்—ஆதி

பல்லவி

நீ தாஸானு தாஸுடனனி
பேரே ஏமி பலமு — (நீ)

### அனுபல்லவி

பேத ஸாதலந்து நீகு ப்ரேமலேக போயே— (நீ)

### சரணம்

ஸரிவாரிலோ நன்னு த்ஸெளக சேஸிதிவிகானி
கருணிம்பலேக நீது கர்மமனேதவுகானி— (நீ)
ரோஸமுலே தாயே ருசிரவர்க்குலு போயே
தாஸுல ப்ரோசிதிவட த்யாகராஜு இலலோ—(நீ)

பொருள் :— *ஸ்ரீ ராம! நான் உன்னுடைய தாஸ னுக்கும் தாஸன் என்று பேர்பெற்று என்ன பலன்?*

*தீனர்களிடத்தில் உனக்கு (நிஜமாக) அன்பில்லாமல் போய் விட்டதே!*

*எனக்கு ஸரிஸமானமானவர்களிடத்தில் என்னை அவமானமடையச் செய்து விட்டாயே! "உன்னிடம் கருணை காட்ட முடியவில்லை. உன்னுடைய கர்மா அப் படிப் பட்டது." என்று என்னைச் சொல்லுகிருயோ?*

*உனக்கு ரோஷம் இல்லையா! இனிக்கும் வார்த்தை கள் (ஒன்றும் இனி) எனக்கு இல்லாமல் போய்விட்டதே! தன்னடியார்களைக் காப்பாற்றுகிறவன் என்று உன்னைச் சொல்லுகிறார்களே? அது உன் தாஸானுதாஸனுன தியாகராஜனிடம் இல்லையா! இதெல்லாம் பயனில்லாத வெறும் புகழ்ச் சொற்கள்தானு!*

கருத்து :— *இப்படி ஸ்வாமிகள் புலம்ப, பகவான் இவரை என்ன செய்து விட்டார்? இவர் பகவானிடத் தில் என்ன எதிர்பார்த்து ஏமாந்து விட்டார்? அல்லது அவர் சொல்வதே போல் இவை எல்லாம் கவியின்*

சொற்கள்தானு! நிந்தா ஸ்துதி என்ற ரஸத்தோடு அமைத்த ஸாஹித்ய கர்த்தாவா இவர்?

ஸத்குரு வெறும் கவியல்ல, காயகர் அல்ல. அல்லது மற்றவரைப்போல பக்தியும் பூஜையும் செய்து கொண்டிருப்பவரும் அல்ல. மற்றவர்கள் இம்மஹானை புரிந்துக்கொள்ளாமல் இவர் ஒரு பாடகர், பஜனைக்கார பக்தர் என்றெல்லம் பேசுவது இவருக்கு அவ்வளவு வேதனை தருகிறது. என்னை எல்லோருடன் சமமாக எண்ணும்படியாகி விட்டதே? நான் உன்னிடத்தில் கலந்து விட்டவன் என்பதை நீ அறிந்தும் நீ பார்த்துக் கொண்டிருக்க மற்றவர்கள் என்னை இவ்வாறெல்லாம் பேசும்படியாக விட்டு விட்டாயே! என்னை மற்றவர் ஏசினுல் உனக்கு அது ரோஷமாக இல்லையா? அவர்கள் ஏசினுலும், உன்னுடைய தரிசனம், ஸம்பாஷணைக் கூட, என் கலங்கிக் குழம்பிக்கிடக்கிற உள்ளத்திற்கு இப்பொழுதெல்லாம் கிட்டுகிறது கிடையாது. அதற்கு காரணம் என் கர்ம வினைதான். அதற்கு நான் என்ன செய்யக் கூடுமென்று சொல்லி விடுகிருயே? இப்படி இருக்க உனக்குப் பல பட்டப்பெயர்கள், பக்த வத்ஸலன் தீன பந்து, பக்த பராதீனன், தாஸானுதாஸன் இப்படி எல்லாம் குறைவில்லாமல் சூட்டிவிட்டார்கள், இதெல்லாம் பெயரளவே அன்றி, ஒன்றும் உன்னிடம் செயலில் காணவில்லை.

ஸ்ரீ ஸ்வாமிகள் பகவானுடைய சிந்தனையில் திகழ்ந்தவர். அவருடைய உலகம், நடை, பாஷை, ஹ்ருதயம் வேறு? அதை ஸ்ரீ ராமனே அறிவார். அவர்தான் அந்தரங்க நாயகன், இந்த நாயக நாயகிகளின் தனி உலகத்தில் நாம் பிரவேசிக்க முடியுமா? அதை நினைத்து நினைத்து உருகி அந்தப் பரம்பொருளையே நமக்கும் நாயகனுக வரவழைத்துக் கொள்வோம். அதுதான் அந்த மஹனீயர் சென்று காட்டின அன்பு வழி.

# பக்தியும் விரக்தியும்

பக்திவழி ஸுலபமானது என்று நினைப்பவர் பக்தியின் ரஹஸ்யத்தை அறியாதவர்பக்தி செய்வது எளிதாகத் தோன்றினும், அது அவனருள் இன்றிக் கிடைக்காது. மற்ற வழிகள் கஷ்டமானது. ஸாத்திய மில்லாதது. ஆனால் பக்திக்கு அந்த ஊறுகள் இல்லை. யார் வேண்டுமானாலும், எப்படி வேண்டுமானாலும், எப்பொழுதாயினும் எந்த முறையைப் பற்றியாவது பக்தியுடன் இருந்தால் அவர்களுக்கு மோக்ஷமுண்டு. இவ்வாறெல்லாம் சொன்ன பல சான்றுகள் நம்மை ஒரு பொழுதாயினும் உயர்த்தி விடாது. அவை யாவும் பக்தி மார்க்கத்தின் பெருமையைக் காட்ட வந்தவையே. உண்மை பக்தி வழியில் இருப்பவன் மற்ற எல்லா வழிகளையும் மேற்கொண்டவனே யாவான். அவன் நோக்கம் இறைவனின் திருநோக்கத்திற்குத்தான் காத்திருக்கும். வேறு நினைவு காணாத நெஞ்சம் அவனுடையது.

மஹாபக்தர்களான ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள் தன்னுடைய பக்திவழி சீர்மையுள்ளது. மற்றதைத் தள்ளி பக்தியைப்பற்றினது என்பதல்ல. மற்றதைக் கொண்டே ஸ்ரீ ராமா! உன்னைப்பற்றி நிற்கிறேன் என்ற முடிவு காண்பது என்று பகவானிடம் தன்னை அர்ப்பணித்துக் கொள்வதைக் காண்கிறோம். எதுவும் அந்த ப்ரபுவின் ஆணை. கொடுப்பதும் கொடுக்காததும் அவனைச் சேர்ந்தது. நாம் யார் அவனைக் கேட்க? கேட்டால் நம்மிஷ்டப்படி அவன் கொடுத்து விடுவானா? நமக்கு வேண்டியது இதுதான் என்பதை அறிந்துதான் நம்மால் கேட்க இயலுமா? ஒரு பிள்ளையைப் பட்டினி போட்டு ஒரு பிள்ளைக்குப் பக்ஷணம் கொடுக்கும் தாயாரின் இயல்பு அல்லவோ

அவனிடம் நிறைந்திருக்கிறது. அல்லது அந்த தெய்வதெய்வம் கொடுத்துள்ளதை நாம் அறிந்து பயன் படுத்திக்கொண்டோமா?

ராகம்—ஸஹானு] [தாளம்—ரூபகம்.

பல்லவி

ஏமான தி8ச் செதவோ ஏ மெஞ்சினுவோ—

அனுபல்லவி

நா மாடல வினவோ ராம
நா தல வ்ராலேமோ — (ஏ)

சரணம்

யச மாயுவு ஸத்பக்தியு
ஏகாந்த சித்தமு
ஸுசரீர மொஸங்கு பாஸுர
தியாகராஜ விநுத — (ஏ)

பொருள் :— பல்லவி; என்ன (கட்டளை) ஆணைகள் ஏற்படுத்தி விட்டாயோ? என்ன நினைத்துக்கொண்டு இருக்கிறுயோ?

அனுபல்லவி: என் வேண்டுகோளைக் கேட்கமாட்டாயோ? என் தலை எழுத்து எப்படியோ?

சரணம்: புகழும், ஆயுளும் உண்மையான (ஸாத்விக) பக்தியும், தனிமையில் உன்னை நினைக்கும் (உறுதி கொண்ட) சித்தமும், நல்ல தேக நிலையும் கொடுத்து

(இவைகளால்) மேன்மையுறும் இந்த நிலையைப் பெற்றவனாகும் அறிக்கப்பட்டவனே! என்ன நினைத்திருக்கிறாயோ? என்ன உத்தரவோ?

கருத்து :— நல்ல தேகமும், புத்தியும், அதனால் கிடைக்கும் புகழும், உன்னை என்றும் நினைக்கக் காரணமாகும். இவைகள் நீ கொடுத்த அரிய செல்வங்கள். இவைகளைக் கொண்டு, உன்னை நினைக்காமல், ஸாத்விகமான பக்தியில் ஈடுபடாமல் இருந்தால், உன்னுடைய அருள் மாத்திரம் கிடைக்க வேண்டுமென்று எதிர்பார்ப்பது எவ்வளவு துராசை, கிடைத்த பிறவியின் பயனை வீணாக்குகிறவர்களுக்கு என்ன உத்தரவு பிறப்பித்திருக்கிறாயோ? அவனவன் தலை எழுத்துப் போல் நடந்து போகட்டும் என்று விட்டு விடுவாயோ?

நான் அப்படிப்பட்டவனா? எனக்கு நீ திருவருள் புரிந்த பிறவியின் பயனைத் தெரிந்துகொள்ளவில்லையோ? என்னிடத்திலுமா இந்தப் பாராமுகம்? என் தலை எழுத்துப்படி நடக்கட்டும் என்ற எண்ணம் என்னிடத்தில் ஏன்? நான் எதை விரும்பினேன்? எதில் மயக்கம் கொண்டேன்? உன் திருவடி நினைவே என் ஏகாந்த ஸௌக்யம், அதுவே எனக்குக் கீர்த்தியும் பெருமையுமாகும்.

# எது பஜனை ?

உண்மையான பக்தியுடன் பகவானை நினைப்பதே பஜனை. உண்மையாக நினைப்பது, மெய்யாக நினைப்பது என்று உண்டோ? வேறு நினைவில்லாமல் பகவானையே நினைப்பது உண்மை நினைவு. வேறு நினைவு ஒருவனுக்கு ஏற்படுவது ஸஹஜமே. விஷயங்களில் ஈடுபடும் இழுபடும் வாஸனுபலம் எப்பேற்பட்டவர்களையும் குற்றமுள்ளவர்களாக்கிவிடுவதால் நினைவில் பல வந்து கலந்து கிடக்கின்றது. அவைகளில் தள்ளமுடியாதது தற்பெருமை. எதிலும், தான் பெருமையடைந்து பிறர் மெச்சும்படியாக விளங்குவதையே மனம் நினைக்கிறது. பொருளைப்பற்றியோ, போகத்தைப் பற்றியோ எண்ணாத மனம் இந்த தற்பெருமை என்ற அற்ப ஆசையை நாடி நிற்கிறது. அந்தப் பெருமைகூடத் தன்னைக் குற்றமுள்ளவனாக்கி விடும் என்று ஸத்குரு ஸ்ரீ தியாகபிரும்மம் நினைத்தார். ஆயிரக்கணக்கான கீர்த்தனங்களால் பகவான் ஸ்ரீ ராமச்சந்த்ரமூர்த்திக்குப் பாமாலை சூட்டியவர், இந்த கீர்த்தனங்களில் காணும் ஒவ்வொரு நயமும், குணமும், எனக்கு வினயத்தையே அளிக்கவேண்டுமேயன்றி பிறர் மெச்சுவதற்காக மாத்திரம் அமையக் கூடாது. உலகம் போற்றுகிறது. என் வாக்கு ஈடில்லாதது. என் ராக ஸ்வர லய கதிகளின் அமைப்பு அதிசயமானது என்பன போன்ற எண்ணமெல்லாம் ஏற்படாமல் என் மனம் சுத்தமாக இருக்கவேண்டுமென்று தன் மனதுக்குள் எச்சரித்துக் கொள்ளுகிறார். அவரைப்போல் பெருமையையும் புகழையும்

அடையாதவர்கள் இவரைவிட நூறு பங்கு தற்பெருமை யில் சிக்கி பகவானிடம் அணுகுவது விநோதமானது. அவர்களுக்கு இந்த கீர்த்தனை ஓர் அறிய உபதேச மாகும்.

ராகம்—யதுகுல காம்போதி] [தாளம்–ஆதி

பல்லவி

அதிகாது பஜன மனஸா —

அனுபல்லவி

எதலோனென்ஸ டொகடி
பய்யெத கல்கினதிலோ நொகடி— (அதி)

சரணம்

கொப்ப தனமுகை யாஸ
குத்ஸித விஷய பிபாஸ
மெப்புலகை பஹுவேஸ மிடி
யுப்பதில் லெதரு த்யாகராஜ வினுத — (அதி)

பொருள் :— பல்லவி : அது அன்று பஜனை மனமே!

அனுபல்லவி : உள்ளத்தில் கொள்ளுவது ஒன்று. வெளியே (வஸ்த்ரம் முதலான) தானங்களைப் பெற்றதும் ஒன்று.

சரணம் : நிறைய பணத்திற்கு ஆசை, அற்ப மான விஷய ஸுகங்களில் ஈடுபாடு, பிறர் மெச்சுவதற்காகப் பல வேஷங்கள் போட்டு உள்ளுக்குள் அகமகிழ் கிறார்கள். ஸ்ரீ தியாகராஜனால் போற்றப்படும் ஸ்ரீ ராமா! இதுவா பஜனை.

# ராமன் செய்த அநியாயம்.

ஸ்ரீ ஸத்குரு தியாகப்ரும்மம் ஸ்ரீ ராமபிரானை எல்லா வகையிலும் சரண் அடைந்தவர். ஸ்ரீ ராமச்சந்திரனைத் தவிர வேறு எவரையும் அவர் துணை நாடாதவர். தன் குடும்பத்தில் உள்ள சிறு சிறு மன க்லேசங்களுக்கும் பகவானையே தஞ்சம் என்று துயரம் தீரப் பிரார்த்தனை செய்துகொண்டார்.

தனக்குத் தேவை எதையும் அவர் பொருட்படுத்தவில்லை. தனகனகம், வஸ்து, வாகனம், கிருஹம் இவைகளெதையும் அவர் நினைத்தாரில்லை. தன் வாழ்வு பலம் அடையவோ, அந்தஸ்து உயரவோ, பதவி, பெருமை, புகழ் இவைகள் தனக்குக் கிடைக்க வேண்டுமென்றோ அவர் எண்ணினதில்லை. அல்லது மஹான்களுக்கும் கர்ம வேகதத்தால் உண்டாகும் தீராத சரீர உபாதைகள் அவரைப் பீடித்ததில்லை. எண்பது வயதுக்குமேல் சுக சரீரமுடன், திவ்ய சாரீர சம்பத்துடன் வாழ்ந்தவர். ஆயினும் அவர் கீர்த்தனங்களில் ஸ்ரீ ராமனிடம் தன் துன்பத்தைப் பலமுறை எடுத்துக் கூறுவதைப் பார்த்தால், அவருக்கு என்னவிதமாக மனக்லேசம் ஏற்பட்டிருக்கலாம் என்று நினைக்க முடியவில்லை. எதையும் விரும்பாதவர் எதைக் கண்டு மனம் வாடினார்? ஸ்ரீ ராமனுடைய பரிபூர்ண கிருபை அவர் பெற்றுள்ளார். ஸ்ரீ ராமனுடைய தரிசனம் பலமுறை பெற்றுள்ளார். ஜன்ம ஸபலமாகும் நித்ய நைமித்திக அனுஷ்டானங்கள் சிறிதும் வழுவாதவர். வெளிப்படையாகக் குறை ஏதும் அவருக்கு நினைவில் வருத்தக் காரணம் தெரியவில்லை.

அம் மகாத்மாவின் நெஞ்சம் வெண்ணை போன்றது. தனது பக்தி சிந்தனைக்கும், பக்தி மார்க்கத்திற்கும் இம்மியளவு இடையூறு வந்தாலும் நெஞ்சு

பொறுக்காதவர். தூய வெள்ளைத்துணி உடுத்திக் கொண்டிருப்பவன் அதை தூய்மையாக வைத்துக் கொள்ள எவ்வளவு கவனம் செலுத்துவானோ! துளி கறையோ தூசியோ படிந்து விட்டாலும் அவன் மனம் எவ்வாறு அதையே நினைத்துக்கொண்டு கவலைப் படுமோ? அப்படியே இவருடைய புத்தி பாவம். தன்மீதோ, தன் நியமவழிபாட்டின் மீதோ பிறர் குற்றம் சொல்லப் பொறுக்காதவர். தான்செய்யும் ராம பூஜை, ராம பஜனை இவைகள் குறைவற்றது. கிடைத்தற்கரியது என்ற மனநிறைவில், யாரேனும், சிறிது அவச்சொல் சொன்னாலும் மனம் உடைந்து, அந்த ராமபிரானிடம் அதைச்சொல்லிப் பாடி, மனச்சாந்தியைத் தேடிக் கொள்வார். அதற்கு இங்கு ஓர் கீர்த்தனம் நல்ல திருஷ்டாந்தம், அவர் மனத்தைத் தெள்ளெனக் காட்டுவதாகும்.

ராகம்—காபி] [தாளம்—ஆதி.

பல்லவி.

அந்யாயமு ஸேயகுரா ராமா நன்னு
அன்யுனிகா ஜூடகுரா ராமா நாயெட— (அ)

அநுபல்லவி

என்னோ தப்புலு கலவாரினி
ராஜன்ய நீவு ப்ரோசினாவு கனுகனு— (அ)

சரணம்

1 ஜடபரதுடு ஜிங்க சிசுவு நெத்தி
படலிக தீர்ச்சக லேதா—
கடலினி முனுகின கிரினெக
கூர்மமு காபாடக லேதா— (அ

2 புடமினி பாண்டவ த்ரோஹினி
தர்ம புத்ருடு ப்ரோவ லேதா—
நடிமி ப்ராயமுன த்யாக ராஜனுத
நா பூர்வஜு பாத தீர்ப்ப லேதா— (அ)

பொருள் :— பல்லவி : ராமா அன்யாயம் பண்ணுதே! என்னை அன்னியன் என்று பார்க்காதே! என்னிடம் இந்த அநீதியைச் செய்யக்கூடாதடா ராமா!

அனுபல்லவி : எத்தனையோ தப்புகள் (குற்றங்கள் உள்ளவர்களையும்) செய்தவர்களையும், ராஜாதிராஜனை நீ காப்பாற்றினாய் என்பதனால் (உன்னை நம்பியிருக்கிறேன்) அநியாயம் என்னிடத்தில் செய்யக்கூடாதடா!

சரணம் : 1 ஜடபரதர் என்ற ரிஷி மான்குட்டியை வளர்த்து அதன் துன்பத்தைத் தீர்க்கவில்லையா?

முன்பு ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில் ரிஷபர் என்பவருக்குத் தோன்றின பரதர் என்ற புத்திரர் இந்த தேசத்தை அரசாண்டார். (அதனால் நம்முடைய தேசத்திற்குப் பூர்வகல்பத்திலேயே பாரத தேசம் என்ற பெயர் உண்டாயிற்று). அவர் தன் ராஜ்யத்தைத் தன் பிள்ளைகளுக்குக் கொடுத்துவிட்டு, வைராக்ய நெறியுடன் வனம் சென்றார். அங்கு ஆசிரமத்தில் நியம பூஜை செய்துகொண்டு, நதியில் ஸ்னானம் செய்துகொண்டிருக்கையில், காட்டாறு பெருகியது. வெகுதூரத்தில் சிம்மம் ஒன்று கர்ஜனை செய்தது. கர்ப்பமாயிருந்த மான் நடு நடுங்கி, தன் வயிற்றின் சிசுவை ஈன்று விட்டு, ப்ராணனை விட்டு மரித்தது. அந்த சிசு ஆற்றங்கரையில் துள்ளிவிழுந்தது. காட்டாறு பெருக்கெடுத்ததால், அந்தக் குட்டி ஆற்று ஜலத்தில் இழுத்துச் செல்லப்பட்டது. இத்தனையும் கரையில் பார்த்துக்கொண்டு ஜபம் செய்த பரதர், ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து, அந்தக் குழந்தையைக் கையில்

எடுத்துக்கொண்டார். அது முதல் அந்தக் குட்டியைக் கண்ணும் கருத்துமாக வளர்க்க ஆரம்பித்தார். அதனிடம் வைத்த பாசத்தில் தன் தவநெறியைக் கைநழுவவிட்டார். மான்குட்டி ஒருநாள் வெளியே சென்றது திரும்பி வரவில்லை. அதையே நினைத்து, தேடி அலைந்து மனமுருகி, அதன் நினைவிலே தன் பிராணனை விட்டார். அவரும் அடுத்த பிறவியில் தானே ஒரு மானகப் பிறந்து விட்டார். அவருக்கு ஜடபாதர் என்று பெயர் பிறகு ஏற்பட்டது.

தவநெறியையும் மறந்து பாதர் அந்த மான் குட்டியைக் காப்பாற்றினார். அதற்குக் காரணம் அவர் மனம் அன்பும், இறக்கமும், பிறர் துயரத்தை நீக்கும் வேகமும் கொண்டது. ஸ்ரீ ராமா! இந்தக் குணம் உன்னிடத்தில் இல்லாமலா போய் விட்டது. மறுபிறவி வருமே என்ற பயம் கூட இல்லாமல் அன்பால் ஓடிவந்து காப்பாற்றினார். உனக்கு அந்தப் பிறவி பயம் உண்டா என்ன!

பாற்கடலில் மந்த்ரமலையை மத்தாக வைத்து அமுதம் கடைந்தனர் தேவர்களும், அஸுரர்களும். அப்பொழுது மந்தரம் என்ற கிரி கடைந்த வேகத்தால் கவிழ்ந்து கடலில் மூழ்கி விட்டது. அதை எடுத்து நிறுத்த யாருக்கும் வழி தோன்றவில்லை. அப்பொழுது ஸ்ரீமந் நாராயணனே ஓர் பெரிய ஆமை வடிவம் தாங்கி, தன் முதுகைக் கொடுத்து, மந்தரகிரியைத் தூக்கி நிறுத்தி, அவர்கள் கடையும்வரை முதுகைக் கொடுத்தார். அந்த நாராயணன் தாங்கள் அன்றோ? ராமா! என் கலக்கத்திற்குக் கரைகாணாத என்னைக் கைதூக்கி விடாமல் இருப்பது ஏனோ? ஆமை என்ற அற்பப் பிராணியின் கேவலமான ரூபத்தையும் பொருட்படுத்தாமல் தாங்கியும், தங்கள் கஷ்டத்தைச் சொல்லவும் வழி அறியாது இருப்பவர்களைக் கைதூக்கி விடுவதே உன் பெரு நோக்கன்றோ! அது என்னிடம் இல்லாதது அநியாயம்!

உ பாண்டவர்கள் வனவாசம் செய்த சமயம், துர்யோதனாதிகள் அவர்களைப் பரிஹஸிக்க, ஆடை அலங்காரங்களுடன், மேளதாளங்களுடன், மனைவி பரிவாரங்களுடன் கோஷயாத்ரை என்ற பெயருடன், பாண்டவர்கள் இருப்பிடம் வந்து அட்டஹாஸம் செய்தனர். இதைப் பார்த்த கந்தர்வன் ஒருவன் அந்தக் கௌரவர்களை சண்டைக்கிழுத்து, மையப் புடைத்து, துரியோதனனை அவன் மனைவி, சஹோதரர்களுடன் தேரில் கட்டிச் சென்றான். அப்பொழுது துர்யோதனன் தருமபுத்திரரைச் சரணம் அடைய வேண்டியதாயிற்று. பீமனும், அர்ஜுனனும் தயங்கியும், தருமர், உடனே கந்தர்வனிடமிருந்து கௌரவர்களை விடுவிக்கவேண்டும் என்றுப் பதறித் துடித்துத் தம்பிகளை அனுப்பினார். அவ்வாறே பீமார்ஜுனர்கள் கந்தர்வனைத் தோற்கச் செய்து, கௌரவர்களைக் காப்பாற்றினர்.

இந்த தருமனின் செய்கை. அபராதிகளைக் காக்கும் தெய்வ குணமான தங்களுடையதன்றோ! தஞ்சம் என்று வந்தவன் யாராயினும், தன் பகைவனேயாயினும் அவனைக் காப்பாற்றுவது தன் கடமை என உணர்ந்தார்.

இத்தனையும் ராமா, நான் ஏன் உனக்குச் சொல்லுகிறேன்? இந்த என்னுடைய நடுவயதில் என் முன்னே பிறந்த என் தமையன் எனக்கு இழைத்துவரும் மனக்லேசங்களை என்னால் பொறுக்கமுடியவில்லை. என் பக்திக்கு விரோதமான செயல்கள் இவைகள், உன்னையே நினைத்திருப்பதைப் பொறுக்காமல் நான் உலகில் மற்றவரைப் போல் பொருள் தேடி, பாடி சம்பாதிக்கவேண்டும் என்பது என் அண்ணாவின் விருப்பம். இது அவருக்கு என் மீது எல்லையற்ற கோபத்தை உண்டுபண்ணுகிறது. அதனால் என்னை ஏசவும் பேசவும் செய்கிறார். ஆனால் நான் உன்னைச் சேர்ந்தவன் என்பதைஅவர் உணரவில்லை. அதை அவருக்கு உணர்த்தி விட்டால் அவருக்கும் அந்த

*உண்மையான பக்தி வழிகாட்டி விட்டால் என் மனம் க்லேசமற்று கிடக்கும். அது நீ அறியாததல்ல. இதை அருள் செய்வது உனக்கு பாரமும் அல்ல! பரம கிருபா நிதியான நீ, அதைச் செய்யாது, என்னை இத்தனை காலம் மனத்துயரில் வாடச் செய்கிறாயே, அது ஏனோ! இந்த அநியாயம் கூடாதடா ராமா!*

## மத பேதம்.

எத்தனையோ மதங்களிருந்தாலும் அவைகள் எல்லாம் ஒரு பரம்பொருளையே குறிக்கின்றன என்பார்கள் அறிவுடையோர். வைஷ்ணவருக்கு அந்த பரம் பொருள் விஷ்ணு. சைவர்களுக்கு அப் பரம் பொருள் சிவன். சாக்தர்களுக்குத் தேவி. காணபத்யர்களுக்கு கணபதி. ஸௌர மதத்தவர்களுக்கு ஸூரியன். பாசுபதர்களுக்குப் பசுபதி என்றிவ்வாறெல்லாம் அப் பரம்பொருளைப் பேரிட்டு அழைத்துக் கொண்டாடுவதுடன், அந்த தெய்வத்திடம் வைத்த விசேஷமான பக்தியால் மற்ற தெய்வங்களை நினையாதிருக்கவும் செய்கிறது. இஷ்ட தெய்வம் ஒன்று என்று கொள்வதுடன், வேறு தெய்வம் தனக்கு எதற்கு? அதைக் கொண்டாடினுல், தனது இஷ்ட தெய்வத்தின் பெருமையைக் குறைப்பதாகும் என்று மற்ற தெய்வங்களை வழிபடாதவர்கள் இந்த இஷ்ட தெய்வ பக்தர்கள். இஷ்ட தெய்வத்தைப் போற்றுகையில், இதர தெய்வங்களையும் தன்னிடத்தே கொண்டுள்ள பெருமையை அவர்கள் மறக்கமாட்டார்கள். விஷ்ணுவை வணங்குபவர், அந்த விஷ்ணுவை சிவன் உள்ளடக்கம் என்றும், சிவனை நினைப்பவர் சிவனின் பக்தர்கள் கூட்டத்தில் விஷ்ணு முதன்மையான வ

என்றும் வாதாடுகின்றனர். ஆனால் யார் யாரோ அதை உணர்ந்து அனுபவிக்க வல்லவர்கள்?

ஸத்குரு ஸ்ரீ தியாக ப்ரும்மம் இந்த மத பேதங்களில் ஈடுபடாதவர். சிவ மாதவ பேதமற்றவர். அவர் வணங்கும் இஷ்ட தெய்வம் ஸ்ரீ ராமன். எந்த தெய்வங்களின் பரத்வ லக்ஷணங்களை எவர் வாயால் கேட்டாலும் அங்கே ராமனை காண்பவர் ஆதலால் எவ்விதத்திலும் தனது உபாஸனைக்கு இதர தெய்வங்களின் மேன்மை இவரைக் குறைபடுத்தாது. ஸ்ரீ ராமபிரானது திரு உருவமே அவர் சிந்தையிலே இருப்பதால் அதிலே சொக்கிப்போய் அதில் மயக்கம் கொண்டுள்ளார்.

ராகம்—சாயாதரங்கிணி] [தாளம்—ரூபகம்

பல்லவி

இதர தெய்வமுல வல்ல இலனு சௌக்யமா ராம (இதர)

அனுபல்லவி

மதபேதமுலேக ஸதா மதினி மருலுகொன்ன தன (இதர)

சரணம்

மனஸா தெலிஸி ப்ரோசினனு
மறசினனு நீவே ராமா—
தனவாடன தருணமிதே
தியாக ராஜ ஸன்னுத— (இதர)

பொருள்:— *மற்ற தெய்வங்களால் இந்த ஜன்மாவில் ஆனந்தம் கிடைக்குமா—ராமா? மதங்களில் பேத புத்தியை நீக்கி, என்றும் புத்தியில் (உன்னுடைய மோகம் கொண்ட எனக்கு (இதர) என் மனத்தின்*

*கோறிக்கைகளை அறிந்து காப்பாற்றினாலும் மறந்தாலும் நீயே ராமா — உன்னைச் சேர்ந்தவன் என்று என்னை ஏற்க இதுவே சமயம் ராமா!*

கருத்து:— *ராமபக்தியில் சிக்கிவிட்டவன் நான். ஒருநாளும் அதை மறக்க முடியவில்லை. ராம பக்தியில் எனக்கு ஏற்படும் ஆத்மானந்தம் ஸௌக்யம் இன்னுமொரு சுகத்தால் தேடவேண்டியதில்லை. என் ராமன் என்னைக் கைவிட்டான் என்று இன்னொரு தெய்வத்தை நான் நினைக்கவும் முடியுமா! கைவிட்டாலும், காப்பாற்றினாலும் ராமனிடம் பைத்தியம்கொண்ட என் மனம் அவனையே நாடியிருப்பதால், அதுவே எனக்கு அத்யந்த சுகமாகும். இதைக்கண்டுகொண்ட நான் உலகில் காணும் எத்தனை எத்தனை மத சித்தாந்தங்களில் புகுந்து திரிந்து அலைந்து ஓய்வானேன்.*

இஷ்ட தெய்வபக்தி என்பதில் ஒரு பதிவ்ரதை காட்டும் நெறியைக் கடைபிடித்தார் ஸ்ரீ தியாகப்ரும்மம். தன் நாயகனிடம் மோஹமும் பிரேமையும் கொண்டு, அவன் பார்வை, பேச்சு, தயவுக்கு ஏங்கும் ஒருயுவதிக்கு வேறு எதுவும் களிப்பூட்டுமா? அவளுக்கு உலகமே தன் நாயகனாகவே தோன்றும், எங்கு சென்றாலும், எங்கு நினைத்தாலும், தன் நாயகனை அங்கு வைத்துக் காண்பவள். அந்த யுவதியின் மனத்தைக் கொண்டு ராமனிடம் பித்துக்கொண்டு, அந்த ராமபக்தியே தன்னுடைய மேலான மதம் எனப்போற்றும் ஸ்ரீ தியாகராஜருக்கு இதரமதங்களைப்பற்றி என்ன கவலை?



# ஸ்ரீ வரதராஜர்.

ஸ்ரீ காஞ்சிமாநகரில், காமகோடி நிவாஸினி, உலகெலாம் தனது கடைக்கண்ணால் காத்து அளிக்கும் ஸ்ரீ ராஜராஜேஶ்வரி அருள் பெருகும் காமாக்ஷி அம்பிகையின் புண்ணிய க்ஷேத்திரத்தில் சுற்றி விளங்கும் விஷ்ணு ஸ்தலங்களும், சிவ ஸ்தலங்களும் அமைந்த தத்வம் அதி ரஹஸ்யமாகும். அந்த புண்ணிய க்ஷேத்திரத்திற்கு ஸ்ரீ ஸத்குரு தியாக ப்ரும்மம் தனது புண்ணிய யாத்திரை மார்க்கத்தில் விஜயம் செய்தார். அங்கு அந்த சமயம் உபநிஷத் ப்ரும்மம் என்ற பெரியவர்களைத் தர்சனம் பண்ணிக்கொள்ளவே அந்த க்ஷேத்திரம் அடைந்தார்கள். உபநிஷத் ப்ரும்மமும், ஸத்குருவைப் பார்க்கவேண்டும் என்று விரும்பியிருந்தார்கள்.

உபநிஷத் ப்ரும்மத்தைத் தரிசனம் செய்து கொண்டு, அந்த க்ஷேத்திரத்தில் சில காலம் தங்கி, அங்கு எழுந்தருளிய ஸ்ரீ வரதராஜப் பெருமாளையும், காமாக்ஷியம்பிகையையும் தரிசனம் செய்து கொண்டு பரவசமடைந்தார்கள். அப்பொழுது உதயமான கீர்த்தனங்களுள் அபூர்வமான ஒரு ஸம்ஸ்க்ருத கீர்த்தனம் கீழ்வருமாறு.

ராகம்—மோகனம்] [தாளம்—ரூபகம்.

பல்லவி

வரத ராஜ பாஹி மாம்
ஸதா முதம் தேஹி— (வ)

அனுபல்லவி

கரி கிரீச சிவ ஸுரபதி
ஸரஸிஜ பவாதி வினுத— (வ)

சரணம்

தேவ தேவாந்யதா கதிர் நாஸ்தி ஸ்ரீபெருந்
தேவி ஸஹித கருணாகர ஸ்ரீ தியாகராஜ விநுத—(வ)

பொருள்:— பல்லவி : வரதராஜப் பெருமாளே! என்னைக் காக்கவேண்டும். எப்பொழுதும் என்னைக் களிக்க (பகவத் பக்தி அநுபவத்தில் ஈடுபடச்) செய்ய வேண்டும்.

அநுபல்லவி: யானைவடிவில் அமைந்த சிறு குன்றின்மேல் விளங்குபவரே (ஹஸ்திகிரீச) சிவன், தேவேந்திரன் ப்ரும்மாதிகளால் ஸ்தோத்திரம் செய்யப்பட்டவனே!

சரணம் : தேவதேவனே, எனக்கு உன்னைத் தவிர வேறு கதியில்லை. ஸ்ரீ பெருந்தேவி பிராட்டியுடன் விளங்குபவனே! கருணாமூர்த்தியே! இந்த தியாகராஜன் உன்னைக் கொண்டாடப் பெற்றேனே!

சிறு கீர்த்தனம், அழகான, எளியதான பதங்கள், பாடப்பாட இனிக்கும் வர்ணமெட்டு, பரம பாகவதர்களும் விஷ்ணு பக்தர்களும், நித்யம் நித்யம் ஸேவிக்கும் வரதராஜப் பெருமானுடைய ஸந்நிதியில், தன்னையும் அவர்களுடன் சேர்த்துக்கொண்டார். அனன்ய சரணம் என்று பகவானை வேண்டி, பெருந்தேவி என்ற தமிழ்ப் பெயரையே ஸம்ஸ்க்ருதத்துடன் மணிப்ரவாளமாகச் சேர்த்துப் பாடினார். ப்ருஹதம்பா, ப்ருஹன்நாயகி என்ற பெயரை இங்கு சொல்லாமல், அந்த ஸ்தலத்தில் எழுந்தருளின தாயாரின் திவ்ய திருநாமமான பெருந்தேவி என்ற பதத்தை அவ்வாறே உபயோகித்துள்ளார். இவ்வாறு தமிழ்ப் பெயர்களைப் பல கீர்த்தனங்களிலும் சேர்த்துள்ளார்கள்.

# கீதார்த்தம்.

இந்தத் தலைப்பைப் படித்ததும் ஏதோ பகவத்கீதையின் தாத்பர்யத்தை இங்கு விளக்க போகிறேன் என்று நினைக்கலாம். அதுவன்று. நாதோபாஸகரும் சிறந்த ராமபக்தருமான பஞ்சநத க்ஷேத்ரவாஸி ஸ்ரீ தியாகய்யரின் பிரபலமான 'கீதார்த்தமு' என்ற சுருட்டி ராக கீர்த்தனையில் த்வனிக்கும் ஓர் அபிப்பிராயத்தையே குறிக்க விரும்புகிறேன்.

ராகம்-சுருட்டி] [தாளம்-ஆதி

பல்லவி

கீதார்த்தமு ஸங்கீதா னந்தமு
நீதாவுன சூடரா ஓ மனஸா

அனுபல்லவி

ஸீதாபதி சரணப்ஜமு னிடுகொன்ன
வாதாத்மஜ ஜுனிகி பாக தெலுஸுரா — (ஸீ)

சரணம்

ஹரிஹர பாஸ்கர காலாதி கர்மமு
லனு மதமுல மர்மமுல நெறிங்கின
ஹரிவர ருபுடு ஹரஹய வினுதுடு
வர தியாகராஜ வரதுடு ஸுகிரா — (ஸீ)

பொருள்:— பல்லவி, "கீதை உபனிஷதாதிகளின் உட்பொருளும் கான வித்தையினால் ஏற்படுகிற உண்மை அனுபவமும் ஸ்ரீ ராமா உன்னிடமே விளங்குகிறது. ஏ மனமே! இதை நீ அறிந்து கொள்" என்ற பொதுவான கருத்துடன் கீழ்க்கண்டும் அபிப்பிராயத்தையும் சேர்த்து கவனம் கொள்க.

கீதார்த்தமு: — க்ருதி, கீர்த்தனை இவைகளைவிட கீதம் என்பது உள்ளுணர்வால் நெகிழ்ந்து, ஸ்வானுபவத்துடன் பக்தி பரவசம் ததும்ப இசைப்பதாகும். ஸ்ரீ ராம சன்னதியில் நித்ய பூஜாகாலங்களில் பக்தி மணம் கமழும் பாமாலை தொடுத்தவரன்றோ தியாகய்யர்! நாட்டு மன்னர்கள் காத்திருந்தும், பேரவைகள் அழைத்தும், பிரபுக்கள் பலர் வேண்டி நின்றும், தன் அபரிமிதமான கான வர்ஷத்தை அவர்கட்கு உதவாதிருந்த இந்நிஷ்பிருஹரின் நிலையை (துறவு மனம் கொண்டவரை) யார் அறிய இயலும்? அதுவும் இக்கலியில் பல்லாயிரர் கேட்டும், புகழ்ந்தும், போற்றினும் பயன் என்ன? இது ஒரு பெருமையா? பெருமை எல்லாவற்றினும் பெருமை! இதோ தெரியவருகிறது.

அனுபல்லவி: தான் அடைந்த பெரும்பேற்றை நன்கு அறிந்து அருள்பவன் அந்த ஆஞ்ஜநேயப் பெருந்தகை என்கிறார். அன்னான், முன்பு ஸ்ரீ ராமாவதாரத்தில் ஸீதாபதிக்கு ஸேவை புரிந்து, பின்பு ஸ்ரீ ராம சரண கமலங்களை இடைவிடாது தியானம் செய்து வருகிறான். லோக க்ஷேமத்தைக் கருதி, ஸ்ரீ ராமாக்ஞையைப் பெற்று, கந்தமாதனத்தில் தவக்கோலம் கொண்டு, வைகுண்டமும் விரும்பாதவன்.

சரணம்: சைவம், வைஷ்ணவம், ஸௌரம் முதலிய பல மதங்களின் ரஹஸ்யத்தை நிர்ணயம் செய்து கொண்டவன். கால தர்மங்கள், யுக தர்மங்கள் இவைகளின் போக்கை அறிந்து தன் ஸ்வரூப (வானர) ரூபத்தையும், சக்தியையும் சுருக்கிக்கொண்டு அடியார்க்கு இனிய துணையாகுபவன். ராம கீர்த்தனம் நடக்கும் ஒவ்வோர் இடந்தனிலும் மறைமுகமாக நின்று அனுக்ரஹிப்பவன். ராமநாம ருசியறிந்த சிவபெருமானும், இந்த்ராதி தேவர்களும் பிரியமுடன் போற்றுபவன். இத்தகைய

மஹாத்மா இதோ! இங்கே! ராம ஸன்னதியில் விளங்குவதில் ஐயமேது? தியாகய்யர் போன்ற உண்மை பக்தர்களின் அந்தரங்கத்தை அறிந்து கொள்ளக்கூடியவன் அவனேயன்றி வேறொருவர் யார்?

[ஆஞ்சநேயப் பெருமான் போல் நிஷ்காம பக்தியுடன் பஜனம்செய்து ஆத்மானந்தம் பெற வேண்டுவதே இக்கீர்த்தனத்தின் தாத்பர்யமாகும்]

---

# தனுஷ்கோடி.

புண்ய பாரத பூமியில் விளங்கும் எண்ணிறந்த தீர்த்தங்களுள் முக்யமானவை கங்கையும், தனுஷ்கோடியும் ஆகும். எந்த தீர்த்தத்தின் மஹிமையைச் சொன்னாலும், அதை கங்காஸ்னானத்திற்கு ஒப்பிடுவது மரபு. கங்கையில் ஸ்நானம் செய்து, அந்த தீர்த்தத்தால், ஸேதுவில் ஸ்ரீ ராமநாத ஸ்வாமிக்கு அபிஷேகம் செய்வது பக்தர்களின் வழக்கம். ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் கீழ்க்கண்ட கீர்த்தனத்தில் மற்றொரு விசேஷ தீர்த்தமொன்றை ஞாபகப்படுத்துகிறார்.

ராகம்-தோடி] [தாளம்-ஆதி.

பல்லவி

கோடி நதுலு தனுஷ்கோடி லோனுண்டக
ஏடிகி திரிகேவே ஓ மனஸா

## அனுபல்லவி

ஸ்ஃபடிக ச்யாம ஸௌந்தர மூர்த்தினி
மாடிமாடிகி ஜூசே மஹா ராஜுலகு—(கோடி)

## சரணம்

கங்க நூபுரம்புன நு ஜனிஞ் செனு
ரங்குனி கனி காவேரி ராஜில்லெனு
பொங்குசு ஸ்ரீரகு நாதுனி ப்ரேமதோ
பொகடே தியாக ராஜு மனவி வினவே—(கோ)

பொருள்:— பல்லவி, அனுபல்லவி: கோடி நதிகள் தனுஷ்கோடியில் இருக்கமனமே (பல இடங்களில் நீ) திரிவானேன்? அதுபோல கருத்துடன் நீலமேக ச்யாமளனை ஸௌந்தர (ராம) மூர்த்தியை தியானம் செய்து (ஹ்ருதய கமலத்தில்) காணப்பெற்ற மஹாராஜர்களுக்கு (பாக்ய சாலிகளுக்கு) இதர தேவதைகளின் உபாஸனை எதற்கு?

சரணம்: கங்கை விஷ்ணுவின் பாதத்தில் தோன்றினாள். ஸ்ரீரங்கநாதனை தரிசித்து காவேரி ப்ரகாசிக்கிறாள். அன்புகனிந்த பக்தியுடன் ஸ்ரீ ரகுநாதனை (ஆனந்தம்) பொங்கித் ததும்பத் துதிக்கும் (இந்த) தியாகராஜனின் விண்ணப்பத்தை (செவிசாய்த்துக்) கேட்கவும்.

தாத்பர்யம்:— ராமனே பரமாத்மா. அவனுடைய தியானமே ஸகல தேவதைகளின் தியானமாகும். அப்பரமனின் பாதத்தைக் கங்கை பற்றிப் புனிதமடைந்தாள். திருமுகத்தைக் காவேரி தரிசித்துப் பொங்கினாள். ஆனால் அவனே 'தனுஷ்கோடியில்' விளங்குபவன். தனுஷ்கோடி

என்பதற்கு இங்கு ஸ்ரீ ராமபிரான் கையில் விளங்கும் தனுஸ்ஸின் (கோதண்டத்தின்) இரு முனைகள், எனப் பொருள்.

"தனுஸே ப்ரணவம்: அதன் லக்ஷ்யமே ப்ரும்மானந்தம்: பாணமே ஜீவாத்மா" என்ற ப்ரமாணவாக்யப் படி, கோதண்டம் தரித்து ஸாதுக்களை ரக்ஷிக்கவும், துஷ்டர்களுக்கு (பாப ஜன்மத்தால் அழிந்தவர்களுக்கு) சிக்ஷை என்ற நியமனத்தால், ஜன்ம ஸாபல்யம் அளிக்கவும், அயோத்தி நீங்கி அடவி வந்தனனன்றோ ரகுநந்தனன். கோதண்டத்தின் ஒரு முடிவில் பாதகமலம் விளங்குகிறது. கங்கை ஜனித்தது.

கோதண்டத்தின் மேல்முடிவில் அவன் முகமண்டலம் விளங்குகிறது. (காவேரி களிக்கக் கண்டது). யோகிகள் ப்ரணவ தியானத்திலுல் ப்ரணவ சிரஸில் விளங்கும் ப்ரும்மானந்தத்தை அடைகிறார்கள். அந்த ஆனந்தமே ராமனை பரப்ரும்மம்,

ப்ரணவமேப்ரும்மத்தின் சக்தி. கோதண்டம் எனும் தனுஸே ப்ரணவம். கோதண்ட தீக்ஷா குருவாக (அந்த தனுஸ்ஸின் கோடியில்) விளங்குபவனே ப்ரும்ம ஸ்வரூபி "தனுஷ்கோடி" என்பதால் ராம தியானமே! அறியப்படுகிறது. ஆதலின் ராமனை ஸேவித்தவர்களுக்கு ஸகலமும் கை கூடுமன்றோ!



# தெய்வம் எங்கே ?

''தெய்வம் என்று வாஸ்தவமாகவே ஒன்று இருக்கிறதா ? என்று என்னை அந்தரங்கமாக ஓர் ஆஸ்திக நண்பர் வினவினுர். தன்வாழ்வில் பலதுன் பங்களை அனுபவித்து அலுத்துப்போனவர் அவர். யார் கண்டார்கள்'' என்றேன் நான். ஏமாற்றமும் கோபமும் அடைந்த அவர்'' பக்தி பக்தி என்று பிறர்க்குச் சொல்லிக்கொண்டிருக்கிறீரே, உம்முடைய விஷயம் இதுதானு !'' என்ருர். ''வாஸ்தவம், தெய் வத்தை நான் கண்டிருந்தால் உம்மிடம் ஏன் இப்படிப் பேசவருகிறேன்'' என்றேன் நான். அவரோ சமாதா னம் அடையாமல் சென்ருர். அப்பொழுது ஸ்ரீ தியாக ராஜ ஸ்வாமியின் கீழ்க்கண்ட கீர்த்தனம் ஞாபகம் வந்தது.

ராகம்—தோடி] [தாளம்—ஆதி

பல்லவி

கத்தனு வாரிகி கத்து கத்தனி மொரலனிடு
பெத்தல மாடலு நேடபத்த மௌனோ

அனுபல்லவி

அத்தம்பு செக்கிள்ளசே முத்துகாரு மோமுகூட
புத்திகல் கினட்டி மாவத்த ராவதே மிரா—(கத்)

சரணம்

நித்துர நிராகரிஞ்சி முத்துகா தம்புரபட்டி
சுத்த மைன மனஸுசே ஸுஸ்வரமுதோ
பத்துதப்பக பஜிஞ்சே பக்த பாலனமுஸேயு
தத்தய சாலினி நீவு தியாகராஜ ஸன்னுத—(கத்)

பொருள்:— பல்லவி: (தெய்வம்) உண்டு என்று சொல்பவர்களுக்கு உண்டு. உண்டென்று முறையிடும் பெரியோர்களின் வாக்கியங்கள் இன்று பொய்யாகி விடுமா? (உண்டு என்றால் ஏன் எளிதில் கண்ணில் படுவதில்லை. நான் பார்க்க விரும்புவது, அந்த தெய்வத்தின் அழகிய தோற்றத்தைத் தானே.)

அனுபல்லவி: கண்ணாடிபோல் மின்னும் கன்னங்களுடன் ஒளிமிகுந்த அவன் முகத்தைக் காண புத்தி கொண்டு ஏங்கும் எங்கள்முன் வாரமல் இருப்பானேன்.

ஸர்வேச்வரனின் அகண்ட ஸச்சிதானந்த ஸ்வரூப அதிசயத்தைக் காண இயலாதவனாயினும், ராம, க்ருஷ்ணாதி அவதாரங்களில் அவன் ஏற்ற ஸகுணாகாரக ஸ்வரூப தர்சனமாவது எனக்குக் கிடைக்காதா?

சரணம்: தூக்கத்தைவிட்டு, நன்றாகத் தம்புராவை ச்ருதி சேர்த்து அமைத்து சுத்தமான மனதுடன் ஸஸ்வரமாக, ஸம்ப்ரதாயப்படி பஜனை செய்தால், அவ்வாறு தன்னை பஜிப்பவர்களை பாதுகாக்கும் மகா தயவுள்ள மூர்த்தி, நிச்சயம் தரிசனம் அளிப்பான் என்பது பெரியோர்களின் வாக்கன்றோ. தியாகராஜனால் இந்த அனுபவம் கண்டு கொண்டாடப்படுகிற ஸ்ரீ ராமமூர்த்தி நிச்சயம் "உளன்" என்பவர்க்கு உளன்.

தாத்பர்யம்: எப்பொழுதும் விழிப்பு கொள். தமோ குணம் சேராமல் நிறைந்த ஸத்வ குணத்தை விருத்தி செய். ஏகாக்ர சித்தமுடன் (தம்புரா ஸ்ருதி சேர்ப்பது. மீட்டுவது. தானே மீட்டிக்கொண்டே ஒரு கை தாளம் போடப்பாடுவது ஏகாக்ர சித்தத்திற்கு ஒரு ஸாதகம், அலைகிற மனத்தை அடக்கி நிர்மலமாக்கி அவன் திருவடி தியானத்திலேயே நிறுத்து. பெரியோர்கள் காட்டிய

வழிகளையேப் பின்பற்றி (உன் சுய புத்தியின் குயுக்தி வழிகளைக் கைக்கொள்ளாமல்) பகவானை ச்ரவண மனன கீர்த்தன பூர்வமாக அர்ச்சித்தால் அவன் தர்சனம் கிடைக்கும். உன்னிடம் குறைகள் இருந்தாலும் அவன் மிகுந்த கருணை கொண்டவன், ஆதலின் அருள் செய்வதற்கு ஐயமில்லை.

அவனை உண்மை உள்ளத்துடன் நினைந்து தேடினால் கிடைப்பான். அவன் இருக்கிறான் அருள்புரிவான் என்ற பூர்ண சிரத்தையுடன் பஜிப்பவர்க்கு தவறாது தன்னைத் தோற்றுவிக்கிறான்.



## தெய்வ பக்தி.

"திருப்பதியில் விளங்கும் ஸ்வாமி யார்" என்று உமக்குத் தெரியுமா ?

"ஸ்ரீனிவாஸன்!"

இல்லை! "ஸுப்ரம்மண்யன்!"

"சரி!"

"ஸ்ரீனிவாஸன் என்றீர்! ஸுப்ரம்மண்யன் என்றால் சரி என்கிறீரே! ஏன்? இன்னும் வேங்கட ராமன், வேங்கடகிருஷ்ணன், வேங்கட நரஸிம்மன் வேங்கடேச்வரன் என்றெல்லாம் அழைக்கிறாரே! அது சரி இல்லையா ?"

மேல்கண்ட ஸம்பாஷணைகள் போல் பல உண்டு. இஷ்ட தைவத்தினிடம் உள்ள பற்றுதலால், இவ்வாறு

பேசுபவர்களிடம் சிலசமயம் கருத்து வேறுபாடுகளுடன் சிறு சண்டைகளும் விளைகின்றதைப் பார்த்திருக்கிறோம். ஆலயங்களில் எழுந்தருளியிருக்கும் சக்தி நிறைந்த தெய்வங்களிடை ஏற்படுகின்ற இந்த ஸந்தேகமே, பிறகு அமைதியுடன் நன்கு சிந்திக்கப்படின், உறுதிகொண்ட தெய்வ பக்தியே காரணமாகும் என்பது புலனாகும்! இது பற்றி ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் கீர்த்தனை ஒன்று ப்ரஸித்தமானது. இக் கீர்த்தனை கானத்திற்கு உகந்தது என்று அறிவோம்! கருத்துக்கும் சிந்தனைக்கும் உகந்தது என்பதை இங்கு சிறிது பார்ப்போம்!

ராகம்—கல்யாணி] [தாளம்—ஆதி.

பல்லவி

ஏ தாவுனரா நிலகட நீகு
யெஞ்சி ஜூட நகபடவு— (ஏ)

அனுபல்லவி

ஸீதா கௌரீ வாகீச்வரீ யனு
ஸ்ரீ ரூபமுலந்தா கோவிந்தா— (ஏ)

சரணம்

பூ கமலார்க்க நில நபமந்து
லோக கோடுலந்தா
ஸ்ரீ கருடகு தியாகராஜ கரார்ச்சித
சிவ மாதவ ப்ரம்மாதுல யந்தா— (ஏ)

பொருள்:— "ஹே ராமா! நீர் எந்த இடத்தில் இருக்கிறீர்? உமது வாஸம் எங்கே? விரும்பித் தேடியும் என்னால் அறிய முடியவில்லையே! ஸீதை, கௌரீ,

வாகீச்வரீ போன்ற ஸ்த்ரீ ரூபங்களில் காணப்படுகிறீரா? பூமி, சூரியன், கமலம் (ஜலம்), காற்று, ஆகாசம மற்றும் அகில ஜீவகோடிகளுள் திகழும் அந்தர்யாமியா? சிவன், மாதவன் ப்ரும்மா என்ற மும்மூர்த்தி ஸ்வரூபங்கள் உம்முடையதா? அறிய ஆவல் கொண்டுள்ளேன். (நான் அறிந்தது ஒன்றுண்டு.) எந்த இடத்தில் எப்படி நீர் விளங்கினலும், உம்மை ஆஸ்ரயித்தவர்களுக்கு அருள் செய்பவர் என்பதுவே. இது ஒன்றே போதும்.

கருத்து:— வீணை சமயம் சர்ச்சையில் பொழுதைப் போககாமல், எந்த தெய்வத்தை உபாஸிக்கிருயோ அதில் நீங்காத சிரத்தையும், பக்தியும்கொண்டு வழிபட்டால் நன்மை உண்டு. எல்லாம் பரப்ரும்மத்தின் ஸ்வரூபமே! உயர்வு, தாழ்வு என்ற புத்தி நீங்கிஞல் நல்லதொரு ஞானம் பிறக்கும்.



# நல்வழி.

மனிதன் தன் குழந்தைப் பருவத்தில், தன் மழலைச் சொல்லால் புரியாத பாஷையில் நாக்கை வளைத்துத் தன் உறவினர் களிக்கப் பேச ஆரம்பித்ததிலிருந்து, தன் அந்திய காலத்தில், கண் மூடுகிற சமயத்தில் நாக்கிழுக்க, உறவினர் கூடிக் கதற, அதேபோல் புரியாத பாஷையில் பேசி முடிக்கும்வரை, இடையே எத்தனை பேச்சுக்கள் இவன் பேசி இருக்கிருன் என்று சிந்தித்திருப்பானு! அல்லது குறிப்புதான் வைத்துக் கொண்டிருப்பானு? அந்த பேச்சில் உபயோகமுள்ளவை எத்தனை? அன்பு கனியப் பேசினவை எப்பொழுது? அதிகமானவை பயனில்லாத சொற்களாகவே வெளிவந்திருக்கும். இவன் பேச்சே, இவனுக்கு துன்பமாக விளைவதும் உண்டு. [புத்தியின் சக்தி

எண்ணங்களை வேகமாகத் தள்ளுகிறது. எண்ணங்களின் எழுச்சியினுல், காரியத்தில் சக்தி தூண்டப்படுகிறது. புத்தி சக்திக்கும் காரிய சக்திக்கும் இடையே பேச்சு உதயமாகிறது.] தன் ஜன்மாவில் ஒருவன் பேசாமலே இருந்து விடலாம் என்ருல் முடிகிறதில்லை. அப்படிப் பேசாமலிருக்கப் பழகினுலும், புத்தியின் சக்தியால் அதன் விளைவான காரிய சக்தியை அடக்கி ஆள முடியவில்லை. அனுஷ்டிக்க வேண்டியதை விட்டு விட்டும் விடவேண்டியதை அனுஷ்டித்தும் திண்டாடுகிருன். இதற்கு ஒரு பழக்கம் ஆதியில் ஏற்படுத்திக் கொண்டால் நமக்கு நல்லது என்று ஸ்ரீ ஸத்குரு தியாகராஜ ஸ்வாமிகள் அபிப்பிராயங் கொண்டு கீழ்க் கண்ட கீர்த்தனத்தின் மூலம் விளக்குகிருர்.

ராகம்—அடாணு] [தாளம்—ஆதி.

பல்லவி

செடே புத்தி மானுரா— (செ)

அனுபல்லவி

இடே பாத்ர மெவரோ சூடரா— (செ)

சரணம்

பூ வாஸிகி தகு பலமு கலுகுனனி
புதுலு பல்க வினலேதா மனஸா
ஸ்ரீ வாஸு தேவ ஸர்வ மனுசுனு
சிந்திஞ்சா தியாகராஜ விநுதுனி— (செ)

பொருள்:— விஞன விஷயங்களில் புத்தியை (செலவிட) வேண்டாமடா! பாத்திர மறிந்து கொடுக்கத்

தருந்தவர்கள் யாரோ அவர்களைப் பார்த்துக் கொடும் பாயடா.

பூலோகத்தில் வஸிக்கப் பிறந்தவனுக்கு அவன் செய்த வினைப் பயன்படி (தானே எல்லாம்) கிடைக்கும் என்று வித்துவான்கள் சொல்லக் கேட்கவில்லையா? (ஆதலின்) ஏ மனமே! ஸ்ரீ வாஸுதேவனே எல்லாம் என்ற அறிவுபெற்று, அவனை சிந்தித்துத் துதித்துக் கொண்டிரு.

கருத்து:— ஏ மனமே! ஒரு பொருளை ஒருவனுக்குத் தானம் செய்யும்பொழுது எப்படி அவன் தகுதியைக் கருதி செய்வாயோ, அதேபோல் உன் புத்தியையும் அறிந்து செலவிடு. (அற்ப விஷயங்களில் பழக்கம் புத்தியை மாசடையச் செய்து பிறகும் தவறான வழிகளிலேயே இழுத்துச் செல்லும்.) எல்லாம் அவனவன் கர்மாவின்படி நடக்கும் என்று (யாரும் பேசாமலிருப்பதில்லை. புத்தியை மனத்தின் போக்கில் இழுத்துவிட்டு இன்னும் அதிக துன்பம் சுமக்கச் செய்கிறன். [அதற்கு ஓர் உபாயம் சொல்லுகிறேன். கற்றுத் தெளிந்தவர்கள் கண்ட உபாயம் அது] எல்லாம் ஆண்டவன் மயமாகப் பார்க்கிறவன் எவனே, அவனுக்கு (அவன் ஞானி. முழு மௌனி) எல்லாம் இன்பமே! என்றும் இன்பமே! அந்த மஹாத்மா மிகவும் துற்லபன். அவனைப் போல் நாமிருக்க நினைத்தால் எளிதல்ல. முதிர்ச்சியும், பரிபக்குவமும் அடையாமல் 'எல்லாம் வாஸுதேவமயம்' என்று சொல்லிக் கொண்டிருப்பவருக்கு விபரீத ஞானம் விளைவு.

முதல்படி: உன் பேச்சை அடக்கி அளவாகச் செலவிடு. (அதற்காக உள்ளொன்று வைத்தும் புறமொன்று பேசாதே). எண்ணங்களைக் குறைத்துக்கொள்.

அதிக ஆசைகளுக்கு இடம் கொடாதே. உன் செய்கைகள், நல்லமுறையில் (விதிக்கப்பட்டவைகளே செய்வதாக) அமையட்டும்.

இரண்டாவதாக ; பகவான் யார் என்று தெரிந்துக் கொள்ள அவனுடைய குணமயமான, இனிய கதைகளை விச்வாஸத்துடன் கேள். அவனுடைய திருநாமங்களை சொல்லி நாக்கையும் மனத்தையும் சுத்தப்படுத்திக் கொள். எதைநினைத்தாலும், அப்பரம் பொருளின் நினைவே முதன்மையாக நிற்கட்டும். எந்த நற்செய்கையிலும் அப்பெருமானே முன்னிற்கட்டும்.

மூன்ருவதாக ; பெரியோர்களை அணுகி, உன் சிற்றறிவைப் பெருக்கி, பரமனின் அருள்பெற வழிதேடு. இந்த ஜன்மா வீண்போகாது.



## பக்தி பரீக்ஷை.

" 'பக்த விஜயம்' படித்திருக்கிறீர்களா" என்ருர் நண்பர். "ஏதோ கொஞ்சம் தெரியும்" என்றேன். என் நண்பர் ஆரம்பித்தார்.

"அதில் ஒரு ஸ்வாரஸ்யம் பாருங்கள். எல்லா கதைகளும் ஒரே மாதிரியாகவே இருக்கின்றன. வருகிற கஷ்டம், சோதனைகள் எல்லாம் பக்தனுக்கே. ஆனால் கடைசியில் பகவான் அருளால் எல்லாம் நன்மையாகவே முடிகிறது. ஏன் ஐயா ! இந்த பகவான் பக்தனைக் கஷ்டப்படுத்தாமல் காப்பாற்றமுடியாதா?"

"கஷ்டம் இருந்தால் தானே காப்பாற்ற முடியும் அய்யா, வியாதியிருந்தால் தானே வைத்தியமும் வேண்டும்."

''சரி, அப்பொழுது பகவான் கஷ்டங்களை பக்தனுக்கே ஏன் கொடுக்கவேண்டும். இந்த பக்தனை இம்ஸிக்கிறவன் கூட கஷ்டப்படாமல் கவலையற்றிருக்க, இவனுக்கு மாத்திரம் ஏன் இந்த மனக் கலக்கம்.''

''படித்தவனுக்குத் தானே பரீக்ஷை. படிக்காதவனைப் பரீக்ஷைக்குப் பணம் கட்டக்கூட அனுமதிப்பதில்லையே.'' எப்பொழுது இவன் பகவானை நினைக்க ஆரம்பிக்கிறனே, அப்பொழுதே அந்தக் கடவுளும் இவனை நினைக்க முற்படுகிறர். இவனிடத்திலே அவருக்குக் கருத்தும் கிருபையும் ஏற்பட்டு விட்டால், இவன் தன்னையன்றி வேருென்றை நினையாதிருக்க பல சூழ் நிலையிலுள்ள அவனுக்கு பரீக்ஷைகள் வைத்துத் தன் அருளால் நீங்காத இன்பமளிக்கிறர்.

இதனுல் பக்தன் கலங்குகிறதில்லை. அவன் கதறுவது ஆண்டவன் அருள்பெறவே. மறுபக்கமுள்ள இந்த கீர்த்தனையைப் பார்ப்போம்.

ராகம்-மார்க்கஹிந்தோளம்] [தாளம்-ஆதி.

பல்லவி

த்ஸல மேலரா ஸாகேத ராம— (த்ஸல)

அனுபல்லவி

வலசி பக்தி மார்க்கமு தோனு நின்னு
வர்ணிஞ்சு நன்ன நாபை— (த்ஸல)

சரணம்

எந்து போது நேநேமி ஜேயுதுனு
எத்லோட மொர பெட்டு துனு
தந்த நலதோ ப்ரொத்து போவலேனு
தாள ஜாலரா த்யாக ராஜவினுத— (த்ஸல)

பொருள்:— ஸாகேதபட்டணம் என்ற அயோத்தியில் அவதரித்த ராம! என் மீது கோபம் (தயவில்லாதது) ஏன்?

உன்னிடம் ஆசை நிறைந்து, பக்தி மார்க்கத்தில் சொன்னபடி (உன் சரித்ரம், கேட்டும், படித்தும், பாடியும், அர்ச்சித்தும், வந்தனை செய்தும் இப்படி ஒன்பது விதமாக) உன்னை வர்ணித்துக் கொண்டிருக்கும் என்னிடம் கோபமேன்.

எங்கே நான் போவேன்? என்ன செய்வேன்? யாரிடத்தில் முறையிடுவேன்? (எப்பொழுது நான் உன்னால் ஏற்றுக்கொள்ளப் படவில்லையோ) என் செயல்கள் வேஷம் போட்டுக் காலம் கழிப்பவனைப் போலாக வேண்டுமா? என்னால் இனி பொறுக்கமுடியாது. இந்த தியாக ராஜனைக் காப்பாற்று.

கருத்து:— உத்தமான ஒரு பக்தனுக்கு உதாரணம் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள். அவர் தன் உள்ளத்தால் பகவானிடம் உருகி உருகி வேண்டுவது இதுதான். "நீ தான் அப்பா எனக்கு எல்லாம். வேறு யாருமில்லை எனக்கு. இங்கு என்னால் வேறு செய்வதொன்றில்லை. நான் விரும்புவதும் வேறொன்றுமில்லை." இதுதான் பக்தனின் நிலை. இதைக் காணவே பகவான் அவனுக்குப் பரிக்ஷைகள் வைத்து தேறவும் செய்கிறார்.



# பிணி பொறுத்தல்

'அரிசி விலை ஏறிக்கொண்டே போகிறதாம்! முன்னைப்போல் ஸமூகமாக அக்ஷதை போடுகிறவர்கள் இல்லை" என்று ஏங்கினார் உபாதானம் வாங்கி ஜீவிக்கும் ஓர் ஏழை பிரும்மணர்.

"அரிசி ஒன்றுதானா விலை ஏறி இருக்கிறது? 'ராமா, ராமா' என்றிருக்கிற உமக்கு இந்த கஷ்டம் எங்கே ஐயா தெரிய போகிறது?" என்றார் ஒரு குடும்பி.

"மற்றது எப்படிப் போனால் என்ன ஸ்வாமி? என் போன்ற ஏழைக்கு ஒருவேளை வெற்றுச் சோற்றுக்குக் கூட கஷ்டம் வந்தால் எப்படிக் காலம் தள்ளுவது?" என்றார் பாகவதர்.

"அந்த ராமனையே கேளுமே! கேட்டு பசிக்காத வரம் உமக்கும் எனக்கு சேர்த்து வாங்கிக்கொள்ளும்" என்றார் அந்தக் குறும்புகார குடும்பி. கீழ்வரும் கீர்த்தனையைப் பார்ப்போம்.

ராகம்-பவப்ரியா] [தாளம்-தேசாதி

பல்லவி

ஸ்ரீ காந்த நீயெட பலாதி பல
செல கங்க லேதா வாதா— (ஸ்ரீ)

அனுபல்லவி

பாகாரி நுத நீ வாரி பலா
பலமுன தெலிய லேதா— (ஸ்ரீ)

சரணம்

காக தைத்யு ேநக சரமுன னேய
கஞ்ஜ ஜாஸ்த்ரமை பரக³ லேதா
ஸ்ரீகர த்விஜுலு த³ாரி தெறுக லேனி
சிந்த நீகு தோச தேமி த்யாக ராஜ நுத (ஸ்ரீ)

பொருள்:— லக்ஷ்மி நாயகனான ஸ்ரீ ராமா! உம்மிடத்தில் பலே, அதியலே என்ற இரு மந்திரங்கள் பிரகாசிக்கவில்லையா? (பாகாரி) தேவேந்திரனால் கொண்டாடப்பட்ட தங்களுக்கு, தங்களைச் சேர்ந்தவர்களுடைய பலமும், பலமின்மையும் தெரியாமல் போனதா?

காகாஸுரன் மீது ஒரே பாணம் விட, அது (கஞ்ஜஜ) பிரும்மாவின் அஸ்த்ரமாக மாறவில்லையா? (இக்கலியில்) பிரும்மணர்கள் வழி அறியாமல் இருக்கிறார்கள் என்ற கவலை தங்களுக்கு ஏன் தோன்றவில்லை? தியாகராஜனால் துதிக்கப்படும் ஸ்ரீகர! தங்களுக்கு இது விஷயத்தில் என்ன தடை?

தாத்பர்யம்:— பலாதிபலா: கௌசிக முனிவர், ஸ்ரீராம லக்ஷ்மணர்களை தம் வேள்வியைக் காக்க ஸித்தாச்ரமம் அழைத்துச் செல்லும்பொழுது, சிறுவர்களுக்கு வழியில் பசிதாகம், சோர்வு முதலியவை ஏற்படாமலிருக்க நினைத்து 'பலே, அதிபலே' என்ற இரு மந்திரங்களை உபதேசித்தார். இருவரும் அதை சிரத்தையுடன் ஏற்று அப்பஸித்தார்கள். இக்காட்சியை மனதில் கொண்ட ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் அதை விசேஷித்து 'பலாதிபல செல கங்கலேதா' என்று தெரிவிக்கிறார். அதாவது, பலே, அதிபலே' உம்மிடம் பிரகாசித்தன அல்லவா! ராமா, "நீர் பரமாத்மா! உமக்கு பசி, தாகம் களைப்பு இவைகள் ஏது? மனுஷ்யனாக நடிக்க வந்திருக்கிறீர்! இதை அறிந்த கௌசிகரும் உமக்குத் தயங்காமல்

இவைகளை உபதேசிக்கக் கடமைபட்டார். நீரும் வினயமுடன் ஸாமான்யரைப்போல ஏற்றீர். உம்மை இன்னார் என்றறிந்து அந்த மந்த்ர தேவதைகள் உம்மால் அழைக்கப்பட்டு, உம்மிடம் சேர்தலால் இன்னும் அதிகமாக ப்ரகாசித்தன'' என்றார்.

மேலும் 'பலாதிபலா' என்றதில் மற்றொரு பொருளும் ஏற்கத் தகும். ''ஸ்ரீ ராமா உம்மிடம் (அப்ரமேய பௌருஷ) பலமும் (தர்ம ஸத்ய வ்ரத) அதிபலமும் காணப்படுகின்றன. அதில் க்ஷத்ரியர்களுக்கு மேலான தர்மமான 'ஆந்ரு ஸம்ஸ்யம்' என்ற கருணை கூர் மன்னிப்பு உம்மிடமுள்ள அதிபல ரஹஸ்யமாகப் பிரகாசிக்கிறது.''

''இவ்வாறிருக்க, உம்மை நினைத்திருப்பவர்களின் ('ராமா' என்ற நாமஸ்மரணம் அன்றி வேறொன்றும் செய்ய அறியாதவர்களின்) பலமும், பலமின்மையும் உமக்குத் தெரியாமல் போனதா!''

''முன்பு காக்கை ரூபத்தில் வந்தான். அஸுரக் குணத்துடன் இந்திர குமாரன், ஸீதாதேவியைத் துன்புறுத்தினான், அதைக் கண்டத் தாங்கள் அடங்காத சினம் கொண்டீர். அந்த அற்பன் மீது ஒரு புல்லை ஏவினீர். அது ப்ரும்மாஸ்த்ர மாகியது. உம்மை அண்டியிருக்கும் தேவியைத் துயரப்படுத்தின இந்த துஷ்டன் காக்கைதானே என்றிராமல் அவனுக்குப் பிரம்மாஸ்திரம் பிரயோகம் செய்தீர், பயந்து ஓடின அந்தகாக்கையைக் காப்பவர் மூவுலகிலும் இல்லாததாலால், அது உம்மையே முடிவில் சரண் அடைந்தது. தயவும் இரக்கமும் உமக்கு அதனிடம் உடனே பிறந்தது. அதை மன்னித்து உயிர் பிச்சை அளித்தீர். உம்மிடம் தோன்றின அடல்சினமும், அதன் விளைவான அதிபலமும்,

ஸஹஜமான உம் கருணை வெள்ளத்தாலே சாந்தமடைந்து அதிக்ருபையாக மலர்ந்தது. இதுவொன்றே எங்களுக்கும் போதுமான சான்று.'

"இப்பொழுதும் உம்மை ஒன்று கேட்கிறேன். ஒரு பக்ஷிக்காக (த்விஜம்) இரங்கிய தாங்கள் இக் கலியில் த்விஜர்கள் (இரு பிறப்பாளர்கள்) ஸன்மார்க்கம் பிசகி மயங்குகிறார்கள். அவர்களை வழிமறித்து எதிர்க்க ஆறு (ஊர்மிகள்) அலைகள் எப்பொழுதும் பலமாக அடிக்கின்றன, பசி, தாகம், சோகம், மோகம், ஜனனம் மரணம் என்பவை அந்த ஆறு அலைகள். உம்மை உபாஸிக்க வேறு வழிகள் தெரியாதவர்களே ஆயினும் 'ராமா, ராமா' என்று அறிந்தோ அறியாமலோ சொல்லுகிறார்கள். இவர்கள் ஸன்மார்க்கத்தில் செலுத்தி உமது திருவுளத்திற்கு உசிதம்போல் ரக்ஷிக்கவேண்டாமா? இதில் ஏதேனும் ஆக்ஷேபம் உண்டா"?

இக் கீர்த்தனத்தின் மூலம் தியாகராஜஸ்வாமிகள் தன்னையே பகவானுக்கு அறிவிக்கிறார் என்பது பாவம். அக்காலத்தில் பிராம்மணர்களில் சிலர் பாஷண்டர்களாக இருந்ததை ஸ்வாமிகள் அறிந்து வருந்தி ஸ்ரீராமபிரானிடம் முறையிட்டார் என்றும் கொள்வார்.]



# திரை விலகுமா ?

ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் ஒருசமயம் திருவையாற்றிலிருந்து புண்ய ஸ்தல யாத்ரை புறப்பட்டு, திருப்பதி க்ஷேத்ரம் வந்து சேர்ந்தார். ஏழுமலைகளையும் கடந்து, அங்கு வீற்றிருக்கும் பரம புருஷனை வெகு ஆவலுடன் தரிசிக்க ஸந்நிதி வந்தார். அவர் ஸந்நிதி வந்த சமயம் அங்கு பகவானை தரிசனம் செய்ய முடியாமல் திரை போடப்பட்டிருந்தது. அது கண்டு மிகவும் மனம் வாடி நின்றார். திரை விலகி திருப்பதி வேங்கடரமணனை தர்சனம் செய்வது எப்போது என ஏங்கி நின்றார். அருகில் இருந்தவர்கள் "சீக்கிரம் தரிசனம் கிடைத்துவிடும். கவலை வேண்டாம்! இதோ அழைத்து வருகிறோம் அர்ச்சகர்களை!" என்றெல்லாம் ஆறுதல் சொன்னார்கள். இந்த ஆலயத்தின் திரையை விலக்கி விடலாம்! யாராலும் விலக்க முடியாத திரை நமக்குள்ளே ஒன்றிருக்கிறது. அதை விலக்க வேண்டியவன் இந்த வேங்கடரமணனே! இவனையே வேண்டுகிறேன்! என்று தன் ஹிருதயபாவம் த்வனிக்க ஒரு கீர்த்தனம் மூலம் அந்த பரம புருஷனை வேண்டுகிறார்.

ராகம்—கௌளீபந்து ] [ தாளம்—ஆதி.

### பல்லவி

தெரதிய்யக ராதா நாலோனி
திருப்பதி வேங்கட ரமண மத்ஸரமனு (தெ)

### அனுபல்லவி

பரம புருஷ தர்மார்த்த மோக்ஷமுல
பாரதோலு சுன்னதி நாலோனி— (தெ)

சரணங்கள்

1 மத்ஸமு ஆகலிகொனி காலமுசே-மக்னமைன ரீதியுன்னதி
அத்ஸமைன தீப ஸந்நிதினிமறு-கட்டபடி  சொசிநட்
டுன்னதி—(தெ)

2 இரவொந்தக புஜியிம்சு ஸமயமுன—ஈகதகுலு ரீதியுன்னதி
ஹரிதியானமு ஸேயுவேள சித்தமு—அந்த்யஜுவாடகு
போயி நட்டுன்னதி—(தெ)

3 வாகுரமனிதெலியகம்ருககணமுலு-வச்சிதகுலுரீதியுன்னதி
வேகமே நீ மதமுனனு ஸரிஞ்சிதி-த்யாகராஜநுத
மதமத்ஸர மனு—   (தெ)

பொருள்:— பல்லவி : அனுபல்லவி : திருப்பதி வேங்கடரமண! என்னுள்ளே இருக்கும் மாத்ஸர்யம் என்ற திரையை விலக்கலாகாதா? ஹே பரம புருஷ! தர்மம், அர்த்தம், மோக்ஷம் இவைகளை இந்த மாத்ஸர்யம்) தூரத்திலே விரட்டுகிறதே!

சரணங்கள் : 1 மீன் தன் பசிக்கு தூண்டில் முள்ளை நாடி (அறியாமல் மயங்கி) அழிவடைவதுபோல உள்ளது என் நிலைமை. நிர்மலமான தீப ப்ரகாசத்தைப் பரவமுடியாதபடி நடுவிலே (மாத்ஸர்யம்) வந்து மறைக்கிறது.

2 இரையை (ஆகாரத்தை) நன்கு புசிக்கும் தருணத்தில் ஈ தொண்டைக்குள் சிக்கினதுபோல் இருக்கிறது என் நிலை. ஹரியை த்யானம் செய்யும் பொழுது என் சித்தமானது (போகத் தகாத இடங்களுக்கு) புலைச் சேரியில் போய் உட்கார்ந்திருக்கிறது.

3 வலை விசியுள்ளதை அறியாமல் மிருகக் கூட்டங்கள் அதில் வந்து சிக்கிக்கொள்வதுபோல என் நிலைமை இருக்கிறது. உன்னை வேண்டுகிறேன்! (தியாகராஜநுத) உன் அருள் பெரும் கருத்தில் நிற்கிறேன். மதம் மாத்ஸர்யம் என்னும் திரைகள் விலக்கலாகாதா?

கருத்து — புத்தியை மயக்கி மருளச்செய்வது மாத்ஸர்யம். காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் இவைகளில் மாத்ஸர்யமே அழுத்தமான திரை என்கிறார். மற்றவைகளை ஜயித்தாலும் இதற்கு வசப்படவேண்டியவனே. பரமபுருஷன் அருள் இல்லாவிடில் தப்பமுடியாது தூண்டிலில் அகப்பட்ட மீன், வலையில் சிக்கிய விலங்குகள் இதற்கு உபமானமாகச் சொன்னார். அறியாதவரும் இடையூறுகளுக்கு ஈ தொண்டையில் சிக்கினதைச் சொன்னார். மனம் விபரீத வேகமுடன் அலைகிறது என்பதற்கு, மற்றொரு (ஹாஸ்யமான) உபமானம் பஜனை செய்து கொண்டிருக்கும் வேளையில் இவன் சித்தம் புலைச்சேரிக்குப் போனது விநோதம்தானே?

"இத்தனையும் பார்த்திருக்கிறாய்! நானோ உன்னை நாடி வந்து கொண்டிருக்கிறேன்! உன் பக்தன்! எனக்கு ஏன் இந்த மறைவு? உன்னை நன்கு அறிந்துகொள்ள 'மாத்ஸர்யம்' என்ற திரையை விலக்கலாகாதா!" என்றார். திரையும் விலகியது.



# ஸாமர்த்யசாலி.

ஒருவர் : உங்கள் பிள்ளையை காலேஜில் சேர்த்து விட்டீராமே! எப்படி இடம் கிடைத்தது?

மற்றவர் : காலேஜில் Philosophy (தத்வசாஸ்த்ரம்) பாடத்திற்குத்தான் இடமிருந்தது. வேறு வழி இல்லை. பிள்ளையை அதையே எடுத்துக்கொள்ளச் சொன்னேன். இடம் கிடைத்துவிட்டது.

ஒ : ஆமாம்! உமக்கும் உமது பையனுக்கும். Philosophy க்கும் வெகு தூரமாயிற்றே?

ம : அப்படிச் சொல்லாதேயும்! அதெல்லாம் முன்பு உமக்குத் தெரியாதா! தானே காலையிலும் மாலையிலும் வேதாந்த பாடம் கேட்கப் போகிறேனே!

ஒ : பேஷ்! பேஷ்!! ஆமாம் உமக்கு வேதாந்தம் ஏதாவது புரிகிறதா ?

ம : என்ன ஓய் அப்படிக் கேட்கிறீர்! நீரே வந்து கேட்டுப் பாரும்! எங்கள் குரு என்ன அத்புதமாக உபன்யாஸம் செய்கிறார்? ஒவ்வொன்றையும் எப்படி இனிமையாக விளக்குகிறார்? பொழுது போவதே தெரிகிறதில்லை. அது போகட்டும். உம்மைப் பார்த்தேனே இப்போது! அவசரமாக ஒரு வீசை காப்பிக்கொட்டை வாங்கிக் கொடுப்பீரா? எங்கள் குரு சொல்லியனுப்பினார். ரொம்ப சிரமமாக இருக்கிறதாம்! என்னையே நம்பியிருக்கிறாராம்!

ஒ ! அவர் உம்மை நம்பியிருக்கிறார். நீர் என்னை நம்புகிறீர் உங்களிருவரையும் வேதாந்தம் நம்பியிருக்கிறதாகத் தெரியவில்லை.

ம : வேதாந்தம் என்றால் என்ன என்பது இருக்கட்டும். நமக்கு அவசியமா? அவசியமில்லையா? என்பது பற்றியும் பேச்சு வேண்டாம். ஒன்று சொல்லுகிறேன். நாம் எண்ணியபடி சில கார்யங்கள் நடக்காத போது, வேதாந்தம் தெரிந்துகொண்டால் கொஞ்சம் ஆறுதலாக இருக்கிறது.

ஒ : தன்னம்பிக்கை இல்லாதவன்தான் வேதாந்தம், வேதாந்தம் என்பான்! சோம்பேறியாக உம்மை ஆக்கிக் கொள்வது தவறு இல்லையா ?

இந்த சம்பாஷணை முழுவதும் கற்பனையல்ல இதில் கருத்தும் சிறிது காணக்கிடக்கிறது. இது தருணம் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் கீழ்க்கண்ட கீர்த்தனம் கருத்தில் பதிந்தது.

ராகம்—வர்த்தனி] [தாளம்—ரூபகம்

பல்லவி

மனஸா மன ஸாமார்த்ய மேமி ஒ— (ம)

அனுபல்லவி.

வினு ஸாகேத ராஜு விச்வமனே ரதமுனெக்கி
தன ஸாமர்த்யமுசே தானே நடிபிஞ் செனே (ம)

சரணம்

அலநாடு வஸிஷ்டாதுலு பட்டமு கட்டெடு பலு
குலவினி வேகமே பூஷணமுல னொஸகின கைகனு
பலுமாறு ஜகம்புலு கல்லலனின ரவி ஜுனிமாய
வலவேஸி த்யாக ராஜ வரதுடு தா ஜனக
லேதா (ம)

பொருள்:—பல்லவி: ஓ மனமே! நம்முடைய திற மை என்னவாகும்?

அனுபல்லவி: (மனமே) கேள்! ஸாகேத ராஜ னை ஸ்ரீ ராமசந்த்ர மூர்த்தி அகில உலகமெனும் ரதத் திலேறித் தன்னுடைய ஸாமார்த்யத்தால் தானே செலுத் தினார் (அன்றோ!)

சரணம்: அன்று ஒருநாள் வஸிஷ்டர் முதலிய வர்கள் ஸ்ரீ ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய தீர்மா னித்ததை (மந்தரை என்ற கூனியின்) வார்த்தையால் கேட்டு, உடனே (மகிழ்ச்சி பொங்க) திவ்ய முத்து மாலையைக் கொடுத்த கைகேயீ (பிறகு என்னவானாள்)? பலவிதமாக உலகம் பொய் என்று பேசின சுக்ரீவன் (பிறகு என்ன ஆனான்)? இவர்களை, ஸ்ரீ ராமா! உம் முடைய மாய வலைவீசி அவர்கள் சொன்னதற்கு முற்றிலும் மாறானவகையில் நடத்தி விட்டீரல்லவா? இந்த தியாகராஜனுக்கு உம்முடைய அனுக்ரஹம் எப்பொழுதுமிருக்கிறது. (அதனால், ஏ மனமே! நீ அடங்கிக்கிட, உன் ஸாமர்த்யம் என்ன செய்யும்)?

கருத்து:— ஸர்வேச்வரனுக்கு இந்த அகில ப்ர பஞ்சமும் ரதம்போல; அதில் ஸாரதியாக அவரே அமர்ந்திருக்கிறார். அவருடைய புத்தி, மனம், சித்தம் என்ற கடிவாளங்களைப் பிடித்து, காலம் எனும் குதிரை களைத் தன் வழி செலுத்துகிறார்.

அந்த ஸர்வேச்வரனே ஸ்ரீ ராமன், அவரே இந்த தேகமெனும் ரதத்தில் வீற்றிருக்கிறார். என் புத்தி சித்தத்தை அடக்கி ஆண்டு, செலுத்துபவர் அவரே! நானல்ல!

கைகேயி ஸ்ரீ ராமன் முடி சூடுவான் என்று கேட்டு பெருமகிழ்ச்சி அடைந்தாள். அடுத்த நிமிஷம் பெரும் கோபம் கொண்டு ராமனை வனம்புகச் செய்தாள். இது ச்வர ஸங்கல்பம் என்றனர்.

வாலி வதம் அடைந்து விழுந்ததைக்கண்டு பொறுமல் ஸுக்ரீவன் துக்கித்து ப்ரலாபித்தான். 'தமயனைக் கொன்றேன், நான் பாவி! எனக்கு உலகில் எதுவுமில்லை! உலகமே அநித்யம்!'' என்றெல்லாம் சில வேதாந்த மொழிகள் பேசினான், அதன்படி நடந்தானா? அடுத்த நாளே கிஷ்கிந்தைக்குச் சென்று, முடிசூட்டிக்கொண்டு தன் இரு மனைவிகளுடன் சிற்றின்பத்தில் மூழ்கிக் கிடந்தான். இதை ஈச்வர மாயை என்றனர்.

ஸ்ரீ ராமா! உலகத்தில் நீர் ஒருவர்தான் ஸாமர்த்திய சாலி! உம்மைப்போல் எங்களால் திறமையுடன் ஸுக துக்கங்களைத் தாண்ட முடியாது! நீரே ஈச்வரன் என்பதால் அது உம்மால் முடிந்தது. நீரே ஆள்கிறவர், நாங்கள் ஆளப்பட வேண்டியவர்கள்.

உம் ஸங்கல்பம் எதுவோ அதை யாரும் அறிய முடியாது! என் திறமை என்று நான் தனியாக நினைத்துக்கொண்டால் அது வீண் பேச்சு! எனக்குள்ள சொற்ப சக்திகளை உம் அடியில் ஸமர்ப்பித்துவிட்டு, உம்வசமாக என்னை எப்பொழுதும் நினைத்து, உலக காரியங்களைச் செய்துகொண்டு போகிறேன். இனி எனக்கு என்னைப் பற்றி கவலையில்லை. வரதனாக இருந்து, என்னுடைய பயத்தைப் போக்கி, நல்வழியில் செலுத்தி விடுவீரல்லவா!



# எது உபநிஷத் ?

கேள்வி : "தியாகோபநிஷத்" என்ற தலைப்பின் கீழ் தியாகராஜ கிருதிகளை எழுதுகிறீரே. இந்த உபநிஷத் எங்கிருக்கிறது? இது எந்த வேதத்தைச் சேர்ந்தது? எந்த ரிஷிவாக்யம் ஐயா? இப்படி 'திடீர், திடீர்' என்று உபநிஷத்துக்கள் தோன்றினால், அநாதியான சுருதிவாக்கியங்களுக்கு என்ன மதிப்பு? இது வைதிகர்களின் அனுஷ்டானத்திற்கு விரோதம் அல்லவா?

பதில் : திருவையாற்றில் விளங்கின ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் பக்திப் பெருக்கால் ஏற்பட்ட ஸ்வானுபவ வாக்யங்களே அவருடைய கிருத்கள். மஹா பண்டிதர்களும், ஸுசீலர்களுமான அவருடைய சிஷ்யர்கள் இந்த கிருதிகளில் உள்ளடங்கின விஷயங்களின் மேன்மையை அனுபவித்து, உபநிஷத் ஸாரமாக விளங்குவதால், பக்தியுடன் ஸ்வாமிகளின் கிருதிகளை 'தியாகோபநிஷத்' என்று வழங்கி வந்தனர். ஸ்வாமிகள் எந்த நிலையில் இந்த கிருதிகளை அமைத்தார் என்பதை அவரே சொல்லக் கேட்போம்.

ராகம்—அஸாவேரி ] [ தாளம் ஆதி.

பல்லவி

ஏபனிகோ ஜன்மிஞ்சிதி னனி
நீ வெந்த்ஸ வலது ஸ்ரீ ராமா நேனு— (ஏ)

அனுபல்லவி.

ஸ்ரீ பதி ஸ்ரீ ராம சந்த்ரா நீ
சித்தானிகி தெலியதா நேனு — (ஏ)

### சரணம்

வால்மீகாதி முனுலு நருலு நின்னு
வர்ணிஞ்சிரி நாயாச தீருனு
மேல்மியை உண்டு ஸத்பக்துலு
மெத்ஸுதுரே த்யாக ராஜனுத நேனு— (ஏ)

பொருள்:— பல்லவி: எந்த காரியத்திற்காக இந்த ஜன்மம் நான் எடுத்தேன் என்று, ஸ்ரீ ராமா! நீ எண்ண வேண்டாம்.

அனுபல்லவி; ஸ்ரீபதியான ஸ்ரீ ராமச்சந்திரா! உன் சித்தத்திற்கு இது தெரியாததில்லை.

சரணம்: வால்மீகி முதலான ரிஷிகள் பலரும் (பிற் காலத்து பக்தியுள்ள) மனிதர்களும் உன்னை வர்ணித் திருக்கிறார்கள். அதனால் என் ஆசை தீருமா? மேன்மை உள்ள ஸத் பக்தர்கள் மெச்சுவார்களே! தியாகராஜனால் ஸ்துதிக்கப்படுகிற ராமா! (தெரிவிக்கவேண்டும்.)

கருத்து:— இந்த கீர்த்தனத்தின் பதவுரையைப் பார்க்கிறபொழுது ஒன்றும் விளக்கமாகத் தெரியவில்லை. இதுதான் இவருடைய வாக்கியங்களின் சிறப்பான அம்சம். இதற்கு தற்கால திருஷ்டாந்தம் ஒன்று தோன்று கிறது. டெலிபோனில் பேசுகிறார் ஒருவர். அதைப் பார்த்துக்கொண்டிருக்கிறார் அவர் நண்பர். அவருக்கு, மற்றொரு கோடியில் இருந்து அந்த டெலிபோனில் என்ன பதில் வருகிறது என்று கேட்காது. ஆனால் முதலில் பேசினவருடைய வார்த்தைகளைக்கொண்டு என்ன விஷ யம் பேசப்பட்டது என்று ஒருவாறு ஊகிக்கலாம் அல்லவா?

ஸ்ரீ ராமபிரானோடு நான் ஸல்லாபம் செய்த விஷயத்தையே ஒவ்வொரு கிருதியிலும் அமைத்திருக்கிறார். அவர் பகவானுடன் ஸல்லாபம் செய்த ஒரு பகுதியைத்தான் நாம் தெரிந்துகொள்ள முடிகிறது. இந்த ஊஹத்தையே நாம் கையாண்டு, இந்தக் கீர்த்தனத்தின் முழுமையையும் அனுபவிக்கப் பார்க்கலாம்.

ஸ்ரீஸ்வாமிகள்: ஸ்ரீபதி, ஸ்ரீராமசந்திரா இந்த ஜன்மம் ஏன் எனக்கு வந்தது?

ஸ்ரீ ராமபிரான்; இந்த ஜன்மம் உயர்ந்ததுதானே தியாகராஜா! இதில் உனக்கு என்ன வருத்தம்?

ஸ்வா: உம்மருளால் மேன்மையான பிறப்பும், புத்தியும், பக்தியும் பெற்றேன். உமக்கென்று ஒரு நற் கைங்கரியமும் செய்யாமலிருக்கிறேனே!

ராம: செய்யலாமே! ஏன் இதுகாறும் செய்யாமல் இருந்து விட்டாய்?

ஸ்வா: செய்வேன்! செய்யாமல் இந்த ஜன்மத்தை வீணாக்கி விடுவேன் என்று எண்ண வேண்டாம் பிரபோ!

ராம: என்ன கைங்கரியம் செய்யப்போகிறாய் தியாகராஜா? நான் அறியலாமா?

ஸ்வா: இதென்ன கேள்வி ப்ரபோ! தங்களுக்குத் தெரியாதா?

ராம: நீயே சொல்லிக் கேட்க விரும்புகிறேன்!

ஸ்வா: வெகு நாளைய ஆசை ஸ்ரீ ராமச்சந்திரா! உம்முடைய கல்யாண குணங்களை நீர் அளித்த வாக்கினால் பாடி மகிழவேண்டும் என்பதே!

ராம : அதைத்தான் முன்னம் வால்மீகி முதலிய மகரிஷி களும், எத்தனையோ பக்திமான்களும் அந்தந்த பாஷைகளில் புராணங்களிலும், காவியங்களிலும் பாடியிருக்கிறார்களே! அதைப்படித்தால் போதாதா? வேறு புதிதாக ஸாஹித்யம் செய்து பாடு வானேன் ?

ஸ்வா : அப்படித் தாங்கள் சொல்லலாகாது ப்ர போ ! பெரியோர்களின் வாக்குகளைத் தினமும் பாராயணம் செய்து வருகிறேன். அதனால் என் ஆசை வளர்கிறது. நானும் மனம் குளிரப் பாட வேண்டும் என்ற என் ஆசை அதிகமாகிறது. எத் தனை தரம் உம்முடைய குணங்களைச் சொன்னாலும், கேட்டாலும், எத்தனைபேர் புதுப்புது கவிதைகள் புனைந்தாலும் அவைகள் குற்றங்களோடு விளங்கி னும் பெரியோர்கள் அவைகளைப் பூர்ணமாக ஏற்றுக் கொள்வார்கள் என்பது உலகம் அறிந்ததே! ஆத லால் தாங்கள் எனக்கு அருள் செய்யவேண்டும்.

இதற்கு என்ன பதில் கிடைத்திருக்கும் என்பதை அவருடைய காஞ்ருந வர்ஷமான நூற்றுக்கணக்கான கீர்த்தனங்களே வெளிப்படுத்தும். தன் ஆசை நிறையப் பாடின வாக்கியங்களில் பகவானுடைய ஸம்மதமும் பெரி யோர்களுடைய பாராட்டுதலும் பெற்ற கிருதிகள் அனைத் தும் பகவத் ஸம்பந்தம் பெற்று இருப்பதால், மோக்ஷோ பாயமான பக்திமார்க்க ப்ரதர்சனமான பரமோபனிஷத் தின் ஸாரம் என்பதில் ஸந்தேஹம் யாது ?



# பஜனையும் கானமும்.

தனுர்மாதத்தில் எங்கும் பஜனைமயமாக இருக்கிறது. கானமழை பெய்துக்கொண்டு இருக்கிறது. அதன் ப்ரதித்வனி அவரவர் வீடுகளில் வானொலியின் மூலமாக அனுபவிக்கப்படுகிறது. பஜனையில் ஈடுபட்டவர்கள் கானத்தில் அதிககவனம் செலுத்துவது இல்லை. கானத்தில் வல்லவர்கள் பஜனை வழி போவதில்லை. இதன் அருமையை ஸ்ரீ ஸ்வாமிகள் கீழ்க்கண்ட கிருதியின் மூலம் ஸ்ரீ ராமபிரானிடம் தெரிவித்துக் கொள்கிருர்.

ராகம்-நாயகி] [தாளம்-ஆதி.

பல்லவி

நீ பஜன கான ரஸிகுல
நேநெந்து கான ரா ராம— (நீ)

அனுபல்லவி

ஸ்ரீ பவ ஸரோஜா ஸனுதி சசீ
மனோ ரமண வந்த்ய இலலோ— (நீ)

சரணம்

ஸகுண நிர்க்குணபு நிஜதப்பரலனு
ஷண்மதமுல மர்ம மஷ்ட ஸித்துல
லகலு ரூப ஸந்தஸில்ல கண்டினி
வரானன தியாக ராஜ வினுத— (நீ)

பொருள் — பல்லவி: ஸ்ரீ ராமா! உன்னுடைய நாம பஜனை, உன் குணங்களைக் கானம் செய்வது, இந்த இரண்டு ரஸங்களையும் கலந்து அனுபவித்தவர்களை நான் இவ்வுலகில் எங்கும் கண்டதே இல்லை.

அனுபல்லவி: பரமசிவன் (பவன்), நான்முகன் (ஸரோஜாஸனன்), இந்திரன் (சசீரமணன்) இவர்களால் துதிக்கப்படுகிற ராமா! (இவர்கள் அந்த ரஸத்தை அனுபவித்திருப்பார்கள் அன்றோ!

சரணம்: ஸகுணோபாஸனை (திவ்ய நாம பஜனை) நிர்குணோபாஸனை (ப்ரம்ம பாவனை) இவைகளில் எது உகந்தது என்ற உண்மையையோ அல்லது அதன் மற்றொரு வாதத்தையோ, ஆறு மதங்களின் ரஹஸ்யத்தையோ, அஷ்டாங்க யோக ஸித்தியையோ அறிந்து, அதன் வழிபடுகிறவர்கள் என்ன ரஸத்தை அனுபவிக்கப் போகிறார்கள்? ஸகல தத்துவங்களையும் உன் அழகு வாய்ந்த முக தரிசனத்தில் பெற்றுவிடலாமே? இதை நினைந்து உருகி இந்த தியாகராஜன் உன்னைப் போற்றிய வண்ணம் இருக்கிறேன்.

கருத்து: பஜனையும், கானமும் வேறல்ல. ஸுஸ்வரமான கானத்துடன் பகவன் நாமாவை பக்தியுடன் பஜிப்பவன், பகவானைத் தரிசிக்கிறான். பகவத் தரிசனம் பெற்றவர்க்கு அதைத்தவிர வேறு ருசி என்ன இருக்கிறது? அதையடையும் வரை, கான பஜனை, அவன் நினைவில் அந்த ஆனந்தத்தை அளிக்கக்கூடியது.



# பக்தியும் பரிவும்.

நமக்கு வேண்டியவர்கள் நாம் தனியே இருக்கிற பொழுது எவ்வளவு நிந்தித்தாலும், கஷ்டப்படுத்தினாலும் பொறுத்துக்கொள்கிறோம். நாலுபேர் முன்னிலையில் நம்மை அவமானப்படுத்தியோ, மட்டந்தட்டியோ பேசினால், யாருக்கும் பொறுப்பதில்லை. இது விஷயத்தில் தந்தை இடத்திலும் தனயனும் மனம் நொந்து கொள்ளுகிறான். தியாகராஜ ஸ்வாமிகளுக்குத் தந்தையும் தாயும் ராமனே. அந்த ராமபிரானே தனக்கு இதைச் செய்துவிட்டானே என்று கதறுகிறார்.

ஸ்வாமிகளுக்கு ஒரு தனயன் உண்டு. அவருக்கு பக்தியும், வித்தையும் இல்லை. ஆனால் லௌகீக புத்தி நிறைய இருந்தது. தன் தம்பி நாளெல்லாம் வீணைப் பாடிப்பாடி பஜனை செய்வது அவருக்குப் பொறுக்கவில்லை. அதற்குப் பரிகாரமாக, ஒருவருக்கும் தெரியாமல், ஸ்வாமிகள் பூஜித்திருக்கும் ராம விக்ரஹத்தையே காவேரியில் வீசி எர்ந்து விட்டார். விக்ரஹத்தைக் காணாமல் வாடின ஸ்வாமிகள், இது தன்னுடைய தமையனின் காரியம் என்று அறிந்தும் அவரை நோகாமல் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியையே கோபித்துக் கொள்கிறார்.

ராகம்—பைரவம்] [தாளம்—ஆதி

பல்லவி

மரியாத காதய்யா மனு பவதே மய்ய (ம)

அனுபல்லவி

ஸரிவா ரலலோ நன்னு ஸௌகஸே யுடெல்ல
ஹரிஹரி நீவண்டி கருணா நிதிகி— (ம)

**சரணம்**

தனவார லன்யுலனே தார தம்யமு முனு
கனுடைன தாசரதிகே கலதனி கீர்த்தி கதா
நின்னு பாயகேரனி நன்னு ப்ரோவ குண்டேதி
தனதஸ குடகு த்யாகராஜ பூஜித— (ம)

பொருள் :— பல்லவி : *உனக்கு நல்லதா, தருமமா, முறையா, உனக்கேற்றதுதானா? (மரியாத காதய்யா— என்ற பத ப்ரயோகத்தின் அழகும், அதைப் பாடும் பொழுது ஸ்வாமிகளின் ஹ்ருதய அர்த்த பாவம் வெளிப் படுகிறது என்பதும் அறியவேண்டியது) என்னை ஏன் இப்படிச் செய்து விட்டாய்?) காப்பாற்றுமல் விட்டு விட்டாய்?*

அனுபல்லவி : *சரி நிகரானவர்களிடத்தில் (என்னைப் போன்றவர்கள் முன்னிலையில்) என்னைப் புறக் கணித்து விட்டாயே! உன் போன்ற கருணாநிதிக்கு இது அழகல்ல.*

சரணம் : *தன்னைச்சேர்ந்தவன், அன்னியன் என்ற வித்தியாசம் இல்லையா? தசரதன் பிள்ளை சீமானை உனக்கு (ஓர் ஏழை தியாகராஜன் என்ன ஜோடி என்ற) எண்ணமுண்டா? உன்னைப் பிரிந்தே அறியாத என்னைத் தவிக்கச் செய்வது முறையல்ல.*

கருத்து : *உன் பக்தனை என்னை நீர் பிரிந்து இருப்பதே எனக்கு மீளாத் துயரம். பிறர் முன்னிலையில் அவமானப்படாமல் காப்பாற்றுவது உன் உரிய கடமை*



# கிரஹபலன்.

எல்லோருடைய கவனத்தையும் எளிதில் கவரக் கூடிய யோசனை ஒன்று வெகு காலத்திற்கு முன்பு ஒருவர் சொன்னாராம். "கொஞ்சமாவது ஜோஸ்யம் சொல்லக் கற்றுக்கொள். உன்னைப் பத்துபேர் எப்பொழுதும் சுற்றிக்கொண்டேயிருப்பர்" என்றாராம் அவர். ஜோதிஷம் எல்லோரையும் மயக்குகிறது. நம்பிக்கை இல்லை என்று சொல்லிக்கொண்டிருப்பவன் கூட ஒரு சமயம் அதற்குத் தலை அசைக்கவேண்டியவனாகிறான் பௌதீக அறிவு முதிர்ந்த நாகரீக மேல் நாடுகளில்தான் நம்மைவிட அதிக ஜோதிடப் பித்து இருக்கிறது என்கிறார்கள்.

இது விஷயமாக ஜோதிஷ சாஸ்திர வித்பன்னரான மஹான் தியாகராஜஸ்வாமிகளின் வாக்யம் என்ன என்பதைப் பார்ப்போம்.

ராகம்—ரேவகுப்தி] [தாளம்—தேசாதி

**பல்லவி**

க்ரஹ பலமேமி ஸ்ரீ ராமானுக்ரஹ பலமே பலமு- (க்ர)

**அனுபல்லவி**

க்ரஹ பலமேமி தேஜோமயவி
க்ரஹமுனு த்யானிம்சு வாரிகி நவ— (க்ர)

**சரணம்**

க்ரஹபீடல பஞ்ச பாபமுல நா
க்ரஹமுலு கல காமாதி ரிபுல நி
க்ரஹமு ஜேயு ஹரினி பஜிம்சு
த்யாக ராஜுனிகி ரஸிகாக் ரேஸருலகு— (க்ர)

பொருள் :— பல்லவி: நவக்ரஹங்களின் பலனைத் தெரிந்துகொள்வதனால் என்ன பயன் அடையப் போகிறாய்? (வருவது வந்தே தீரும்). ஸ்ரீ ராமனுடைய அனுக்ரஹத்தைப் பெறுவதையே நல்ல பலனாக நினை.

அனுபல்லவி: ஒளி மிகுந்த திவ்ய ஸ்வரூபனான ஸ்ரீ ராமமூர்த்தியை இடைவிடாமல் தியானம் செய்கிறவர்கள் நவக்ரஹங்களைப் பற்றியும் அவைகளின் பலாபலன்களைப் பற்றியும் எண்ணுவார்களோ.

சரணம்: உன்னிடத்தில் உள்ள, காமம் க்ரோதம் போன்ற ஆறு பகைவர்கள் உன்னைத் தூண்டி, பாபச் செயல்கள் பலவற்றிலும் உன்னைப் புகுத்தி வேதனை அடையச் செய்கின்றனர். இதைவிடப் பெரிதல்ல கிரஹங்களாலுண்டாகும் வேதனைகள். ஸ்ரீ ராமனை என்றும் நினைத்திருப்பவர்களுக்கு, இந்த ஆறு பகைவர்களின் சேஷ்டை ஒடுங்கிப்போகாதோ? இந்த மேலான வழியையே (ஜோதிஷ சாஸ்திரம் நன்கு கற்றுத் தெளிந்த) இந்த தியாகராஜன் அறிந்து கொண்டேன். என்னைப் போல் பகவானை பக்தியுடன் பஜிப்பவர்களும் இதைத் தெரிந்துகொண்டுள்ளார்கள். இவர்களுக்கு நவக்ரஹங்களின் பலாபலன்களைப் பற்றித் தெரிந்து என்ன ஆக வேண்டும்.

கருத்து: நவக்ரஹங்கள் பகவானுடைய ஆணைக்குட்பட்டே ஸஞ்சரிக்கின்றன. தங்களுடைய கதிகளால் அதற்குட்பட்ட ஜீவராசிகளுக்கு ஸுக துக்கத்தை பலவழிகளில் உண்டாக்குகின்றன. பகவானையே தியானம் செய்து அவருடைய கிருபையைப் பெற்றவனை, இவைகள் என்ன செய்யும்?

கிரஹ பலன்களைத் தெரிந்துகொண்டு அதன்படி புத்தியைச் செலுத்துவது பொதுவான காரியம். பகவானையே நம்பி அவனிடத்தில் அசையாத நம்பிக்கையும் பக்தியும் கொண்டிருப்பது சிறந்த காரியம்.

மேலும் பகவத்யானத்தில் மூழ்கியிருப்பவன் ஞானியின் நிலையை விரைவில் அடைகிறான். அந்த நிலையில் அவன் காமாதி சத்ருக்களை வென்றவன். காம க்ரோதங்கள் தான் உலகில் ஒருவனுடைய இன்ப துன்பத்திற்குக் காரணம். அதையே அவன் புறக்கணித்துவிட்டு, பகவத் ஸேவையையே பெரிதெனக் கொண்டிருப்பதால், உலகில் இன்ப துன்பங்களைக் காட்டும் நவக்ரஹங்கள் ஏது செய்தாலென்ன? செய்யாமல் விட்டால் என்ன? இதனால் அந்த பக்தனுக்கு ஆவதொன்றும் இல்லை அல்லவா?

## ஸங்கீத ஞானம்.

"நம்நாட்டு ஆலயங்களை நாம் பாதுகாக்க வேண்டியது மிகுந்த அவசியம். ஏனெனில் அங்குதான் நம்முடைய பண்டைய சிற்பங்களும் கலாசாரமும் பொதிந்து கிடக்கிறது" நம்முடைய தென்னாட்டிலேயே, எந்த ஒரு சிறிய கோயிலை எடுத்துக் கொண்டாலும் அங்கு பிரமிக்கத்தக்க வகையில் அமைந்த பல சிற்பங்களைக் காண்கிறோம். ஆனால் சிற்பங்களையும், அதில் தன் கலைத் திறமையையும் காட்டுவதற்காகத்தான் கோயில்கள் கட்டப்பட்டன என்று யாரும் நினைக்கமாட்டார்கள். பக்ஷணக் கடையில் வைத்திருக்கும் பலதரப்பட்ட வர்ண மிட்டாய்கள் நம் கண்ணைக்கவருகிறது. அதில் எதை நாம் வாங்கி சுவைத்தாலும், எல்லாம் முடிவில் சக்கரையால் செய்ததுதான் என்று கொள்ளுகிறோம். கலைகள் ஸாதனம். கலையின் ஞானம் தெய்வீக ஞானத்தைப் பெறப் பல படிகளுள் ஒன்று. ஸங்கீதத்தைக் கலையென்றும் பயிலும் மாந்தர்களுக்கு ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி ஓர் எச்சரிக்கை விடுகிறார்.

ராகம்—தன்யாஸி] [தாளம்-ஆதி

பல்லவி

ஸங்கீத ஞானமு பக்திவினு
ஸன் மார்க்கமு கலதே ஓ மனஸா — (ஸ)

அனுபல்லவி

பிருங்கி நடேச ஸமீரஜ கடஜம
தங்க நாரதாது லுபாஸிஞ்சே — (ஸ)

சரணம்

ந்யாயா ந்யாயமு தெலுஸுனு; ஜகமுலு
மாயா மயமனி தெலுஸுனு; துர்க்குண
காய ஜாதி ஷட்ரிபுல ஜயிஞ்சே
கார்யமு தெலுஸுனு; த்யாக ராஜுனிகி — (ஸ)

பொருள் :— பல்லவி : ஓ மனமே (நீ சொல்) ஸங்கித (கீதம், ந்ருத்யம், வாத்யம்) ஞானம் பக்தியில்லாமல் நல்வழியாகுமா? (ஸன்மார்க்கத்தில் செலுத்துமா? செலுத்தாது). ஏனெனில் இந்த ஸங்கீத ஞானம் எவர் வழியாக உலகில் வந்தது என்று நினைத்துப்பார்.

அனுபல்லவி : பிருங்கி எனும் ரிஷி நடராஜப் பெருமான், ஆஞ்சனேயர், அகஸ்தியர், மதங்கர் என்ற ரிஷி நாரதமுனி போன்றவர்கள் உபாஸித்தது அன்றோ!

சரணம் : இந்த தியாகராஜனுக்கு எது நியாயம் எது அநியாயம் என்று தெரியும். உலகமெல்லாம் மாயை நிறைந்தது என தெரியும். துஷ்டகுணங்களான காமம் க்ரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்ற ஆறு சத்துருக்களை ஜயிக்கும் கார்யமும் தெரியும்.

கருத்து :— வேதாந்த தத்துவ ஞானமே உயர்ந்த ஞானம் என்பது நம்முடைய பெரியோர்களின் மதம். அப்படியிருக்க, சுகமாகப் பாடிக்கொண்டு காலம்போக்கு கிறவனுக்கு என்ன தெரியும்? புத்தியை மயக்கச் செய்யும் இந்த ஸங்கீதம், நிச்சயம் கெட்ட வழிகளில் மனம் போனபடி இழுத்துவிடும் என்பதும் சிலமுள்ள பெரியோர்கள் பலரின் முடிவு. வெறும் பாட்டும் கூத்தும் நடக்கும் இடத்தில் எந்தப் பெரியோர்களையும் காண முடியாது. இதைத்தான் வற்புறுத்தி, ஸங்கீதத்தைக்கண்டு யாரும் பயப்படவேண்டாம். அதே சமயம், சங்கீதத்தை வீணே பயன் படுத்தவும் வேண்டாம் என்று இங்கு காட்டுகிறார். பிருங்கி, நந்தி முதலானவர்கள் தாள வாத்யம் வாசித்து சிவனைக் களிப்பித்தார்கள். சிவபெருமானே நடன ஸூந்தரனாக, நிருத்ய சாஸ்திரத்தை உதிக்கச் செய்தான். மாருதியோ வீணையில் நாரதரையும் வென்றவர். நாரதர், மதங்கர், அகஸ்த்யர் இவர்கள் கான சாஸ்திர விற்பன்னர்கள். உயர்ந்த காயகர்கள். இவர்கள் இந்த ஸங்கீத சாஸ்திரத்தைக்கொண்டு, தெய்வத்துடன் ஒன்றாகி வாழ்கிறார்கள். ஆகையால் எது செய்யத்தகுந்தது எது செய்யத்தகாதது என்ற சாஸ்திர ஞானம் ஸித்திக்க வழி எது? நித்யம் எது? அநித்யம் எது? மாயை நிறைந்த உலகில், மாயை அகல வழி எது? காம க்ரோதங்களான ஆறு சத்ருக்களை ஜயிக்கும் உபாயம் எது? பகவத் பக்தியே தான். அது ஸித்திக்க ஸூலபமான உபாயம் எது? ஸங்கீத ஞானமே தான். முடிவாக பக்திபெற வேண்டியே ஸங்கீதம் பாடு. நன்மை உண்டு.

—◦◦◦—

# கட்டுப்பட்டவன் கதை.

ஒரு சமயம் லீலாசுகர் என்ற கிருஷ்ண பக்தர் வனத்திலுள்ள தபஸ்விகளையும், முனிவர்களையும் பார்த்து விளையாட்டாகச் சொன்னாராம். 'ஏன் நீங்கள் இப்படி கற்ற வித்தையை வைத்துக்கொண்டு திணறிக் கொண்டிருக்கிறீர்கள்? நீங்கள் வேதத்தின் உட்பொருளை அறிய ஆவல்கொண்டால் என்னுடன் வாருங்கள் காட்டுகிறேன். யசோதையின் வீட்டில் உரலில் அந்த உபநிஷதங்களின் அர்த்தம் கட்டுப் பட்டிருக்கிறதைக் காண்பீர்கள்' என்றாராம். உரலில் எம்பெருமான் கட்டுப்பட்டது அவராக ஆக்கிக் கொண்ட விளையாட்டு. நம்முடையதோ, திமிற முடியாமல் இறுக்கிக்கொண்ட கர்ம வினையின் பெருங் கட்டு. இந்த நம்முடைய கட்டுத் தளர கட்டுண்டவனை நினையுங்கள் என்று இந்த கீர்த்தனத்தில் தெரிவிக்கிறார் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள்.

ராகம்-தோடி] [தாளம்-ஆதி.

பல்லவி

கடதேர ராதா ; மனஸா— (கட)

அனுபல்லவி

எடலேக பஜனசேஸி நீ
எடகல்கு நிஜமு தப்பரல தெலிஸி — (கட)

சரணம்

கலசித்த லௌகிகமனு ச்ருங்
கலமந்து தகலகயே யுலூ
கல பத்துநிகி நிஜ தாஸுலட
வெலஸில்லு த்யாகராஜு மாடவினி — (கட

பொருள்:— கடைத்தேறக் கூடாதா? (நல்வழிப் படலாகாதா) ஏ மனமே! இடைவெளியில்லாமல் (அனவ்ரதமும்) பஜனை செய்து (ஸேவித்து) நிஜம் எது தப்பு எது என்று தெரிந்து நல்வழிப் படலாகாதா? துஷ்ட சித்தம்கொண்டவர்களுடைய வழியைப் பின்பற்றி (அந்த வழியே உனக்கு) சங்கிலிபோல ஏற்படாமல் இருக்க உரலுடன் கட்டுப்பட்ட ஸ்ரீ கிருஷ்ணமூர்த்திக்கு உண்மையான தாசனாகி கடைத்தேறக் கூடாதா? பக்தி விளங்கும் இந்தத் தியாகராஜன் மொழிகளை, ஏ மனமே! கேட்டு கடைத்தேறக் கூடாதா?

கருத்து:— மனம்போன வழியிலேதான் நாம்போகிறோம். மனம் நம்மை இழுத்துப் போகிற வழி சரியில்லை என்று புத்தி சொல்லுகிறது. அதற்கு சித்தமும் தலையசைக்கிறது இவ்விரண்டும் மனத்தை ரொம்பவும் கெஞ்சிக் கேட்கின்றன. "ஏ மனமே! உனக்கு நல்லது உண்டாகும். கண்ட இடங்களில் திரிந்து அகப்பட்டுக் கொள்ளாதே. உன்னால் நாங்களும் கெடுகிறோம்" என்கின்றன. அதற்கு மனம் சொல்லுகிறது. "என்னால் போகாமல் இருக்க முடியாது. அலைந்து கொண்டுதான் இருப்பது என்னுடைய இயல்பு. நான் அலையாமலிருக்க நீங்கள்தான் வழி சொல்லுங்களேன்" என்கிறது. அதற்குச் சித்தமும் புத்தியும் சொல்லுகின்றன. "அலையாதிருக்க ஒரு வழி சொல்லுகிறோம் கேள். உரலுடன் கட்டுப்பட்டானே ஒருவன், அவனிடத்திலேயே போய் இருந்துவிடு. உன் ஆட்டம் நின்றுபோகும். உனக்கு விடுதலையும் கிடைக்கும். அவன் கட்டுப் பட்டானாயினும், அவன் யாவர்க்கும் காண முடியாதவன். அகப்படாதவன். அப்பேர்ப்பட்ட பரமாத்மா கண்ணன் நமக்கு நன்கு அகப்படுவதற்காக இன்றைக்குக் கட்டை ஏற்றுக்கொண்டிருக்கிறான். இப்பொழுதே அவனைச் சிக்கெனப் பிடித்துவிடலாம்" என்று புத்தியும் சித்தமும் அழைக்கின்றன.

# தான தருமம்.

"எல்லாப்பிறவிகளிலும் உயர்ந்தது மனிதப்பிறவி. இது கிடைத்தற்கரிது. உடல் எடுத்தவன் ஒவ்வொருவனும், தன்னுடைய வாழ்நாளில் இந்த நற்பிறவியை வீணுக்காமல், இன்னும் உயர்ந்து உய்ய வழிதேட வேண்டும்" என்பது பழைய நூல்களில் காணும் அறிவுரை. மனிதன் பெருமை பெற இப்பிறவியிலும் மறுபிறவிக்கும் இன்றியமையாதது தரும நெறியில் அவன் செய்திடும் புண்ணிய கருமங்களே. அந்த தருமங்களில் எவ்வளவோ மாறுபாடுகள். ஒருவனுக்கு உரிய தருமம் மற்றொருவனுக்கில்லை. ஒருவன் செய்ய வேண்டியதை மற்றொருவன் செய்தால் குற்றமாகும். அவனவனுக்குரிய தருமத்தை விடாது கருத்துடன் செய்து மீள்வதே உத்தமமாகும். இவ்வாறு பலமுறைகளில் எச்சரித்து மனிதனுடைய நிலையை சீர்படுத்தும் சாஸ்திரங்களின் பரந்த கருத்தையும், எல்லாவற்றிலும் உயர்ந்த தருமம் எது? எல்லோராலும் பின்பற்ற வேண்டுவது எது? என்பதையும் ஸத்குரு ஸ்ரீ தியாக பிரும்மம் இந்த கீர்த்தனையின் வாயிலாக உபதேசிக்கிறார்.

ராகம்—அஸாவேரி] [தாளம்—ஆதி

பல்லவி

ஸமயமு தெலிஸி புண்ய முலார்ஜின்சனி
தனிகுடுண்டி ஏமி போய்யேமி

அனுபல்லவி

சமததோடி தர்மமு ஜயமே கானி
க்ரமமுதோ மனவினி வினவே ஓ மனஸா—(ஸ)

சரணம்

1 ஸாரமௌ கவிதல வினி வெர்ரிவாடு
ஸந்தோஷ படியேமி படகேமி
சேரடேசி குட்டி கன்னுலு பாருகா
கூர்ச்சியுண்டேனேமி தெரசியுண்டேனேமி— (ஸ)

2 துரக வீதிலோ விப்ருனிசி பானக பூஜ
கொரக சேஸி ஏமி சேயகனேமி
தரலோனு தன கோட்லகு யஜமானுடு
தைய மைதேனேமி லோபியைதேனே னேமி-(ஸ)

3 பதமு தியாக ராஜ நுதுனியை கானி
பாடிதே னேமி யேட்சி தேனேமி
எதனு ஸ்ரீராம பக்தியுலேனி நரஜன்ம
மெத்தியேமி எத்தகுண்டின னேமி — (ஸ)

பொருள்:— பல்லவி: அனுபல்லவி: ஸமயமறிந்து புண்ணியங்களை அடையாத (செய்யாத) பணக்காரர்களிருந்து என்ன? போனால்தான் என்ன? மன அடக்கத்துடன் (அஹங்காரம், மமஹாரம் விட்டு) செய்யும் தருமமே ஜயபத்தைக் கொடுக்கும் (பலனுள்ளது). அல்லாமல் (மற்றும் வேறு விதமாகச்செய்யும் தருமங்கள் பயன் இல்லாதது). இதை அறிந்து மனமே என் வேண்டுகோளை ஒழுங்காகக்கேட்டு அதன்படி நட.

குறிப்பு :— இங்கு மனமே என்று தன்னையே அழைத்துக் கொள்ளுகிறார். தானே தன் மனத்தில் இந்த உபதேசத்தைப் பதியவைத்துக் கொள்ளுகிறார்.

விபூதி பிரஸாதம் கொடுப்பவர்தான் முதலில் அதைத் தரித்துக்கொண்டு பிறருக்கு அளிப்பதுபோல், தனக்குச் சொல்லிக் கொள்ளுவதால் பிறரும் பயனடையட்டும் என்று வினயமும் பெருமையும் உள்ள கருத்து அறியத் தக்கது.]

சரணம்: ரஸமுள்ள கவிதா வாசகங்களை கேட்டு ஒரு சித்த ஸ்வாதீன மற்றவன் அல்லது வெறிபிடித்தவன் (தலையசைத்து) கொண்டாடினாலென்ன? கொண்டாடா விட்டாலென்ன? அதனால் கவிதையின் ரஸம் மாறிவிடாது. பிறர் மெச்சச்செய்யும் சில கருமங்கள் அவ்வாறே ஆகும். நன்கு அகன்ற கண்கள் பார்வை யற்றிருந்தால் மூடியிருந்தாலும் ஒன்றுதான். திறந்திருந்தாலும் ஒன்று தான். உடல் அடைந்தது பெரிதல்ல. அதில் உயிர் போன்ற அல்லது பார்வைக்கு நிகரான உண்மையின் ஒளி பிறக்க வேண்டும்.

2 துருக்கர்கள் வஸிக்கும் தெருவிலே ஒரு பிராம் மணனுக்கு ஸம்ப்ரமாக பானக பூஜை செய்தால் என்ன? செய்யாவிடில் என்ன? தான தர்மங்கள் எந்த இடத்தில் செய்கிறோமோ, அந்த இடத்தின் விசேஷத்தால் சோபை பெறுகிறது. புண்ணிய க்ஷேத்திரங்கள் செல்பவர்கள் அங்கு தானம் செய்தால், அது பன் மடங்கு பயன் அளிக் கிறது. அசுத்தமான இடத்தில் நல்ல காரியம் விளங்கு மோ? அதுபோல உன் உள்ளத்தை சுத்தமாக வைக்காமல், அழுக்கடைந்த மனத்துடன் செய்யும் எந்த உயர் கருமமும் சிறக்காது. புவியில் கோடீச்வரன் (கோடிக்கணக்கான செல்வத்துக்குத் தலைவன்) லோபியாயிருந்தால் அவனைப் (பணம்காக்கும்)பூதமென்று சொல்லுவார். மனிதஜன்மம் அடைந்த நீ, லோபியாக இராதே. உன்னுடைய ஆயுளே கோடி தனத்துக்கு மேலே மதிப்புள்ளது. கோடிபணம் செலவு செய்தாலும் சென்ற ஆயுளை மீட்க முடியாது.

இதில் செயற்குரிய செய்யாவிடில், ஆயுளைக் காக்கும் வெறும் மாமிசப் பிண்டத்திற்கு நிகர் ஆவாய்.

3 தியாகராஜனுல் துதிக்கப்பட்ட ராமனை அல்லாத பதங்களைப் பாடினுல் என்ன? (ஒரு குரல்) அழுதால் என்ன! மனத்தில் ஸ்ரீ ராம பக்தி இல்லாத நர ஜன்மத்தை எடுத்தால் என்ன அல்லது மிருக பிராயமாக இருந்து விட்டால்தான் என்ன? இரண்டும் ஒன்றுதான்.

ஆண்டவனைத் துதித்துப் பாடாத பாட்டு பாட்டாகாது. நரனையோ அல்லது உலக இச்சையை விளக்கும் பாட்டுகளோ, நம்முடைய அற்ப சுதிக்கு அழுது தீர்க்கும் குரலே ஆகும். இந்தப் பிறவியும் ஆண்டவனை அன்புடன் நினையாதவர்க்கு, மிருகப் பிறவிக்கு ஈடாகும்.

இந்த கீர்த்தனையில் காட்டியுள்ள உபமானங்களின் கருத்தை நன்கு சிந்திப்போர்க்கு ஓர் நுட்பம் வெளியாகலாம். உலகில் தானம்செய்வது தருமவழிகளில் ஒன்று, தானம் எல்லோருக்கும் உரியது. எல்லோராலும் செய்யத்தக்கதொரு தருமவழி. இங்கு தானம் செய்ய வேண்டிய முறையைச் சொல்லி அத்துடன் சரீரம் எடுத்தவர்ச்குரிய அவசிய தருமத்தையும் அதற்குள்ளே பதித்துக் காட்டியிருக்கிறுர். எல்லாவற்றிற்கும் மேலான சாச்வத தருமம்; எல்லாருக்கும் உரிய ஸமதர்மம்; காலத்தாலும், தேசத்தாலும்; பாத்திரத்தாலும் அதிகாரி நியமத்தாலும் கட்டுப்படாத தருமம், ஸ்ரீ ராம பக்தி என்ற பகவத் பக்தி மார்க்கமே என்று உபதேசித்துள்ளார்.

இந்த உபதேச வாக்கியம் இந்த கீர்த்தனையின் கடைசி சரணத்திலும், அநுபல்லவியிலும் ஸாரமாக விளங்குகிறது.

# ராக ரஸாம்ருதம்.

ஒரு சமயம் திருவையாற்றிற்கு ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளைப்பார்க்க நாரதப்ரும்மம் ஓர் யதிவேஷத்தில் வந்தார் என்றும், ஸ்ரீ ஸ்வாமிகளைப் பாடக்கேட்டு மெய்ம்மறந்து, 'ஸ்வரார்வணம்' என்ற ஏட்டுச் சுவடியை அவர் இல்லத்தில் விட்டுச் சென்றதாகவும், அன்றிரவு தனது தரிசனத்தை அளித்து நாரதமஹரிஷி, தான் விட்டுச்சென்ற 'ஸ்வரார்ணவம்' என்ற நூலை நன்கு கற்று அதன் மூலம் ஸங்கீத லக்ஷணங்களை அறிந்துகொள்ளும்படி அருளியதாகவும் வரலாறு தெரிவிக்கிறது. அந்த ஸ்வரார்ணவம் என்ற நூலைப் படித்துப் படித்துப் புளகாங்கிதம் அடைந்த ஸ்ரீ ஸ்வாமிகள், தான் இதுவரை பாடிவரும் கீதம், உயர்ந்தயோக சாஸ்திரம் என்பதை உணர்ந்து பல கீர்த்தனங்கள் மூலம் தான் தெரிந்து கொண்டதை உலகுக்கு அறிவிக்கிறார்.

ராகம்—ஆந்தோளிகா] [தாளம்-தேசாதி

பல்லவி

ராக ஸுதாரஸ பானமு சேஸி
ராஜில்லவே ஓ மனஸா — (ரா)

அனுபல்லவி

யாக யோக தியாக
போக பல மொஸங்கு — (ரா)

சரணம்.

ஸதா சிவ மயமகு நாதோங்கார ஸ்வர
விதுலு ஜீவன் முக்துலனி
தியாக ராஜு தெலியு — (ரா)

மனஸா — என்று தன்னையே அழைத்துக்கொள்ளுகிறார். தன்னுடைய சொந்த அனுபவமே பேசுகிறது.

பொருள் :— பல்லவி : ராகங்களைப் பாடி, அந்த அமுதத்தைக் குடித்து இன்புறுவாய் மனமே.

அனுபல்லவி : யாகம் செய்வதாலோ, யோகநிலை பெறுவதாலோ, அல்லது துறவறத்தாலோ, அல்லது உலகின் போகங்களில் காணும் சிற்றின்பமாயினும் சரி, அனைத்தும் இதனால் அடையலாம்.

சரணம் : நாதம் ஸதாசிவ மயமானது. நாதமே ப்ரணவம். அதுவே ஸப்த ஸ்வரங்களாகப் பெருகியது. இதை அறிந்துள்ள வித்வான்கள் ஜீவன் முக்தர்களாகின்றனர். இதை இந்த தியாகராஜன் தெரிந்துகொண்டேன்.

கருத்து:— நாதமே ஓங்காரத்தில் உண்டானது. ஓங்காரத்திலே முடிவடைகிறது. அதனுடைய பரிணமமே (பெருக்கமே) ஏழு ஸ்வரங்கள். யாகத்தில் கானம் செய்யப்படும் எந்த ஸாமமோ அதுவும் ஓங்காரத்தில் உண்டாகியது. யோகிகளின் மௌன நிலையில் தியானத்தில் அடங்கி ஜபிக்கப்படுவதும் ப்ரணவமே. துறவிகளுக்குக் கதியாக காண்பதுவும் ப்ரணவமே. அந்த ப்ரணவ நாதமே ஸம்ஸாரிகளுக்கு ஸப்த ஸ்வரமாக ஸஞ்சரித்து மூர்ச்சனைகள் ஆலாபங்கள் மூலம்பெருகி, மனதிற்கும் புத்திக்கும் இன்பத்தை அளிக்கும் போக்ய (அனுபவிக்கப்படும்) வஸ்துவுமாகும்.

ராகம் எனும் அமிர்த ரஸத்தில் மூழ்கித் திளைப்பவன் ஸம்ஸாரியாயினும் யாகம், யோகம், தியாகம் இவைகளை அனுஷ்டித்தவர்கள் பெறும் பயனை அடைகிறான். தன்னை மறந்து நாத உபாஸனையில், ஓங்காரத்தில் இன்புறுகிறான் என்பதால் ஜீவன் முக்தனின் நிலையை அடைகிறானென்றார்.



# அழகர் எழுவர்.

உயர்ந்த சாஸ்திரீய ஸங்கீதத்தைக் கேட்கிற பொழுது, ஸங்கீததேவதையையே நேரே பிரத்யக்ஷமானது போன்ற ஒரு தெய்வீக உணர்ச்சி ஏற்படுகிறது. அதுவும் "நிபத்த ஸங்கீதம்" என்ற முறையில் ஸப்த ஸ்வரங்களை "கிராமம்" என்ற வழியில் வாதி, ஸம்வாதி ஸ்வரங்களுடன் கூட்டி, கமகங்களுடனும் பாவ பூர்த்தியுடனும் இசைப்பவர்கள் மூலம் ஒவ்வொரு ராகமும் தனித்தனி வடிவத்துடன் பேரெழில் பெற்று காட்சியளிக்கும் அனுபவம், அந்த கானத்தில லயித்து விட்டவர்களுக்குச் சொந்தமானது. "தோடி எதிரே நிற்கிறது," "கல்யாணி கொஞ்சுகிறது" "காம்போதி கம்பீர நடைபோட்டது" "பைரவி பரவசப்படுத்தியது" "மோகனம் மயக்கியது" என்று சொல்லுபவர்கள் வெறும் உவமைக்காகச் சொல்லுவதல்ல; அவை ஆழ்ந்த ரஸானுபவமே. பல ஸ்வரங்கள் சேர்ந்து ஒரு ராகம் ஆகிறது. ராகத்திற்கு அழகான வடிவம் என்பது மட்டுமல்ல ஸ்வரங்கள் ஒவ்வென்றும் ஒவ்வொரு அழகிய தேவதை. அவர்களை முறைப்படி ஸேவிப்பதே ஸங்கீதமாகும் என்று ஸத்குரு ஸ்ரீ ஸ்வாமிகள் தான் பெற்ற 'ஸ்வரார்ணவம்' என்ற கிரந்தத்திலிருந்து இந்த உபாஸனுமார்க்கத்தை தெளிவுபடுத்துகிருர்.

ராகம்-ஜகன் மோகினி] [தாளம்-ஆதி.

பல்லவி

சோபில்லு ஸப்த ஸ்வர
ஸுந்தருல பஜிம்பவே மனஸா— (சோ)

அனுபல்லவி

நாபீ ஹ்ருத் கண்ட ரஸன
நாஸாது லயந்து — (சோ)

சரணம்

தர ரிக் ஸாமாது லலோ வர
காயத்ரி ஹ்ருதயமுன
ஸுரபூஸுர மானஸமுன
சுப தியாக ராஜாதுலலோ— (சோ)

பொருள்— ஒன்றாக ப்ரகாசிக்கும் ஏழு ஸ்வரங்கள் என்ற சுந்தரர்களை பஜிப்பாய் மனமே.

நாபி, ஹ்ருதயம், கழுத்து, நாக்கு, மூக்கு இவைகளி லிருந்து விளங்கும் (அழகர்கள் அவர்கள்).

ரிக்வேதத்திலும், ஸாமவேதத்திலும், காயத்ரீ மந்த்ரத்திலும், ஹ்ருதய ஸ்தானமானவர்கள். தேவர்கள் பிராம்மணர்கள் இவர்களின் மனத்திலும், அருள்பெற்ற இந்த தியாகராஜன் போன்றவர்களிடம் விளங்குபவர்கள் அந்த ஸுந்தர தேவதைகள்.

கருத்து :—ஸ்வரங்கள் ஏழு. அதில் ஷட்ஜம் சுருதியை ஒட்டி ஸ்தாயியைப் பெறுகிறது. ஆதார ஷட்ஜத்திலிருந்து உண்டாகும் ரிஷபம். காந்தாரம், மத்யமம், தைவதம், நிஷாதம் என்று ஐந்து ஸ்வரங்களும், தேகத்தின் முன்பு சொன்ன இடங்களிலிருந்து உண்டாகின்றன. பஞ்சமம் என்று ஷட்ஜத்திலிருந்து ஐந்தாவது ஸ்தானமும், ஷட்ஜமும், மந்த்ர. மத்திம, தாரஸ்தாயிகளில் நாபி, ஹ்ருதயம், கண்டம், சிரஸ் என்ற இடங்களைத் தொட்டு வெளிப்படுகின்றன. 'அ' காரம், 'உ' கார 'ம' காரமான ப்ரணவ சப்தமே. ரிக்வேதத்திலும், ஸாமவேதத்திலும் காயத்ரீ மஹாமந்திரத்திலும் அமைந்த மூல வித்தாகும். அதுவே ஹ்ருதய ஸ்தானமும் ஆகும். அந்த ஹ்ருதய ஸ்தானமே, ஸப்த ஸ்வரங்களுக்கும் உத்பத்தியும், வியாபக ஸ்தானமுமாகும். ஆதலின் இந்த ஏழு சுந்தர ரூபர்கள் ப்ரணவத்தின் சிறு சிறு வடிவங்களே. இவைகளைச் சிதைக்காமல், குலைக்காமல் பாடிப் பயனடைவாய்.

# முறையிடும் முறை.

பகவானை நோக்கிப் பலமுறை வந்தனம், ஸ்துதி இவைகளைச் செய்யச் செய்ய நம்மையே நாம் உயர்த்திக் கொள்ளுகிறோம். பகவான் அபார தயாபர மூர்த்தி. நம்மைக் காப்பதில் மிகுந்த அக்கறையும் கவனமும் அவன் கொண்டதுபோல் நம்மிடம் பிறர் எவர்க்குமில்லை. வெகு துரிதமாக நம்மை நாடி வந்து காக்கும் கருணை அவனிடம் இருந்தாலும், நமது சஞ்சலங்கள் நமக்கு அதற்கும் மிகையாக நம்மைப் பொறுக்கமுடியாத வண்ணம் செய்கின்றன. நம்முடைய நினைவு அவனைப்பற்றி நின்றபோதும் நம்மைச் சிதறவொண்ணாது அவனையே நினைக்கச் செய்யவேண்டும் என்ற உள்ளக்கிடக்கையே பெரிதாய்க்கொண்டு, ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் ஸ்ரீ ராமபிரானிடம் நித்யமும் முறையிட்டுக் கொள்கிறார். தினமும் முறையிடுவானேன்! ஒரு முறை சொன்னால் போதாதோ எனின் அதன் காரணத்தை அவர் அருள் வாக்கிலே நமக்கு உணர்த்துகிறார்.

ராகம்—காம்போதி ] [ தாளம்—ஆதி.

பல்லவி

மரிமரி நின்னே மொரலிட நீ
மனஸு"ன தயராது — (ம)

அனுபல்லவி

கரிமொரவினி ஸரகுன சன நீகு
காரண மேமி ஸர்வாந்தர்யாமி — (ம)

சரணம்

கருணதோ த்ருவுனி கெதுட நில்சின
கதவின்ஞனய்யா
ஸூரரிபு தனயுனிகை நரமிருகமௌ
ஸூசனலே மையா
மரசியுன்னவன சருனி ப்ரோசின
மஹிம தெலுபவய்யா
தரனு வெலயு (ஸ்ரீ) த்யாக ராஜஸன்னுத
தரமுகாதிகனே வினனய்யா — (ம)

பொருள்:— பல்லவி: அடிக்கடி அடிக்கடி உன்னை நமஸ்காரம் செய்தாலும் உன் மனஸில் (என்னிடம்) தயவு வரவில்லை.

அனுபல்லவி: யானை முறையிட்டதென்று கேட்டு வெகு வேகமாய் சென்ற காரணம் என்னவய்யா?

சரணம்: 1 கருணையுடன் துருவன் என்ற சிறு பிள்ளையின் முன்பு (தோன்றி) நின்ற கதையைக் கேட்டிருக்கிறேன்.

2 தேவேந்திரனின் பகைவனுன ஹிரண்ய கசிபுவின் புதல்வனுன பிரஹ்லாதனுக்காக நரஸிம்மமாக மாறினதின் ரஹஸ்யம் என்ன ஐய்யா?

3 நன்றி மறந்துவிட்ட வனத்தில் திரியும் குரங்கைக் (தண்டிக்காமல்) காப்பாற்றின மஹிமை தெரிவிக்க வேண்டுமய்யா.

4 பூமியில் பிறந்த இந்த தியாகராஜன் எப்பொழுதும் கொண்டாடினும் (என்னிடம் உனது தயவு வராதது) நல்லதல்ல என்று தெரிந்து கொள்ளுமய்யா.

பகவானிடம் அதிவாத்ஸல்ய கோபத்தால் எழுந்த நிரந்தர முகமான ஸ்துதி இது. ஒரு யானையைக் காப்பாற்றினாய். அது மதோன் மத்தமாய்த் திரிந்துகொண்டு, முதலையிடம் சிக்கி, கடைசியில் தன் உயிரைக் காத்துக் கொள்ள வேறுவழியின்றி உன்னை அழைத்து விட்டது. அதற்குத்தான் என்னவேகம், என்ன பரிவு? ஓடி வந்தனையே. இந்த தியாகராஜன் நியம விரதங்களுடன், ஆசை, பாசங்களை அகற்றி மன, மெய், மொழிகளால் உன்னையே எப்பொழுதும் முறை தவறாது பூஜை செய்தவன். இவனிடம் என்ன பாரபக்ஷம். யானையிடம் உனக்கு விசேஷப் பரிவு ஏற்பட அந்த யானை தான் என்ன செய்து விட்டது?

கருத்து:— தகப்பன் மடியில் உட்கார நினைத்து, அதுகிட்டாமல் கோபத்தால் தவத்திற்கு வந்த சிறுவனைக் காணத் தாங்களே எதிரே நின்று கொண்ட பெருங் கருணையைக் கேட்டிருக்கிறேன்.

ஹிரண்யகசிபு உன்னை வெறுத்துப் பகைத்தவன், அவனுடைய பிள்ளை பிரஹ்லாதன் உன்னை நினைத்தான் என்பதற்காக, உன் திவ்ய ரூபத்தையே மறைத்துக்கொண்டு, அவனைக் காக்க, அவனுடைய எதிரிலே தனி அவதாரம் நரஸிம்மனாகத் தோன்றினீரே! என்னைப்போலவே அந்த பிரஹ்லாதனும் அல்லது அவனைப்போலவே நானும் அன்றும், இன்றும், என்றும், கதறிய வண்ணம் இருக்கிறேன். அவனோ பகைவன் பிள்ளை, நானோ ஸத்குலத்துதித்த, பரம ராம பக்த குலோத்துங்கரான ராம பிரம்மத்தின் புதல்வன். பிரஹ்லாதனுக்கென்று காட்டியருளின தனிப் பெருங்கருணையின் காரணம் தான் என்னவோ!

வாலியைக்கொன்று கிஷ்கிந்தைக்கு அரசனாக்கி, தான் இழந்த போகங்களை அனுபவித்துப் பிறகு தன்னிடம் வர

வேண்டும் என்ற ஸ்ரீ ராமபிரான் சொன்ன மொழிகளை மறந்து, காமகேளிகையில் சிக்கி விட்ட சுக்ரீவனைத் தண்டிக்க வேண்டும் என்று சீறி எழுந்த தாங்கள் அவன் லக்ஷ்மணனால் தெளிவடைந்து தங்களை நாடிவந்ததும், அவனிடம் என்னபரிவு காட்டினீர்கள். அவனைக் கட்டி அணைத்துக்கொண்டீர்களே! இந்த தியாகராஜன் என்ன விதமாகத் தங்களை மறந்திருந்தேன். ஏன் என்னிடம் தாங்கள் தயவு காட்டவில்லை.

ஆதலின் எவ்விதத்திலும் என்னை மறந்திருப்பது பொருந்தாது. இது தங்கள் ஸுசீல குணத்திற்குப் பொருத்தமாகயில்லை. என் முறையீடுகளில் நான்முறை தவறியவனாயினும் என்னைக் காக்கவேண்டிய கருணையும் பெருந்தன்மையும், தங்களிடம் இல்லாமலா போய் விட்டது. கஜேந்திரனுக்குக் கஷ்டமும், துருவனுக்கு மனத் துயரமும், ப்ரஹ்லாதனுக்குத் தந்தையின் ஹிம்ஸையும், ஸுக்ரீவனுக்குக் காம மயக்கமும், தோஷங்களாயினும், அவைகளை நொடியில்வந்து தங்கள் தரிசனத்தால்போக்க வில்லையா! தங்கள் தரிசனம் ஒன்றே விரும்பி அனவ்ரதமும் பஜிக்கும் என்னிடம் என்ன காரணத்தால் தயவு கிடைக்காமல் போய்விட்டது.

ஆயினும்,என் நினைவு விடாது இன்னமும் தங்களையே பற்றி நிற்கும். அதுவே எனக்குப் பேரின்பம்.



# பஞ்சநத புரவாஸி ஸ்ரீ ராமன்.

பகவானுக்கு பக்தர்களுடைய வாஸஸ்தலமே உயர்ந்த திருக்கோவில். க்ஷேத்திரங்களும், தீர்த்தங்களும் அங்கு எழுந்தருளியுள்ள மூர்த்தியால் கீர்த்தி பெறுகின்றன. அந்த மூர்த்தியோ தன்னை ஸேவிக்க வரும் பக்தர்கள் கூட்டத்தைக் கண்டு, பொங்கி மகிழ்ச்சியடைகின்றார். அதனால் அவருடைய ஸாந்நித்தியம் மிகுந்து அனுக்ரஹம் பக்தர்களுக்கு நிறைந்து கிடைக்கப் பெறுகின்றது.

சிவபெருமான் அவ்வாறு கோயில்கொண்ட க்ஷேத்திரங்களுள் திருவையாறு மிகவும் முக்கியமானது. அப்பர் ஸ்வாமிகளால் கைலாஸத்தின் பெருமையை உலகுக்கு உணர்த்திய பெருமை கொண்டது. தர்ம ஸம்வர்த்தனி ஸமேதரான ப்ரணதார்த்திஹரனுடைய, காவிரியின் ஐந்துகிளைகள் பிரிந்து சுற்றிச் சுற்றிப் பாயும் க்ஷேத்திரம். அதில் ஸ்ரீராமபிரான் ஆனந்தமாகத் திருக்கோயில் கொண்டுள்ளார் என்ற புதுமையை ஸ்ரீ தியாகப்ரும்மம் உலகுக்கு அறிவிக்கிறார். ஸ்ரீ ராமபிரானுடைய ஸன்னிதி எங்கே உளது? எப்பொழுது அமைந்தது? என்றெல்லாம் நமக்குச் சொல்வது போல ஸ்ரீ ராமனிடம் பூரண மகிழ்ச்சியைத் தெரிவிக்கிறார். இந்த கீர்த்தனத்தால், ஸ்ரீ தியாக ப்ரும்மம் வாழ்ந்த காலத்தில் விளங்கின திருவையாற்றின் மகிமையை ஒருவாறு உணர்கிறோம்.

ராகம்-முகாரி] [தாளம்-ஆதி.

பல்லவி

முரிபெமு கலிகே கதா ராம ஸன்
முனினுத கரிவரத ஸ்ரீ ராம — (மு)

## அனுபல்லவி

பரமபுருஷ ஜகதீச வரம்ருதுபாஷ
ஸுகுண மணிகோச நீகு— (மு)

### சரணங்கள்

1 ஈடுலேனி மலயமாருதமுசே கூடின காவேரி தடமந்து
மேடல மெத்தலதோ ச்ருங்காரமு
மிந்த்ஸு ஸதன முலலோ
வேடுசு பூஸுருலக்னி ஹோத்ருலை
வேத கோஷமுலசே நுதியிம்ப
ஜூட சிவுடு கோரு யோகிய மைன
ஸுந்தரமகு புரமு தொரிகெனனுத்ஸு— (மு)

2 ஸகல ஸுகந்த ராஜ ஸுமமுலு
ஸலலித மகு கோகில நாதமுலு
சுகமுகஸனகாதுல நுதமைன
ஸுர தருவுலு கலிகி
நிகடமந்து வாணீ கொலுவ ஸுரபதி
நீலமணி நிபசரீர நேடு
ப்ரகடமைன நவரத்ன கசித ஹாடக
மண்டப வாஸமு கலிகெனனுத் ஸு— (மு)

3 ஈமஹிலோ ஸொகஸைன சோள
ஸீமயந்து வரமைன பஞ்சநத புர
தாமுனி செந்தனு வஸியிந்த் ஸுடகை
நீமதி நெந்த் ஸக
காமஜனக தியாகராஜ ஸன்னுத
நாம பவன தனய வித்ருத சரண
க்ஷேமமுக வர்த்தில்லு நட்டி
புரமுன ஸீதாபாம ஸௌ
மித்ரி ப்ரக்கலொலி செதரனி—

பொருள்:—பல்லவி: ராம! பெரிய மஹரிஷிகளால் ஸ்துதிக்கப்பெற்றவனே, யானைக்கு அருள் செய்தவனே. உனக்குத் திருப்தி (மகிழ்ச்சி) ஏற்பட்டுவிட்டதல்லவா?

அனுபல்லவி: பரமபுருஷனே, ஜகதீசனே, இனிமை பேசும் இறைவனே, எல்லா நற்குணங்களும் அலங்காரமாகி உன்னிடம் வஸிக்கப் பெற்றவனே! உனக்குத் திருப்திதானே?

சரணம்: (1) (ஈடுலேனி) இணையற்ற, மலைய மாருதம் வீச, காவேரி தடத்தில், மேடைகள், மெத்தை (மாடி) வீடுகள், அழகுடன் மின்னும் மாளிகைகள், அங்கு பிரும்மஞோத்தமர்கள், அக்னிஹோத்ரிகள், வேத கோஷங்களுடன், ஸ்தோத்திரங்கள் நிறைந்து விளங்க, உன்னைப் பார்க்க விரும்பும் பரமசிவனும் சேர்ந்து, அழகுள்ள இந்தப் பட்டணம் உனக்கு வாசஸ்தலமாக அமைந்துவிட்டதே! உனக்குத் திருப்திதானே!

(2) நறுமணம் நிறைந்த எல்லா உயர்ந்த புஷ்பங்களும், (குலுங்க) இன்பமுடன் குயில்போன்ற பக்ஷி ஜாலங்கள் கூவி, சுகர், ஸனகாதிகள் கூட கண்டு வியக்கும் தேவவிருக்ஷங்கள் போன்ற அநேக விருக்ஷங்கள் கொண்ட இந்தத் திருவையாறு க்ஷேத்திரத்தில், உன்னுடைய ஸன்னிதியில் ஸரஸ்வதி (தன்னுடைய கலைகளால் ப்ரகாசிக்கச் செய்து) உனக்குத் தொண்டு செய்ய, இந்திர நீலக் கல்போன்ற திவ்ய திருமேனி கொண்ட ஸ்ரீ ராமா! உனக்கு விசேஷமான நவரத்னங்கள் இழைத்த ஸ்வர்ணமயமான மண்டபத்தில் உன்னை அமரவைத்து, இங்கே வஸிக்கச்செய்தது உனக்குத் திருப்திதானே?

3 இந்த பூமியில், ஶோகஸான சோழ சீமையில் பெருமைகொண்ட பஞ்சநதபுரதாமனை, ப்ரணதார்த்தி ஹரனுடைய (செக்தனு) ஸமீபத்தில் வசிப்பதற்கு நீ (மதிமனந்த்ஸக) மனமிசைந்து, க்ஷேமமாகப் பலகாலம் வாழவிரும்பி, இங்கு இந்த க்ஷேத்திரத்தில் வஸிக்க இடம் பெற்றனையே! உனக்குத் திருப்திதானே! ஆஞ்ஜநேயனுக்குத் திருவடி ஸேவையைத் தந்தவனே ராமா!

கருத்து:— தான் பூஜிக்கும் ஸ்ரீ ராமன் ஸகல கல்யாண குணங்களுக்கும் இருப்பிடமானவன். அவ்வெம் பெருமானுக்கு இருப்பிடம் வெகு சேர்த்தியாகவே அமைந்துவிட்டது. அவன் பரிசுத்தன், காவேரீ தீரவாஸி. இந்த திருவையாறு வேத வித்பன்னர்கள் நிறைந்த புனித ஸ்தலம். என் ஸ்ரீ ராமனே வேதபுருஷன். அக்னி ஹோத்ரம் முதலிய வைதிக கர்மாக்களை நெறிவழுவாமல் செய்யும் ஸதாசார சீலர்கள் விளங்கும் இப் பூமியில், வேத தர்மபரிபாலகனை ஸ்ரீராமன் குடிபுகுந்துவிட்டான். காவேரீ தீரம் ரமணீயமான இயற்கை அன்னை அழகு பெறச்செய்யும் வளம்மிகுந்தது. அங்கு நீலமணி நிகர் திருமேனியான் கோயில்கொண்டுள்ளான். ஸகல கலைகளும் சோபிதம் அடையத் திரு அவதாரம் செய்த ரகுவீரன், தன் ஸன்னிதியில் ஸங்கீத வாத்யங்கள் இசைக்க, கலைமகள் நிலவி வரப்பெற்றான். அத்தனைக்கும் மேலாக ராமனை இணைபிரியா அன்பன் கைலங்கிரியான் அருகில் இருந்து, தன் ஆசைதீர ராமனின் அழகை நோக்கி, நோக்கிப் பருகுகின்றான். என் வீட்டில் நவரத்ன மண்டபத்தில் ஸுவர்ண பீடத்தில் அமர்ந்து இத்தனைப் பெரும் பாக்யமுள்ள ஸேவையை அனைவருக்கும் நல்கத் திருவுளம் கொண்டுத் திருப்தியுடன் இங்கேயே தங்கிவிட்டான் இது என் பாக்யம்.

# க்ஷீர ஸாகர சயனன்.

எல்லாப் பொருள்களும், எல்லா உயிர்களும் அடையும் கதி நற்கதியேயாகும். அவைகளின் முடிவு ஈசனிடத்தில் என்பது யாவரும் அறிந்துள்ளதே. அவ் வீசனிடம் சேர்ந்துவிட்ட பிறகு துன்பமோ இன்பமோ ஏதும் சொல்லுவதில் அடங்காத நிலையால் முற்றுப் பெறும். அவ்விடத்து ஒரே தனித்த பேரனுபவம் காத்திருப்பது எல்லோரும் விரும்புவதேயாகும். அந்தப் பேரனுபவத்தில் நீங்காது கலங்காது விளங்கு பவன் எவனோ அவனையே பரம்பொருள் என்றும் பெருமான் என்றும் பெரியோர் அழைக்கின்றனர்.

பாற்கடல் துயில் கொள்ளும் பரமனை எல்லாமான அமுதத் தன்மைக்கு ஆதாரமாகவும், அவனே எல்லா ஜீவன்களுக்கும் சேரும் இடமாகவும் விளங்குவதைப் பழம்பெரு நூல்களாலும்;புராணங்களின் உட்பொதிந்த கருத்துக்களாலும் தெரிந்துகொண்டோம்.

துன்பம் வந்தபோது நமது அலறும் குரல், எங்கு வரை போய்க் கேட்கும். [பாற்கடலில் சயனித்தருளும் பரந்தாமன் அதைக்கேட்டறிவானு! அவனுக்கு எல் லாம் அறியத் தகும் என்ற நம்பிக்கையில் நாம் அவனை அழைக்கத் தயங்குவதில்லை. மடுவில் சிக்கின யானை யும், தூர்த்தர் நடுவில் சிக்கின கற்பரசியும், துஷ்டன் பிடியில் சிறை சென்ற தேவியும், ஆண்டவனுக்குப் பணிபுரிந்து அல்லலுற்பட்ட பக்தனும் இன்னும் இவ் வாறு பலரும் எழுப்பிய கூக்குரல். பாற்கடலைச் சேர்ந்து அவன் செவியில் எட்டியதா! அவ் வாறு அவன் எல்லாம் அறியும் ஆற்றல் கொண்டவன் எனின், தன்னைச் சேர்ந்தவர்கள் பெரும் விபத்தில் சிக்குவதைத் தவிர்க்க முடியாமல் போனதென்னே?

சிக்கவைத்து, பிறகு கதறவைத்து, பின்னே காக்க வந்தருளும் கீர்த்தி ஒரு கீர்த்தியா?

பசுவின் பால் மிகுந்த சுவையும், புஷ்டியும் உள்ளது. அதை ருசிக்கவைக்கவேறு உபகரணம் தேவை இல்லை. அது போல் பகவானின் நாமமும் ஸ்வயமாகவே ருசியும், ரக்ஷையும் தருவது. அவனுடைய நாமவைபவம் மிகப்பரந்து அளவு கடந்தது. கடல் போன்றது. பரந்த அவனது இனிமை தரும் திருநாமங்களைச் சொல்லுபவரும், நினைப்பவரும், பாலின் குணம் போல் பாதுகாப்பை நிச்சயம் பெற்றிடுவார். பாலைக் கொடுப்பது பசு, அது தெய்வம் தரும் ஸம்பத்து. பிற காரணம் | ஏதுமின்றி அனைவர்க்கும் ஒரு பசு தன் பாலைக் கொடுத்து உதவுகின்றது. அதனிடம் தயை என்ற பிறவிக்குணம் அமைந்துவிட்டதே அதற்குக் காரணம். வேறு காரணம் சொல்லமுடியாது. அதே பசு தன் கன்றுக்கு அளிக்கும்பொழுது தன் அமுதம் போன்ற பாலை அன்பெனும் பெருக்கால் கொட்டிக் கொடுக்கின்றது. அங்கு சிந்தின அன்பின் பெரு வெள்ளத்தில் மற்றவரும் கரந்து உவக்கின்றனர்.

அடிக்கடி புராணங்களிலும், ஸ்தோத்திரங்களிலும் பகவானை க்ஷீர ஸாகர சயனன் என்ற சொற்றொடர் காணப்பட்டாலும், அந்த திவ்யநாமம் ஸத்குரு ஸ்ரீ தியாக ப்ரும்மத்தின் வாயிலாக அழைக்கப்படும் பொழுது, பகவானுக்கே அது ஒரு தனிப் பெருமை கொடுப்பதுபோல் த்வனிக்கிறது. பாலின் இனிய குணத்தவனே! என்று பரமனை அடியார்கள் கொண்டாடுகின்றனர். அந்த இனிய குணத்தைத் தான் கண்டவாறு ஒவ்வொரு சரணங்களிலும் பாடி அழைக்கின்றார்.

ராகம்—தேவகாந்தாரி ] [ தாளம் ஆதி.

### பல்லவி

க்ஷீர ஸாகர சயனு நன்னு
சிந்தல பெட்ட வலெனு ராம — (க்ஷீ)

### அனுபல்லவி.

வாரண ராஜுனி ப்ரோவனு வேகமே
வச்சி னதி வின்னுனுரா ராம — (க்ஷீ)

### சரணம்

நாரீமணிகி சீரலிச் சனதி
நாடே வின்னுனுரா
தீருடௌ ராமதாஸுனி பந்தமு
தீர்ச்சினதி வின்னுனுரா —
நீரஜாக்ஷிகை நீரதி தாடின
நீ கீர்த்தினி வின்னுனுரா
தாரக நாம தியாக ராஜனுத
தயதோனேலு கோரா ராமா — (க்ஷீ)

பொருள்:— பல்லவி: *க்ஷீர ஸாகர சயனு! திருப் பாற் கடலில் சயனிக்கும் ராமா! என்னை சிந்தனைகளுக்கு உள்ளாக்க வேண்டுமா?*

அனுபல்லவி: *வாரண ராஜுனை கஜேந்த்ரனைக் காப்பாற்ற வேகமாக வந்ததைக் கேட்டிருக்கிறேன்.*

சரணம்: *நாரீமணி திரௌபதிக்குப் புடவை சுரந்ததை முன்பே கேட்டுள்ளேன். தீரனை (பத்ராசலத்தில் உனக்கு ஆலயம் கட்டி, நவாப்பால் தண்டிக்கப்பட்ட) ராமதாஸனைப் பந்தத்திலிருந்து விடுதலை பெறச்செய்து (ஆலயம் கட்டின நவாப்பின் பணத்தை நீயே திருப்பிக் கொண்டுவந்து கொடுத்துக்) காப்பாற்றினதையும்*

கேட்டேன். நீரஜாக்ஷி (ஸீதாதேவிக்) காக, ஸமுத்ரத்தில் பாலம் கட்டிச் சென்றதையும் கேட்டேன். இத்தனையும் உன் தாரகநாமத்தின் தயாப்ரவாஹம் என்பதையுமறிந்த இந்த தியாகராஜனை அதே தயவால் காப்பாற்றி, என் சிந்தைத் துயரம் போக்கவேண்டும்.

கருத்து:— இங்கு ஸ்ரீ ராமனே, க்ஷீரஸாகர சயனன். தாரக நாமன், அந்த நாம வைபவத்தால் பெருகும்தயவே அவனுடைய கீர்த்தி. அந்த நாம கீர்த்தனம் செய்பவருக்கு அதுவே இனிமை! அந்த இனிமைக்கு ஈடு எதுவும் இல்லை! அதை அறிந்தவரே திரு அருட் பயன் பெற்றவராவர்.



## பக்த லக்ஷணம்.

உண்மையாகவே ஹரிபக்தி பண்ணுகிறவர் எப்படி இருப்பார்கள்? அவர்களுடைய லக்ஷணம் என்ன? என்று கீதாசாரியரான பகவான் அர்ஜுனனுக்கு விவரமாகப் பக்தியோகம் என்று உபதேசம் செய்திருக்கிறர். அதற்கு எடுத்துக்காட்டாக உத்தம பக்தி லக்ஷணத்தோடு உணர்ந்து, வாழ்ந்து வழிகாட்டியவர் தியாக ப்ரும்மம் அவர்களே! இப்பொழுது அவர் வாயிலாக பக்தனுடைய லக்ஷணத்தைச் சொல்லக் கேட்போம்.

ராகம்—ப்யாகடை] [தாளம்—ஆதி

### பல்லவி

பக்துனி சாரித்ரமு வினவே
மனஸா ஸீதா ராம — (பக்)

### அனுபல்லவி.

ஆ ஸக்தி லேக தாகோருசுஜீ
வன்முக்துடை யாகந்தமு நொந்து — (பக்)

## சரணங்கள்

ஜபதபமுலுதா ஜேஸிதி நகராது அதிகாகமரி
கபடாத் முடு மநமை பல்கராது
உபமதநகு லேகயுண்ட வலெ நநி
ஊரயூர திருக கராது
சபல சித்துடை யாலுஸா துலபை
ஸாரெகு ப்ரம காராத நேஹரி — (பக்)

பவவிப வமுநிஜ மநியெம்ச கராது அதிகாகமரி
ஶிவ மாதவபேத முசேயக ராது
புவநமந்து தாநே யோக் யுடநநி
பொம்கி பொட்ட ஸாக கராது
பவநாத் மஜத்ருதமௌ ஸீதாபதி
பாத முலநுயே மராதநு ஹரி — (பக்)

ராஜஸ தாமஸ குணமுலு காராது அதிகாகநுசு
வ்யாஜ முநநு ராலேத நகாராது
ராஜயோக மார்கதுநி சித்தமு
ராஜிசுட விட வகராது
ராஜஶிகா மணியை த்யாக
ராஜ ஸகுநி மரவராத நேஹரி — (பக்)

பொருள் :— *ஸீதாராம பக்தனுடைய (வாழ்க்கைக் குறிப்பு) சரித்ரம், (பக்தனின் இயல்பு, குணம்) இவை களை மனமே கேள்.*

*தன் விருப்பமின்றி தருமங்களைச் செய்து அல்லது தனக்குக் கிடைத்ததைக் கொண்டு திருப்தியடைந்து, ஒரு ஜீவன் முக்தனுடைய நிறைவுள்ள ஆனந்தத்தை அடைகிறான்.*

ஜபம், தபம் இவைகளைத் தாம் முறையே செய்தும் அவைகளை மற்றவர்கள் அறிய வெளியே சொல்லமாட்டார். அதுவுமன்றி மனத்தில் கபடம் ஏதுமில்லாமல் இருப்பார். தனக்கு நிகர் யாருமில்லை என்று ஊர் ஊராகச் சொல்லிக்கொண்டு திரியமாட்டார். அற்ப ஆசை கொண்ட மனத்துடன் வீடு, பொருள் இவைகளில் அதிகப் பற்றுதல் வைக்கமாட்டான். இவ்வுலகில் அடைபவைகளை உண்மை என நம்பியிருக்கமாட்டான். அதுவுமின்றி சிவன், விஷ்ணு என்ற பேதம் செய்யமாட்டான். இந்த புவனத்தில் தான் ஒருவனே யோக்யன் என்று பெருமை பேசிக்கொண்டு காலம் கழிக்க மாட்டான். ஆஞ்ஜனேயன் பற்றும் திருவடிகளையுடைய சீதாபதியின் பாதாரவிந்தங்களில் பக்தி மறக்க மாட்டான். ராஜஸ தாமஸ குணங்களை அடையாமல் எல்லாம் கர்ம வசப்படியே வரும் என்று ராஜயோக மார்க்கத்தைச் சித்தத்தில் நிலைபெறச்செய்து, ராஜசிகாமணியான திருவாரூர் தியாகேசப்பெருமான் தோழராய் விளங்கும் ஸ்ரீ ராமனை மறவாமல் இருப்பான்.

# சுத்த பக்தி.

ஸத்குரு ஸ்ரீ தியாகப்ரும்மம், பகவானுடைய குணங்களிலே அதி ப்ரேமைகொண்டு, தளராத பக்தி வெறியில் மூழ்கி, கான ரஸானுபவத்தில் நிகரற்ற பேரின்பம் சுவைத்து, அவ்வளவிலே தனக்கு நிகர் யாருமிலர் என்ற பகவதனுக்ரஹம் கிடைக்கப்பெற்று வரும் திவ்ய நாட்களிலே, ஒரு சமயம் அதற்கு ஊறுநேர்ந்து, பக்தி ரஸம் தடைபடும் வண்ணம், மனம் நொந்துபோன சமயம் இக் கீர்த்தனம் பாடியுள்ளார் என்று பெரியோர் கூறுவர்.

மனம் நொந்தபொழுது, ஆப்தனை சரணமடைந்து, அவன் ஆதரவான துணையைக் கொள்ளுதல்போல, ஹரி ஹரி என்று தன் சிரமகாலங்களிலே சொல்லிக் கொண்டு, 'ஹரி ஹரி!! என்றுன்னைச் சொல்லுவேனே யன்றி தேடிக் காண்பது எங்ஙனே,' என்று தளர்ந்து கரையும் நெஞ்சம் இக் கீர்த்தனம் வாயிலாகப் புலம்புகிறது.

புராணங்களிலும் இதிஹாஸங்களிலும் சொன்ன பக்தர்களின் சரித்திரம், திரௌபதி கஜேந்திராழ்வான். ப்ரஹ்லாதன் போன்றவர்கள் பகவானை அழைத்தார்கள். அவர்கள் பக்கலிலே பகவான் வந்தது உண்டே யல்லாது பகவான் இருப்பிடம் இவர்கள் சென்று கண்டார்களென்பது ஏது? பகவான் இருப்பிடம், பக்தர்களின் அபயம் எனக் கதறி அழைக்கும் இடமே யன்றோ? அக்கதறும் மனம் படைத்தவர்கள் அநேகர் எனினும், அப்பெருமான் திருநோக்கம் பெற்றவர் சிலரே என்பதைக் கருத்தில் கொண்டுத் தனது நிலையையும் தனது நெஞ்சத் துயரையும் ஒருங்கே வைத்து, ஹரியை அழைக்கும் மதுரத்வனி இக் கிருதியில் அமைந்திருப்பதையும் காண்கிறோம்.

ராகம்—ஹரி காம்போதி] [தாளம்—ஆதி

பல்லவி

நே நெந்து வெதகுதுரா—(ஹரி)— (நே)

அனுபல்லவி

ஆனல்கு மோமுனவாரி மொர
நார கிஞ்சி ராளி—(ஹரி)— (நே)

சரணம்

கலுஷாத் முடை துஷ்கர்ம யுநுடை
பலுமாரி துர்பாஷியை இலலோ
பக்தாக்ரே ஸருலலோ வேஷியை
த்யாக ராஜ பூஜித — (நே)

பொருள் :— நான் எங்கு (உன்னை) தேடுவேன் (ஹரி): அந்த நான்முகனை ப்ரும்மா முறையிட்டாலும் வராத உன்னை எங்கு தேடுவேன்? கபட ஹிருதயம் கொண்டவர்களிடமும் துஷ்டசெயல் புரிபவர்கள் இடத்திலும் இங்கு (இந்த காலத்தில்) பலவிதமான (வீண் பேச்சு) துஷ்டப் பேச்சுகள் கொண்டவர்களிடத்திலும் (தானே சிறந்த பக்தன் என்று வெளிவேஷம் போடுபவர்களிடமும்) இந்த தியாகராஜன் பூஜிக்கும் ஸ்ரீஹரி! ராமா! உன்னை நான் எங்கு தேடுவேன்?

இதில் அதி நயமான பா[3]வம் சுத்த ஸாத்விக பக்தியின் உயர்வை ஆத்மானுபவத்துடன் சொல்லுவதேயாகும். கபடமும், வீண் பேச்சும், வீண் செயலும், வெளிவேஷமும், பகட்டுக்கான பக்தியும், ஒருக்காலும் பகவானைக் காண உதவாது. ப்ரும்மா போன்ற உயர்ந்த பிறவிகளாயினும் காண இயலாது. சுத்தமான அந்தக்கரண விருத்தியே பகவத் பக்திக்கு முக்கிய ஸாதனமாகும்.



# குடும்ப ஜீவனம்.

ஸத்குரு ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகள் பக்தர், காயகர், கவி, ஸங்கீதத்துடன் சேர்ந்த அவரது மதுர வாக்யங்களை, ஸங்கீதம் இல்லாது படிப்பவர்க்கும் அதன் அழகும், எளிமையும், சுவை தருகின்றது. ரத்தினச் சுருக்கமான சொற்களின் கோர்வையில் ரக்தி என்ற உள்ளூறக்கம் பெருக்கெடுக்கும் விஸ்தாரமான ராக, ஆலாப, ஸஞ்சாரங்களில், முத்துக்குளிப்பவர் கண்டு மகிழ்வது போன்ற ஆழ்ந்த கருத்துக்களின் செறிவில் நம்மை மதிமயங்கி, பரவசமடையச் செய்கின்றது. வேத சப்தங்களை உரத்துக் கோஷம் செய்தே கானம் பண்ணவேண்டும் என்ற விதிப்படி, மறைந்த தன் ஹ்ருதய பாஷையை, எவ்வளவு விஸ்தரித்தாலும், முடிவுகாணாத சித்திரத்திறனை தேவகாந்தாரி ராகத்தில் வந்துள்ள கீர்த்தனம், நம்போன்றவர் பாடினாலும். அப்பெரியார் அளித்த கீர்த்தன அமைப்பு அதில் முத்தரையிட்டிருப்பதால். அப்பெரியாரே, அதை நம் முன்பு பாடுவதாகக் காட்சி கொடுக்கும்.

தேவகாந்தாரி ராகத்தை, ஒரு சமயம் ஸத்குரு தம்முடைய க்ஷேத்ராடனத்தின் பொழுது சென்னைக்கு வந்த சமயம் பாடினாராம். கோவூர் ஸுந்தரேச முதலியார் அவர்கள் இந்த மஹானை ஆதரித்தார். சென்னையில் பந்தர் தெருவில் தங்கியிருந்த பொழுது, பல பக்தர்களின் கோரிக்கைக்கு இணங்கி, தேவகாந்தாரி ராகத்தை ஆலாபனம் செய்ய எடுத்துக்கொண்டார். மூன்று நாட்கள் ஆலாபனம் செய்தும், முடிவுபெறாதது போலவே திகட்டா இன்பம் வாரிப் பெய்தது என்று அவரது சரித்திரம் கூறுகின்றது.

நம் முறையீட்டைச் சொல்ல பகவானுக்கு தேவ காந்தாரிதான் தூது போகவேண்டும். "க்ஷீரஸாகர சயனு" என்ற பிரஸித்தி பெற்ற கீர்த்தனம் தேவ காந்தாரியில் அமைந்தது. அதில் வாரண ராஜுனி என்ற அனுபல்லவியை பண்டைக்கால பல வித்வான்கள் பாடிக்கேட்ட போதெல்லாம், கஜேந்திரனுக்கு அன்று கருமுகில் வண்ணன் வந்தது நிஜமோ என்னவோ, இன்று நம்முடைய மத்த மதங்களை இந்த ராக கானம் பிழிந்தெடுத்து வெளியே தள்ளுகின்றது. பகவான் சித்தத்தில் நிர்மலமாக வந்து குடியேறி விட்டான் என்று நினைப்பே தோன்றியது.

ராகம் – தேவகாந்தாரி] [தாளம்—ரூபகம்

பல்லவி

நா மொர்ராலகிம்ப வேமி ஸ்ரீ ராம — (நா)

அனுபல்லவி

நீ மஹிமலு வினி வினி நேநெந்தோ நெரநம்மிதி (நா)

சரணம்

1 ஒக வாநருடல நாடு ஸஹோதர பாதலு
தாளக மொரலிட ப்ரோசிதிவி
தனகு ஸுக்ரீவமு காதா — (நா)

2 ஒக நிசிசருடன்ன மாடலோர்வக சரணனகா
(ஆ) சுக வசனமுலகு நாது
பலுகுலன்னி விபீஷணமா — (நா)

3 பூஸலு கூர்ச்சின யடுவலே பூனி பஜிஞ்சக
ஆஸலு கல தியாகராஜு
தாஸுடனுத்ஸு தெலிஸி — (நா)

பொருள்:— பல்லவி : என் முறையீட்டைக்கேட்கக் கூடாதா என்ன ஸ்ரீ ராமா!

அநுபல்லவி : உன் பெருமைகளைக்கேட்டுக்கேட்டு நான் எவ்வளவோ நன்ருக நம்பினேனே.

சரணம் : 1 ஒரு வனத்தில் திரிபவன் (ஸுக்ரீவன்) அன்றைய தினம் அண்ணன் செய்யும் துன்பங்கள் தாளாமல் முறையிட்டதும் அவனைக் காப்பாற்றினாய். உனக்குப் பெருமைதானே.

(ஸுக்ரீவனைக்காத்து நிமிர்ந்து நின்ருய் என்ற இடத்தில் ஸுக்ரீவம் என்ற பதம் அழகிய கழுத்தைக்கொண்ட ஸ்ரீ ராமனைக் குறிப்பிட்டது.)

2 ஒரு ராக்ஷஸன் (விபீஷணன்) தன் தமையன் சொல் பொறுக்காமல் கதறி அழுது உன்னிடம் வந்து சொன்ன அந்த வார்த்தைகளைவிட என்னுடைய பிரார்த்தனைகள் பயத்தைத் தருகிறதா?

(விபீஷணம் என்ற பதத்தையும் வேறு பொருளில் குறிப்பிட்டார். விபீஷணன் ஆகாசத்தில் தோன்றிய பொழுது ராமசேனையில் கலக்கம் ஏற்பட்டது).

3 பூஷணங்கள் (முத்துக்கள்) கோர்த்தாப் போல சேர்ந்து பக்திபுடன் பஜிப்பதற்கு ஆசைகள் கொண்ட இந்த தியாகராஜன் தாஸன் என்று (நன்ருகத்) தெரிந்தும் என் முறையீட்டைக் கேளாமல் இருப்பதென்ன?

கருத்து :— ஸ்ரீ ராமா, அன்று ஸுக்ரீவனையும் விபீஷணனையும் அபயம் கொடுத்து காப்பாற்றினுய். இது உலகறிந்த விஷயம், ஸுக்ரீவனுக்கும், விபீஷணனுக்கும் உன்னை அண்டிவரக் காரணமாக இருந்தது அவர்கள் தமையன்களான வாலியும், ராவணனும் அவர்களை ஹிம்ஸித்தது. அந்த ஹிம்ஸையைப் போக்கி, வாலியையும், ராவணனையும் கொன்று ஸுக்ரீவனையும், விபீஷணனையும் முறையே கிஷ்கிந்தை லங்கை இவைகளுக்கு அரசர்களாக்கிவிட்டீர்.

என் நிலைமையைச் சொல்லுகிறேன். "என்னையும் என் தமையனுர் அவமதிக்கிருர். (என் பஜனை, பக்தியை அவர் ஒப்புக்கொள்ளவில்லை) சொல்லால் என் மனத்தைப் புண்படுத்தியிருக்கிருர். அடித்தும், வைதும் இருக்கிருர். அது பொருட்டல்ல, உன்னிடம் நான் முறையிட்டுக்கொண்டது. ஸுக்ரீவன், விபீஷணன் போல் தமையனிடத்திலிருந்து என்னைப் பிரித்துக்கொண்டு வாழ வந்தவன் நான் அல்ல. எனக்கு அரசோ, வேறு சுகமோ விரும்பி உன்னிடம் முறையிட்டவனும் அல்ல. ராமா! மறுபடியும் சொல்லுகிறேன் என் அண்ணுவுடன் சேர்ந்து உன்னை ஸேவிக்கவேண்டும் என்ற பேராசையொன்றே என்னை உன்னிடம் முறையிடச் சொல்லுகின்றது. எங்கள் குடும்பம் ராம பக்தர்களின் குடும்பம், எங்கள் குடும்ப ஜீவனம் ராம பக்தி, எங்கள் பதவி, அந்தஸ்து எல்லாம் ராம ஸேவையே, இப்படியுள்ள இந்த அவிபக்த குடும்பத்தில் பொருள் பிரியலாம், பக்தி பிரியலாமோ பக்தி அவிபக்தமாகவே இருக்கவேண்டும். நான் உன்னை

பஜிப்பதில் கண்ட ஆனந்தத்தை, என் அண்ணுவும் காண வேண்டும். அவர் ஆனந்தப் படுவதை நான் கண்டு நீங்காத ஆனந்தம் அடையவேண்டும் நாங்கள் பெருக் குடும்பத்தில் உதித்த மணிகள். இவைகளைச் சிதறவிடா மல் கட்டும் ஸூத்ரமாக நீ இருக்கிறாய். எங்களைச் சேர்க்கவேண்டும்'' என்று ஸ்ரீ ஸ்வாமிகள் ஸ்ரீ ராமபிரா னிடம் முறையிட்டார்.

ஸ்ரீ ராமபிரானும் ஸுக்ரீவன், விபீஷணனுக்கு அருளி யதுபோல், ஸ்ரீ ஸ்வாமிகளின் வேண்டுகோளை நிறைவேற் றினார் அவர் தமையனும் பின்பு ஸ்வாமிகளுடன் கலந்துகொண்டு ராம பக்தியில் இன்புற்றார் என அவரது சரித்திரம் கூறுகின்றது.

---

# ஸங்கீதாஞ்சலி.

ஸங்கீதமே ஈச்வரன். அதன் நாதமே பரமாத்மா. அந்த நாதத்தின் இன்ப அனுபவமே பிரும்மானந்தம் என்ற விவரிக்கமுடியாத ரஸமாகும். அந்த நாதத்தின் உட்பிரிவுகளை விளக்கி எல்லோரும் அதைக் கையாண்டு அனுபவிக்கும் உபாயத்தை அருளிச் செய்தவர்கள் பல பெரியோர்கள். அவர்கள் வழியில் வந்து நம்மை உய்வித்தவர்கள் ஸ்ரீ ஸத்குரு தியாகராஜ ஸ்வாமிகள். அவருடைய மூச்சு ஸங்கீதத்தின் மிளிர்ந்த ஜீவநாடியாகும். அத்தனையும் ராமார்ப்பணமாகவே அவர் அதை அறிந்து அனுபவித்தார். ஆகையால் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் தற்காலத்தில் நாம் அறிந்து கொண்ட ஸங்கீத சாஸ்திரத்திற்குப் பிதாவாகத் திகழ்கிறார்.

ஸங்கீதம் என்பது வேதாத்யயனத்திற்குள்ள பெருமையும் அவசியமும் கொண்டது. படிப்பு வராதவன், வேறு எதற்கும் உதவாதவனே ஸங்கீதத்தில் போடுகிறது என்ற பழக்கமான சொல் எவ்வளவு தவறு. எவ்வளவு கொடியது. சாஸ்திரம் அறிந்தவர்களும் வேத பாரங்கதர்களுமே இந்த கந்தர்வ வித்தையை அத்யயனம் செய்தனர். ஸ்ரீ ஸதாசிவனின் ஸ்வரூபமே இந்த ஸங்கீதம். வெறும் ரக்தி என்ற செவி வழி இன்பமே என்று பேசுபவர்களின் மதத்தைக் கண்டித்து "ஸங்கீத ஞானமு, பக்தி விநா" என்றால் "ஸங்கீத ஞானமு, (தத்) பக்தி விநா" அந்த ஸங்கீத சாஸ்த்ரத்தில் பக்தியில்லை என்றால் ஸன்மார்க்கம் இல்லை என்று தான் பொருள் படுகிறது. ஸங்கீதத்தை நீ அலக்ஷியம் செய்தால் தோஷமுண்டாகும். பாபம் ஸம்பவிக்கும் என்றுதான் அந்த தன்யாஸி கீர்த்தனத்தில் எச்சரிக்கை செய்தார்.

ஸங்கீதத்தைக் கொடுத்த பெரியோர்கள் எவர் எவர் என்று தெரிந்து கொண்டால் நமக்கும் அந்த சிரத்தை ஏற்படும்.

ராகம் - மாயமாளவ கௌளை] [தாளம் - ஆதி

பல்லவி

விதுலகு ம்ரொக்கெத ஸங்கீத கோ — (வி)

அனுபல்லவி

முதமுன சங்கரக்ருத ஸாம நிகம
விதுலகு நாதாத்மக ஸப்த ஸ்வர — (வி)

சரணம்

கமலா கௌரீ வாகீச்வரீ விதி
கருடத்வஜ சிவ நாரதுலு
அமரேச பரத காச்யப சண்டி (ஸ)

ஆஞ்ஜனேய குஹ கஜமுகுலு
ஸாம்ரு கண்டுஜ கும்பஜ தும்புரு வர
ஸோமேச்வர ஸார்ங்கதேவ நந்தீ
ப்ரமுகுலகு த்யாக ராஜ வந்த்யுலகு
ப்ரும்மானந்த ஸுதாம்புதி மர்ம— (வி)

பொருள் :— வித்வான்களுக்கு, ஸங்கீத மகா வித்வான்களுக்கு வணங்குகிறேன். (என் நமஸ்காரம் உரியதாகும்) ஆநந்தத்தில் சங்கரன் கொடுத்த ஸாமவேத வித்வான்கள், அந்த ஸாமவேதத்தில் ஜனித்த ஸப்த ஸ்வர வித்வான்களுக்கு என் நமஸ்காரம் உரியதாகுக. லக்ஷ்மி, பார்வதி, ஸரஸ்வதி, ப்ரும்மா, விஷ்ணு, சிவன், நாரதர், இந்திரன், பரத ரிஷி, காச்யபர், சண்டிகேசர், ஆஞ்சநேயர், ஷண்முகன், கணபதி, மார்க்கண்டேயர், அகஸ்தியர், தும்புரு, ஸோமேச்வரர், சார்ங்கதேவர், நந்திகேசன் முதலானோர் மற்றும் தியாகராஜன் ஸேவிக்கும் ப்ரும்மாநந்த அமிருதக் கடலின் மர்மத்தையறிந்த வித்வான்களுக்கு என் நமஸ்காரம்.

கருத்து :— மும்மூர்த்திகள், மும்மூர்த்திகளின் தேவிகள், இந்திரன், நாரதர், பரதர், காச்யபர், சண்டிகேசர், ஆஞ்ஜநேயர், ஷண்முகன், கணபதி இவர்கள் ஸங்கீதத்தில் வல்லவர்கள். மார்க்கண்டேயர், அகஸ்த்யர், தும்புரு, பரதர் போன்ற ரிஷிகளும் அவ்வாறே. ஸோமேச்வரர் காட்டின ஸங்கீதமுறை உத்தர தேசத்தில் வழங்கும் சாஸ்த்ரீய ஸங்கீதம். சார்ங்கதேவர் கர்நாடக ஸங்கீதத்தை வகுத்தவர். ஸங்கீத ரத்னாகரம் என்ற முலகிரந்தத்தில் காட்டியபடி சார்ங்கதேவரின் மதத்தை அனுஸரித்துத்தான் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் ஸங்கீதம் அமைந்துள்ளது. இவை ஸாமவேத லோலனான பரமேச்வரனிடத்து உண்டான நாதவித்தை வேதத்திற்கு ஸமமாகப் போற்றத்தக்கது.

---

# ஸ்ரீ ஸத்குரு தியாகராஜ ஸ்வாமிகளின்
# கோவூர் பஞ்சரத்னக் கீர்த்தனைகள்.

ஸ்ரீ ஸத்குரு தியாக பிரும்மத்தின் இஷ்ட தெய்வம் ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தி. ஸ்ரீ ராமனை அன்றி தனக்கு வேறு எவருமிலர். ராமபிரானை நினைத்த தன் சித்தம் வேறொருவரையும் நினையாது, என உறுதிகொண்டு இறுதிவரை ராம ஸாக்ஷாத்கார பஜனையில் ஈடுபட்டவர். அவ்வாறிருக்க, இதர தெய்வங்களைக் குறித்து அவர் பாடியுள்ள கீர்த்தனைகளில், முக்கியமாக சிவ கீர்த்தனைகளில், சிவனை அன்றி வேறு நினைவு உண்டாகலாமா ? சிவனையன்றி வேறு தெய்வம் தனக்கு உண்டா ? சிவபெருமானைக் கண்ட கண்கள், இன்னுமொரு தேவதையைக் காணுமா ? என இவ்வாறு பாடியுள்ளார்.

உண்மையான ராம பக்தர் தன் சித்தத்தில் சிவபெருமானையும் பூரணமாக ஏற்றுக்கொண்டு பாடினர் என்று கொள்ளலாம். அதுபோன்றே சிவனும், ராமனும் ஏகமூர்த்தியே என்ற அபேதமான பக்தி கொண்டிருந்தார் என்றும் நினைக்கத்தகும். ஆயினும் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் ராம பக்தி எல்லையற்றது. 'ராம' மந்திர ஜப மேன்மை பெற்றவர். சிவனும் ராமனையும் ராம மந்திரத்தையும் கொண்டாடிப் போற்றுகிறார் என்று பல கிருதிகளில் உணர்த்தியுள்ளார். அவ்வாறிருக்க, சிவனின் பெருமையை நன்கு அறிந்து சிவராம தத்துவம் ஒன்றெனக் கருத்தில் கொண்டு, சிவபெருமானை தரிசிக்கும் தோறும், ராமபிரானும், ராமபிரானை தரிசிக்கும்தோறும் சிவபெருமானும், அவருடைய நினைவில் தோன்றி அன்பின் வசப்படுத்தி, உள்ளம் கனிந்த உண்மை பக்தியின் வடிவமான கிருதிகளை உலகுக்கு

அளிக்கச் செய்தனர் என்று நினைப்பது மிகையாகாது. சிவ மாதவ பேதத்தை அறவே கண்டனம் செய்பவர் ஆதலில், சிறந்த ராமபக்தரான தியாகராஜ ஸ்வாமிகள் சிவபக்தி கொண்டிருந்ததில் வியப்பில்லை.

சென்னைக்கு அருகே விளங்கும் கோவூர் என்ற கிராமத்திற்கு ஸ்ரீ ஸ்வாமிகள் ஒரு சமயம் விஜயம் செய்தார். திருப்பதி, காஞ்சி முதலான க்ஷேத்திரங்களை தரிசனம் செய்து கொண்டு, ஸ்ரீ சுந்தரேச முதலியார் என்ற ஒரு பக்தரின் அழைப்புக்கிணங்கி, அவரது கிராமமான கோவூரில் தங்கினார். ஸுந்தரேசமுதலியார் அளித்த உபசாரமும், ஸ்வாமிகளிடமும் காட்டின பக்தியும் கண்டு, அவரிடம் உள்ள ப்ரீதியினால், அவ்வூரில் எழுந்தருளியுள்ள, ஸ்ரீ சௌந்தர்யநாயகி ஸமேதரான ஸ்ரீ ஸுந்தரேஶ்வரர் மீது ஐந்து ரத்னம் போன்ற கீர்த்தனைகளைப் பாடினார். தார்மீகரும், தனிகரும் ஸ்ரீ ஸ்வாமிகளிடம் எல்லையற்ற பக்தி கொண்ட முதலியார் அவர்கள், ஸ்ரீ சுவாமிகளின் சென்னை விஜயத்தையும் ஏற்பாடு செய்ய, திருவொற்றியூரில் அவ்வாறே ஸ்ரீ திரிபுரஸுந்தரி அம்பாள் மீது பஞ்சரத்ன கீர்த்தனைகள் பாடி சென்னைக்கு ஸ்ரீ சுவாமிகள் விஜயம் செய்தார்.

ஸ்ரீ ஸ்வாமிகளின் கோவூர் ஸ்தல கீர்த்தனைகள் ஐந்தையும் கவனிப்போம். அவைகள், பக்தியும், ரக்தியும் கொண்டு விளங்குபவை என அவைகளைப் பாடக் கேட்டு அறிந்துள்ளோம்.

### சம்போ மஹா தேவ-

### ஸம்ஸ்கிருத கோவூர் பஞ்சரத்ன கீர்த்தனம் 1.

ராகம்-பந்துவராளி] [தாளம்-ரூபகம்.

பல்லவி

சம்போ மஹாதேவ சங்கர கிரிஜா ரமண (ச)

## அனுபல்லவி

சம்போ மஹா தேவ சரணாகத ஜன ரக்ஷக
அம்போருஹலோசன, பதாம்புஜ பக்திம் தேஹி—(ச)

## சரணம்

பரம தயாகர ம்ருகதர ஹர கங்காதர தரணீ
தரபூஷண தியாகராஜ வர ஹ்ருதய நிவேச
ஸுர ப்ருந்த கிரீட மணி வர நீராஜித பத கோ
புரவாஸ ஸுந்தரேச கிரீச பராத்பர பவஹர — (ச)

பொருள் :— சப்தங்களாலும், ஸ்வரத்தாலும், அக்ஷரங்களுடைய ப்ராஸங்களாலும், (அணிகளாலும்) மிருது வென்ற (மென்மை) ரஸம் த்வனிக்கிறது. அதே சமயம் ஹ்ருதய அந்தரங்கத்தில் இருந்து எழும் ஹரன் நாமம், ராகத்தின் அமைப்பால் "சம்போ" என்ற கம்பீர த்வனியில் லயிக்கிறது. சம்போ, மஹாதேவ, சங்கர கிரிஜா ரமண, சரணாகத ஜனரக்ஷக, அம்போருஹலோசன, பரம தயாகர, மிருகதர (மான் ஏந்தியவனே). ஹர கங்காதர தரணீதர பூஷண (பூமியைத்தாங்கும் பாம்பை ஆபரணமாகக் கொண்டவனே), த்யாகராஜ வரஹ்ருதய நிவேஸ, (த்யாகராஜ ஸ்வாமிகளின் உயர்ந்த ராம பக்தி நிறைந்த ஹ்ருதயத்தில் புகுந்தவனே) ஸுரப்ருந்த கிரீட மணிவர நீராஜித பத (தேவர்களின் கூட்டத்தின் கிரீடங்கள் உனது பாதத்தில் பட்டு, அந்த மணிகள் சிதறி, அதனால் ஒலிக்கும் பாதங் கொண்டவனே) கோபுரவாஸ (கோபுரத்தில் விளங்குபவனே, கோபுரமே சிவமயம், கோபுர தர்சனமே சிவதரிசனம் என்ற ஆகம நியதி யின்படி கோபுர ஸ்வரூபமானவனே), ஸுந்தரேச, கிரீச, பராத்பர, பவஹர என்று சிவ நாமாவளிகள் நிறைந்த இந்த கீர்த்தனம் பாடப்பாட நம்மை பரிசுத்தப் படுத்தக்கூடியது.

## கோவூர் பஞ்சரத்ன கீர்த்தனம்-2

ராகம்-கரஹரப்ரியா ] [ தாளம்-ஆதி

### பல்லவி

கோரிஸே விம்பராரே
கோர்கே லீடேர — (கோ)

### அனுபல்லவி

ஸ்ரீ ரமணீ கரமௌ கோவூரி ஸுந்தரமூர்த்தினி (கோ)

### சரணம்

ஸுருலு வெயி வன்னே பங்காரு
விருலசே பூஜிஞ்சக பூ
ஸுருலு ஸனகாதி மௌனி
வருலு நுதிம்பக — (கோ)
சிருலித்துநநி கொலுவையுண்டு
ஸ்ரீ ஸௌந்தர்ய நாயிகா
வருனி ஸ்ரீ தியாகராஜ
வரதுனி பரமாத்முனி ஹருனி — (கோ)

பொருள்: பல்லவி: *நமது விருப்பங்கள் நடேற, (ஸுந்தரேச்வரரை) விருப்பமுடன் (சிரத்தையுடன்) ஸேவிப்போம் வாருங்கள்.*

அனுபல்லவி: *ஸ்ரீ ரமணிகரமௌ — லக்ஷ்மீகரமான — மங்களகரமான கோவூரில் சுந்தரேச்வர மூர்த்தியை (சேவிப்போம் வாருங்கள்).*

*சரணம்: தேவர்கள் ஆயிரக்கணக்கான தங்கமலர்களைக் கொண்டு பூஜிக்க, ஸநகாதி முனிவர்களும், பிராம்மணோத்தமர்களும் (ருத்ர நமக சமகங்களால்) ஸ்தோத்திரம் செய்ய, ஸர்வ ஸம்பத்துக்களையும்*

கொடுக்க சித்தமாக (கொலுவை) எழுந்தருளியிருக்கும், ஸ்ரீ ஸௌந்தர்ய நாயகியின் பதியை, ஸ்ரீ தியாகராஜனுக்கு வேண்டியவை அளித்தவனை, பரமாத்மாவான ஹரனை (சிரத்தையுடன் ஸேவிப்போம் வாருங்கள்).

## கோவூர் பஞ்சரத்ன கீர்த்தனம் 3.

ராகம் – சங்கராபரணம்] [தாளம்—ஆதி

### பல்லவி

ஸுந்தரேச்வருனி ஜூசி ஸுகுல ஜூடமனஸுவச்சுனு (ஸு)

### அனுபல்லவி

அந்தமு கல வர கௌசிகி ஸைமான
ஸைமன கோபுரமந்து வெலயுமா — (ஸு)

### சரணம்

சரணமுலனு பங்காரு நூபுரமுலு
கரமுல ரவ கங்கண புகமுலு
ஸ்ரீ கர கர முகமுன கஸ்தூரி திலகமு
மெரயுசுனுண்டு லாவண்யமு கல — (ஸு)

ஒகசோ ப்ரும்மாதி ஸுருலு
ஒகசோ நிர்ஜர வர தருணுலு
ஒகசோ தும்புரு நாரதாதுலு
ஒகசோ பக்துலெல்ல பாடு — (ஸு)

ராஜராஜுனிகி செலிகாடயின
ராஜசேகருனி கோபுர நிலயுனி
ராஜஸ குண ரஹிதுனி ஸ்ரீ த்யாக
ராஜ பூஜிதுனி ரஜித கிரீசுனி — (ஸு)

பொருள்:— பல்லவி: ஸௌந்தரேச்வரனை தரிசித்த கண்களால் இன்னொரு தேவதையை தரிசிக்க மனம் வருமா ?

அனுபல்லவி: அழகுடன் உயர்ந்து கம்பீரமாகத் தோற்றமளிக்கும் கோபுரத்துள் விளங்கும் (ஸௌந்தரேச்வரன்)

சரணம்: (1) பாதங்களில் பொன்மயமான சதங்கைகள், கைகளில் மணிகள் வைத்து இழைத்த கங்கணங்கள், ஸ்ரீகரமான முகத்தில் துலங்கும் கஸ்தூரி திலகம் இவைகளுடன் சேவை சாதிக்கும் (ஸௌந்தரேச்வரனை ஸேவிப்போம் வாருங்கள்)

(2) ஒரிடத்தில் பிரும்மாதி தேவர்களும், ஒரிடத்தில் தேவ ஸ்திரீகளும், ஒரிடத்தில் தும்புரு நாரதாதிகளும், ஒரிடத்தில் பக்தர்கள் எல்லோராலும் பாடப்பெறும் (ஸௌந்தரேச்வரனை ஸேவிப்போம் வாருங்கள்)

(3) ராஜாதிராஜன் குபேரன் நண்பனுக விளங்கும் ராஜசேகரனை கோபுரம் கொண்ட பெருங்கோயிலைத் தனக்குறைவிடமாகக் கொண்டவனும், ராஜஸ குணங்கள் அற்றவரான வெள்ளிமலை ஈசனை, ஸ்ரீ தியாகராஜனல் பூஜிக்கப்படும் (ஸௌந்தரேச்வரனை ஸேவிப்போம் வாருங்கள்).

## கோவூர் பஞ்சரத்ன கீர்த்தனம்—4

ராகம்—கல்யாணி] [தாளம்—ரூபகம்

### பல்லவி

நம்மி வச்சி ந நன்னு—நயமுக ப்ரோவவே (ந)

### அனுபல்லவி

கொம்மனி வரமுல நொஸகு
கோவூரி ஸௌந்தரேச— (ந)

சரணம்

வேதபுராணகம சாஸ்த்ராதுலு குமிகூடி
பாதமுலனு கன ஜாலக பதிமாலிவேட
நாதரூப ஸ்ரீ ஸௌந்தர்ய நாயகீபதே பேத
வாத ரஹித ஸ்ரீதியாகராஜவரத ஸுந்தரேச்வரநினு (ந)

பொருள்:— பல்லவி: உம்மையே நம்பி இருக்கும் என்னை நயமுடன் காக்கவேண்டும்.

அனுபல்லவி: மேன்மைபெறும் வரங்கள் அளிக்கும் கோவூரின் ஸுந்தரேசமூர்த்தியே-

சரணம்: வேத, புராணம், சாஸ்திரம், ஆகமங்கள் ஒன்று சேர்ந்தும் உனது திருப்பாதங்களைக் காண இயலாது ஸ்தோத்திரம் செய்ய, சிவன், விஷ்ணு, ப்ரும்மா என்ற குணபேதங்கள் அற்ற (நிர்க்குண விஷ்கள) நாத ஸ்வரூபனே. ஸ்ரீ ஸௌந்தர்ய நாயகியின் பதியே, ஸ்ரீ தியாகராஜனுக்கு அருள்பவனே — ஸுந்தரேச்வரா!

## கோவூர் பஞ்சரத்ன கீர்த்தனம்—5.

ராகம் — ஸஹாநு] [தாளம்—ஆதி

பல்லவி

ஈவஸுதா நீ வண்டி தைவமு
நெந்து கானரா— (ஈ)

அனுபல்லவி

பாவுகமு கல்கி வர்த்தில்லு
கோவூரி ஸுந்தரேச கிரீச— (ஈ)

சரணம்

ஆஸசே அரநிமிஷமு நீபுர-வாஸ மொநரசேயுவாரிமதி
வேஸடலெல்லனு தொலகிஞ்சி தன ராஸுல நாயுவுலு
பூஸுர பக்தியு தேஜமுன நொஸகி
பவனமந்து கீர்த்தி கல்கசேயு
தாஸ வரத த்யாகராஜ ஹ்ருதய நி
வாஸ சித் விலாஸ ஸுந்தரேச— (ச)

பொருள்:— பல்லவி: இந்த பூமியில் உன்னைப் போன்ற தெய்வம் வேறு எவரையும் நான் காணவில்லை.

அனுபல்லவி: சீறும் சிறப்பும் கொண்டு வளர்ந் தோங்கும் கோவூர் சுந்தரேச, கிரீசா—

சரணம்: அன்பு கொண்டு அரை நிமிஷமாயினும் உனது திவ்ய ஸ்தலத்தில் தங்குபவரை, அவர்களது துயரனைத்தையும் நீக்கி தனம், நீண்ட ஆயுள், பிராம்மண பக்தி, தேஜஸ் இவைகளை அளித்து, இந்த பூமியில் கீர்த்தி பெறச் செய்யும் ஹ்ருதய நிவாஸனை, சித் விலாஸ ஸுந்தரேசனே.

இவ்வைந்து கீர்த்தனங்களிலும், சிவ ஆராதனையின் சிறப்பையும், சிவாலய வழிபாட்டின் சிறப்பையும் நன்கு புலப்படுத்தியுள்ளார். தியாகராஜஸ்வாமிகள் திருவையாற்றில் ஒரு நாளாயினும், பஞ்சநதீச்வரருடைய தரிசனம் மறந்தவரல்ல. ராம நாமத்தை சிவாலயத்தில் சென்று ஜபித்து, 96 கோடி ராம நாம ஜபம் செய்து பூர்த்தி கண்டவர்.

'சம்போ மஹாதேவ' என்ற கீர்த்தனத்தில் சிவ நாமத்தை உச்சரித்து, கீர்த்தனம் செய்துகொண்டு, சிவாலயத்தில் நம்மை அழைத்துச் செல்லுகிறார். கோபுர தரிசனம் நமக்கும் ஆகிறது. சம்போ மஹாதேவ எனக் கூறிக்கொண்டு நாமும் அவ்வாலயத்தில் பிரவேசிக்கிறோம்.

'கோரிஸே விப்பராரே' என்ற கீர்த்தனத்தில் சிவ தரிசனத்தின் பெரும் பாக்யத்தை சொல்லிக்கொண்டு, சிவதரிசனம் செய்து வைக்கிறார். சிவபெருமானின் அலங்கார வைபவத் தோற்றத்தில் நம்மை ஈடுபடச் செய்து, நமது விருப்பங்கள் நிறைவேறும் சிவதரிசனத்திற்கு அந்தரங்க பக்தி ச்ரத்தை அவசியம் என்கிறார்.

'ஸுந்தரேச்வருனி ஜூசி' என்ற கீர்த்தனம், சிவ தரிசனம் முடித்துக்கொண்டோம். சிவனை தரிசித்தவன் மற்றொருவனை தரிசிக்க இயலுமா? சிவபெருமானின் சிறப்புற்ற திருக்கோலத்தையும், அவர் நாதாலங்கார மூர்த்தி என்பதையும், எல்லா நிதிகளும் அவரிடத்தே விளங்குகின்றன எனவும் உயர்த்துகின்றார்.

அடுத்தபடி 'நம்மி வச்சித' என்ற கிருதியில், சிவனை ஏகாந்தமாக பிரார்த்தனை செய்துக் கொண்டு, சிவன் முக்குணங்களுக்கு அப்பாற்பட்டவர், கல்விகேள்விகளால் மாத்ரம் காணப்பெறுதவர், நாதமே அவருடைய சரீரம், ஆயினும் தன்னிச்சையில் பக்தர்களுக்கு அருள் புரிய வடிவுடை அம்மையுடன் கோவூரில் அழகர்க்கு அழகராக ஸேவை சாதிக்கிறார் என்ற தத்துவத்தை எளிதாகத் தெரிவிக்கிறார்.

கடைசியாக 'ஈவஸுதா' என்ற கிருதியில், சிவனைக் காட்டிலும் வேறு தெய்வமில்லை. அவன் அத்தகைய தயாமூர்த்தி. அவனது க்ஷேத்திரத்தில் தங்குபவர்களின் எல்லா கஷ்டங்களையும் நீக்கி, எல்லா நன்மைகளையும் அளித்து, தனம், ஆயுள், தேஜஸ், ஸாது பக்தி இவைகளை அளிக்கும் நாஸ வரதன். தனது அந்தரங்க ஹ்ருதய நிவாஸன், சித்விலாஸன், ஸுந்தரேசன் என சிவதரிசனத்தின் நற்பயனைக் காட்டி முடிக்கிறார்.



# ஸ்ரீ ஸத்குரு தியாகராஜ ஸ்வாமிகளின்
# திருவொற்றியூர் பஞ்சரத்னக் கீர்த்தனைகள்.

## மோக்ஷவழி

ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகள் ஸ்ரீ ராமபிரானிடம் வைத்துள்ள எல்லையற்ற ப்ரேமபக்தியின் காரணமாகத்தான் அம்பிகை, ஈச்வரன் இவர்களிடமும் உண்மையான பக்தி வெளிப்படுகிறது. இதர தெய்வங்களிடம் காட்டும் பக்தி ஒருவனுக்கு தன் இஷ்ட தெய்வத்தினிடம் வைத்திருக்கும் உண்மையான பக்தியால் மாத்திரம் அறியப்படும். ஒரு தெய்வத்தினிடம் வைத்திருக்கும் தனிப்பற்று மற்ற தெய்வங்களிடம் அலக்ஷியபுத்தியோ, குறைவோ, ஏற்படச்செய்யாது. அப்படிப்பேத புத்தி ஏற்பட்டால், அவன் தனது இஷ்ட மூர்த்தியை சரிவர உபாஸிக்காதவனாகும். இது ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகளின் கருத்தாகும்.

("பக்துனி சாரித்ரமு வினவே" என்ற கீர்த்தனம் காண்க)

ஸ்ரீராம பிரான் தனக்கு இஷ்ட தெய்வம் மாத்திரம் அல்ல. மேலான பரம்பொருள். மற்ற தெய்வங்களும் அப்பரம்பொருளின் பிரகாசமே. அந்த பிரகாசத்தில் ஸ்வாமிகளுக்குத்தான் எத்தனை ஈடுபாடு.

இது கோவூர் பஞ்சரத்ன கீர்த்தனைகளின் மூலம், ஸ்ரீ ஸ்வாமிகள் தனது உயர்ந்த சிவபக்தியைத் தெரிவித்துள்ளார். அதுபோல் தனது க்ஷேத்ராடனத்தின் பொழுது விஜயம் செய்த ஸ்தலங்களுள் சென்னைக்கு அருகாமையில் உள்ள திருவொற்றியூர் புண்ணிய ஸ்தலம் ஒன்று. அந்த ஸ்தல மாஹாத்மியம் மிகவும்

புராதனமானது. நாயன்மார்களால் பாடப்பெற்றது. தியாகராஜாவின் ஹம்ஸ நடனம் ஆனந்த தரிசனத்திற்கு உரியது. அங்கு பரமேச்வரன் ஸ்வயம்புவாக புற்றிடங்கொண்டு விளங்குகிறுர். அம்பிகை ஸ்ரீ திரிபுர ஸுந்தரி. இந்த ஸ்தலத்தில் ஸ்ரீ ஆதிசங்கரபகவத்பாதர்கள் எழுந்தருளி ஸ்ரீ சக்ர ஸ்தாபனம் பண்ணியுள்ளது அனைவரும் அறிந்ததே. அந்த அம்பிகையின் அழகையும், அலங்காரத்தையும் ஒரு வெள்ளிக்கிழமை அன்று தரிசனம் செய்துகொண்டு, ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகளின் ஸங்கீதாமிருதமான ஸாஹித்யத்தைப் பருகுவோம்.

## திருவொற்றியூர் பஞ்சரத்ன கீர்த்தனம் - 1

ராகம்-சுத்தசாவேரி] [தாளம்-ஆதி

### பல்லவி

* தாரினி தெலுஸு கொண்டி த்ரிபுரஸுந்
தரி நின்னே சரணண்டி — (தா)

### அனுபல்லவி.

மாருனி ஜனகுடைன மா தசரத கு
மாருனி ஸோதரி தயாபரி மோக்ஷ— (தா)

### சரணங்கள்

1 அம்ப த்ரிஜகதீச்வரி முகஜித வித்து
பிம்ப ஆதிபுரமுன நெலகொனு கன
காம்பரி நம்மின வாரிகபீஷ்ட வரம்
புலொஸகு தீன லோக ரக்ஷகி
அம்புஜ பவ புருஹூத ஸநந்தன
தும்புரு நாரதுலந்தரு நீது ப
தம்புனு கோரி ஸதா நித்யானந்
தாம்பு திலோனேலலாடு கண்டே— (தா)

2 மஹாதைச்வரிய மொஸகி தொலிகர்ம
கஹனமுனு கொட்டி ப்ரோசுதல்லி
குஹ கஜமுக ஜனனி அருண பங்கே
ருஹ நயனே யோகி ஹ்ருத் ஸதனே
துஹினாசல தனயே, நீ சக்கனி
மஹிமாதி சயம்புல சேதனு ஈ
மஹிலோ முனி கணமுலு ப்ரக்ருதி
விரஹிதுலை நித்யானந்துலைன— (தா)

3 ராஜித மணிகண பூஷணி மதகஜ
ராஜ கமனிலோக சங்கரி தனுஜ
ராஜகுருனி வாஸர ஸேவ தனகே
ஜன்ம பலமோ கனு கொண்டினி
ஆஜன்மமு பெத்தலு தமமதிலோ
நீ ஜபமே முக்தி மார்க்க மனு கோன
ராஜசேகருண்டகு ஸ்ரீ தியாக
ராஜ மனோஹரி கௌரி பராத்பரி— (தா)

பொருள் :— பல்லவி : தாயே, த்ரிபுரஸுந்தரீ ! (தாரினி) வழியை தெரிந்துகொண்டேன். அது என்ன வெனில் உன்னைச் சரணம் அடைவதே.

அனுபல்லவி: மன்மதனுடைய தந்தையான (விஷ்ணுவின் அவதாரமான) எங்கள் தசரத குமாரனுடைய ஸஹோதரியான தயை நிறைந்தவளே, மோக்ஷமடையும் வழியைத்தெரிந்துகொண்டேன்.

* [குறிப்பு:— இங்கு "தரினி தெலுஸு கொண்டி" என்று எடுத்துக்கொண்டு சிலர் பொருள் கூறுகிறார்கள். தரினி என்றால் எல்லை என்றாகிறது. அதுவும் சரியாக அமைகிறது. ஆனால் ஸ்வர அமைப்புகளில் "தாரினி," "ஸுந்தரி நின்னே" எனப்பாடும் பொழுது அமைவதால் தாரினி என்று எடுப்பது உவப்பாகும்.]

சரணம்: 1 அம்பிகையே! த்ரிலோகத்திற்கு ஈச்வரியே! சந்திரபிம்பத்தை வெல்லும் அழகுள்ள முகமுள்ளவளே! ஆதிபுரமென்னும் திருவொற்றியூரில் விளங்குகின்ற கனகாம்பரி, (பொன்னுடை தரித்தவளே) நம்பினவர்களின் அபிஷ்டங்களை ஈடேற்றி வரங்கள் நல்கி அருளும் தினலோக ரக்ஷகி, அம்புஜ, பவ, பிரும்மா, புருஹூத இந்திரன் தும்புரு நாரதர்களால் ஸதா நித்யானந்தமெனும்

"அம்புதிலோான, கடலில், ஒலலாடு சுண்டே"

மிதந்துகொண்டிருக்கும், மோக்ஷவழியைத் தெரிந்து கொண்டேன்.

2 மஹத்தான ஐச்வர்யத்தைக் கொடுத்து முன் புன்ன கர்மக்கூட்டங்களை அழித்துக் காக்கும் தாயே, குஹன், கணபதியின் தாயே, சிவந்த தாமரைக் கண்ணுடையவளே, யோகிகளின் ஹ்ருதயத்தை வாஸமாகக் கொண்டவளே, துஹிநாசலதனயே, ஹிமயமலை (பர்வத ராஜனின்) பெண்ணே, பார்வதியே! உன்னுடைய உயர்ந்த மஹிமை அதிசயங்களால், இந்த புவியில் முனிவர்கள், உலகப் பற்றற்றவர்களாக நித்யானந்தத்தை அடைந்த வழியை நானும் தெரிந்து கொண்டேன்.

3 பிரகாசமான நவரத்னாபரணங்களைத் தரித்தவளே, மத யானை நடை கொண்டவளே, சங்கரி! "தனுஜராஜ குருதின வாஸர" அஸுரர்கள் ராஜனின் குருவான சுக்ராசாரியாரின் நாள், அதாவது வெள்ளிக்கிழமை அன்று உனது ஸேவை என் ஜன்மத்தின் அதிர்ஷ்டமோ, எனக் கண்டு கொண்டேன். பெரியோர்கள் ஜன்மா முழுவதிலும், உன்னை ஜபிப்பதே முக்திக்கு வழி என்று கொண்டனர். ராஜசேகரரான ஸ்ரீ தியாகராஜ மனோஹரி, கௌரி, பராத்பரி, வழி தெரிந்துகொண்டேன். தாயே த்ரிபுர ஸுந்தரியே, உன்னை சரண் அடைந்தேன்.

கருத்து :— இக்கீர்த்தனத்தை சுருதி, லயத்துடன், கமகங்களுடன், ப்ராஸம் அநுப்ராஸம் கெடாமல் மூன்று சரணங்களையும் பாடக் கொடுத்து வைத்தவன். அதைக் கேட்கக் கொடுத்து வைத்தவன், நித்யாநந்தம் பெற்றவனே. அத்தகைய அழகுநடை கொண்ட இசைப்பா, அம்பாளுக்கு சுக்ரவார தரிசனத்தன்று ஸ்ரீ ஸ்வாமிகள் அளிக்கும் நவரத்னஹாரம் போன்றது.

மூன்று சரணங்களிலும் ஸ்வாமிகள் அம்பிகையின் ஸந்நிதியில் நித்யானந்தத்தையே பாடுகிறார். முதல் சரணத்தில் தேவர்கள் கண்டது, இரண்டாவது சரணத்தில் மஹரிஷிகள் கண்டது, மூன்றாவது சரணத்தில் பெரியோர்களான, துறவிகள் கண்டுகொண்டது, மூன்றாவது சரணத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள், ஸ்ரீ ஆதிசங்கரரையும், பட்டினத்தடிகளையும் மனத்தில் கொண்டு சொல்லியிருக்கலாம் எனத் தோன்றுகிறது.

அனுபல்லவியில், தன் இஷ்டமூர்த்தியும் மோக்ஷ தாயகனுமான ஸ்ரீ ராமபிரானின் அழகையும் ஸ்ரீ அம்பாளின் அழகையும் ஒன்றின மனத்துடன் காணவந்தவர் போல, என் ராமபிரானின் ஸஹோதரியே என்று அழைத்துக்கொண்டு அம்பாளின் ஸந்நிதிக்கு வருகிறார்.

---

## அம்பாளின் சுக்ரவார தரிசனம்.

ஸத்குரு ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகளின் பரந்தமனம், அம்பாளுடைய ஸந்நிதியில் எப்படி பரவசப்பட்டு பக்தியில் திளைத்திருக்கிறது என்பதற்கு அவருடைய அமிருத வாக்கே நிதர்சன ஸாக்ஷியாகும். அம்பாளுடைய அழகை வர்ணிக்க தெலுங்கு பாஷையும், ஸம்ஸ்கிருத பாஷையும் அழகுடன் அவருடைய வாக்கில் பிரகாசிக்கிறது. ஸங்கீதாம்சமோ அவருடைய ஹ்ருதய பாஷை.

தேனும், பாலும், முக்கனியும், கூட்டிச்சேர்த்துவிட்டது போல், தான் அடைந்த அம்பிகை திரிபுரஸுந்தரியின் தரிசன பாக்யத்தை இந்த கீர்த்தனத்தாலும் வர்ணிக்க காண்கிறோம்.

## திருவொற்றியூர் பஞ்சரத்ன கீர்த்தனம்-2

ராகம்—கல்யாணி] [தாளம்—ஆதி

### பல்லவி

ஸௌந்தரி நீதிவ்ய ரூபமுனு சூட
தனகு தொரி கெனம்மா— (ஸௌ)

### அனுபல்லவி

மந்த கமன நீது கடாக்ஷ பலமோ
முந்தடி பூஜாபலமோ திரிபுர — (ஸௌ)

### சரணங்கள்

1 புவிலோ வரமௌ ஸ்ரீமதாதி புரமுன
நெலகொன்ன நீ ஸொகஸௌவினி
ஸௌவிவேகுலைன ப்ரும்மாதி ஸுருலு கும்புகூடி
கவி வாஸரபு ஸேவகனுங்கொன
கலுகுனயனி கரகுசு மதிலோ
திவிதத்தரமு படுசு னுண்டகா
தீன ஜனார்த்திஹாரிணி த்ரிபுர— (ஸௌ)

2 கலிலோ தீன ரக்ஷகியனி ஸய
கலிகின தாவுன பொகடுதுனம்ம
ஸலலித குண கருணா ஸாகரி நீ ஸாடி எவரம்மா
அலஸி வச்சினந்து நாமனஸௌ
ஹாயி செந்துனயனியுண்டகமரி

கலகலமனி ஸாரஸதுலு வருஸகா
கொலுசு சுக்ரவாரபு முத்து த்ரிபுர — (ஸா)

3 நனு கன்ன தல்லி நாஜன்மமு
நாடே ஸபல மாயெனம்மா இபுடு
கன தரித்குனிகி பைகமுவலெ
கனுல பண்டுவுகா
வனஜ நயனவினுமு யெண்டு பைருலகு
ஜலமு வலெ சுபதாயகி காம
ஜனகுனி ஸோதரி ஸ்ரீ தியாகராஜ
மனோஹரி கௌரி ஓ த்ரிபுர — (ஸா)

பொருள் :— பல்லவி : ஹே-(த்ரிபுர) ஸௌந்தரியே! உன்னுடைய திவ்ய ரூபத்தை தரிசிக்க எனக்குக் கிடைத்ததம்மா.

அனுபல்லவி: மந்தகமன —மெதுவான நடையழகுடைய தாயே! (எனக்குக்கிடைத்த இந்த திவ்ய தரிசனம்) உன்னுடைய கடைக்கண் திருவருளன்றோ! அல்லது முன்பு நான் செய்த பூஜா பலமோ.

அம்பிகையின் திருவருளைப் பெறுவதற்கு அம்பிகையின் திரு அருளே காரணமாகும். திவ்ய தரிசனம் இன்று எனக்குக் கிடைத்த தென்றால் அதற்கு நான் முன் ஜன்மத்தில் பூஜைகள் புண்ணியம் பல புரிந்திருக்க வேண்டும்.

சரணம் : 1 புவியில் சிறப்புள்ள ஆதிபுரமெனும் பெயர் கொண்ட இந்த திருவொற்றியூரில் வீற்றிருக்கும் உன் அழகை கேட்டு, ப்ரும்மாதி தேவர்கள் நல்ல விவேகமுடன் கூட்டமாகக்கூடி, இந்த சுவிவாஸரம், சுக்ரவாஸரத்தில் (சுவினும் அசுநகவி: என்று சுக்ரனை கவி என்ற பதத்தால் சொல்லி வெள்ளிக்கிழமையில் உன் தரிசனம் பெறக்கிடைக்குமா என்று மனத்தால் உருகி, ஆகாசத்தில்

தடுமாற்றமடைந்த ஏக்கமுடன் உன் ஸந்நிதி வந்தடைந்தனர். என்போன்ற ஏழைகளின் துயரத்தைப் போக்குவாய். (ப்ரும்மாதி தேவர்களுக்கும் கிடைக்க இயலாத தரிசனம் இந்த ஏழைக்குக் கிடைத்தது.)

2 கலியில் தீனரக்ஷகி என்று ஸபைகளில் உன்னைப் புகழ்வேன். எளிய குணம்கொண்ட கருணாஸாகரீ! உனக்கு நிகர் யார் தாயே! களைத்து வந்த எனக்கு, ஹாயீ, ஸுகம் கிடைக்குமா என்று நான் இருக்கிறேன். இந்தத் தருணம் கலகலவென்று தேவதா ஸ்த்ரீகள் உனக்குப் பணிவிடை வரிசையாகச் செய்யவரும் இந்த சுக்ரவாரத்தில் அழகிய திரிபுரஸுந்தரியே!

3 என்னைப்பெற்ற தாயே! என் ஜன்மம் இன்றே பயன் அடைந்து விட்டதம்மா! இன்று பரம ஏழைக்கு பணம் கிடைத்தாற்போல கண்களுக்கு விருந்து தாமரைக் கண்கள் கொண்ட அன்னையே! காய்ந்த பயிருக்கு (மழை) தண்ணீர் போல சுபத்தை அளிப்பவளே! காமஜனகனுடைய என் ராமனுடைய ஸஹோதரி, ஸ்ரீ தியாகராஜ மனோஹரி, கௌரீ த்ரிபுரஸுந்தரீ! (உன் தரிசனம் எனக்கு பெரும் பாக்யம் அம்மா)

கருத்து:— திருவொற்றியூர் அம்பிகையின் வெள்ளிக்கிழமை தரிசனம் இன்றும் நானையும் கூட தனி சிறப்புள்ளது. அன்று அதைப்பெற்ற ஸ்ரீ ஸ்வாமிகள் எப்படி தன் அதிர்ஷ்டத்தை நினைந்து நினைந்து உருகுகிறார். அம்பிகையின் தரிசனம் பெற்ற ஸ்ரீ ஸ்வாமிகள் தன் இஷ்ட தெய்வமான ராமனையும் மறக்காமல் நீ யார்? என் ராமனின் ஸஹோதரியல்லவா, இந்த வைபவம் எனக்குக் கிடைத்தது என்று பொங்கி புளகாங்கிதமடைகிறார்.

——॥——

# தாயிடம் பரிவு.

திருவொற்றியூர் தேவி திரிபுரஸுந்தரி அம்பாளை தரிசனம் செய்துகொண்ட ஸத்குரு ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளுடைய சிந்தனை, அந்த உலக மாதாவின் தத்வத்தை நினைந்து வியந்து கொண்டாடும் தருணம், அவ்வன்னையின் ஆதரவு எப்படி நமக்கு எளிதாகும் என்று கூடிவரும் மற்றொரு கருத்து. அடுத்து, தாயின் பரிவைத் தவிர தனக்கு வேறு ஆதரவு ஏதும் சரியான தல்ல என்ற முடிவு இத்துணையும் கொண்டு, அந்த ஜகஜ்ஜனனியிடம் குழந்தைபோல் பரிந்து பரிந்து தன்னைப்பற்றி சலுகை வேண்டிப் பாடுகிறார்.

## திருவொற்றியூர் பஞ்சரத்ன கீர்த்தனம்-3

ராகம்—ஸாவேரி] [தாளம்—ஆதி

### பல்லவி

கன்ன தல்லி நீவு காபால கலுக
காஸி ஜெந்த நேல னம்ம ?— (க)

### அனுபல்லவி

வென்னயுண்ட நேதி கெவ்வரைன
வ்யஸன படுதுரா த்ரிபுர ஸுந்தரி— (க)

### சரணங்கள்

1 எல்லவாரி தனமுலச்வமுலு மரி
எக்குவைன கட்டி மித்தெலன்னியு
கல்லகானி கன்னவாரலு
காஞ்க ஸுகமு ஸுன்ன யனுசுனு
உல்லமுனனு பாக தெலுஸு கொண்டினி
யூரக தனிகுல ஸம்பாஷண நே

நொல்ல மாயலனி தெலிஸி ரஜ்ஜுபை
நாரக புத்தி செந்தனேல நம்ம— (க)

2 பலுகு மஞ்சி கானி பாந்தவுலு மரி
பாவ மரதுலக்க லன்னதம்
முலு கலிமி சூசுவாரு லேமினி
கனுலு கானரா ரனு சுனு
தலசு கொன்ன வெதுக வாரிமாயல
தகுல ஜாலனம்ம மரு மரீசி
கவனு சூசி நீரனுசு ப்ரமஸி
கந்துரா ஆதி புரவிஹாரிணி— (க)

3 கனக பூஷணமுல பெட்டி மரியு
ஸொகஸு சேஸிபாலு போஸி
பெஞ்சின தனுவு சதமு காது நிர்மல
தனமிஞ்சுகலே தனுசனு
அனுதின மொனரிஞ்சு ஸத்க்ரிய நீ
கனிபல்கின த்யாக ராஜ ரக்ஷகி
வினு மன்னிட நீவனி யெரிகி வேல்புல
வேறனி யெந்துர த்ரிபுரஸுந்தரி— (க)

பொருள்:— பல்லவி : பெற்ற தாயான நீ! என்னிடம் (அருள்) விளங்க என் பக்கம் இருக்க எனக்கு மனக்கவலை ஏற்படுவானேன் அம்மா!

அனுபல்லவி : வெண்ணெய் இருக்க நெய்வேண்டி யாராவது விசனப்படுவார்களா, திருபுரஸுந்தரி!

சரணம் :— 1 எல்லவாரி—எல்லோருடைய தனமும், அச்வமும் (வாகனம்) மற்றும் உயர்ந்த கல் கட்டிடங்களும், கல்லகானி — பொய்யே தவிர (நிஜமில்லை) அதை அடைந்தவர்களுக்கு ஏற்படும் ஸுகமும் சுன்னமே. பூஜ்யமே. இதை உள்ளத்தில் நன்றாக

தெரிந்து கொண்டேன். பணம் படைத்தவர்களிடம் வீண் பேச்சும் பொய்யே கயிற்றைக் கண்டு இதைப் பாம்பு என்ற புத்தியைக் கொள்வது ஏன்?

[உலகில் காணும் எல்லாவிதமான பொருள்களும் அளிக்கும் இன்பம் சிறிது காலத்தில் குறைந்து போகும். அதனால் பின்பு விசனங்கள் ஏற்படும். ஆதலால் இதை உண்மையான சுகம் என்று எண்ணியிருப்பது பேதைமை. கயிற்றைப் பாம்பு என்று நினைத்துப் பயப்படுகிறவன் போல் பொய்யானதில் மெய் என்ற எண்ணத்தை நான் கொள்ளக்கூடாது. அதே போன்று எண்ணியிருக்கும் (மித்யாவாதிகள்) தனிகர்களுடன் நான் சேரக்கூடாது. பணமும், பொருளும், அதைக் கொண்டவனும், ஒருவனுக்கு உற்ற விசனத்தைப் போக்க உதவினும், உண்மையில் அவர்கள் விசனத்தைப்போக்க இயலாதவர்களே. தாயே, திரிபுரஸுந்தரீ! நீதான் என்பக்கம் இருக்கிறாயே! நீயே உண்மையான துணை எனக்கு!]

2 பேச்சில் நன்மையில்லாத பந்துக்கள், மைத்துனன், மருமகன், அக்கா, அண்ணா, தம்பி, தங்கைகள், கலியின் ஆசவாரு—பணம் உண்டானபோது வந்து நம்மை கவனிப்பார்கள். இல்லாத பொழுது, காணாரு அனுசனு—காண வரமாட்டார்கள். இதை நினைத்துப் பார்த்தால் அவர்களைத் தேடமாட்டேன். அவர்கள் மாய வலையில் விழக்கூடாது அம்மா! மரு மரீசிகலனு—பாலைவனத்தில் கானல் நீர் என்று ப்ரமிக்கும் புத்தியை அடைவார்களா அம்மா! ஆதிபுரம் என்ற திருவொற்றியூரில் ஸஞ்சரிக்கும் என் தாயே!

பழுதையைப் பாம்பென்றும், கானல் நீர் என்றும் நினைக்கும் "மித்யை" என்ற ப்ரமையின் அடிப்படையை நினைத்து, இதிலிருந்து தப்புவதற்கான உபாயம் தேவியின் ஸந்நிதியே என்று தெளிகிறார். மாயையைக்கொடுப்பவளும் தாயார். அதைப் போக்குபவளும் அவளே!

3 தங்க நகைகளைப்போட்டு அலங்காரம்செய்து பால் விட்டு வளர்த்த இந்த சரீரம் அழிவுள்ளது. நிர்மலமான சித்தம் என்றும் இல்லை. தினம் தினமும் செய்யும் நல்ல காரியங்களை உனக்காக செய்கிறேன் என்று சொல்லும் இந்த தியாகராஜனை ரக்ஷிக்கிறவளே, செவி சாய்க்க வேண்டும். அன்னிடனு—மற்ற எல்லாவற்றிலும் நீயே விளங்குகிறாய் என்று அறிந்து கொண்டபின் மற்ற தெய்வங்களை வேறு என்று நினைப்பார்களா — திரிபுர ஸுந்தரி!

மற்ற தெய்வங்கள், மற்ற தனக்குப் புறம்பானவை களில் எல்லாம் தாயே நீ என்ற நினைவு கொண்டவனுக்கு நிர்மலமான சித்தம் கிடைக்கும். எல்லாம் ப்ரும்மத்தின் பிரகாசம் என்று பார்க்கும் புத்தியில் இந்த சரீரத்தில் காணும் பொய்யான (ஸுக இச்சை) எண்ணம், அற்ப மானதாகும், நன்மை, தீமை, விஷயஸுகங்கள், ப்ராக்ருத (உலகியல்) புத்தி இவைகள் நீங்கிவிடும். நிகரற்ற ஆனந்தத்தில் திளைக்கும் ஆதரவு கிடைக்கும். அதுவே திரிபுர ஸுந்தரி தாயின் பரிவு. அதற்கு நாம் அன்னையின் புகழைப்பாடி அவளிடம் பரிந்து நிற்போம்.

கருத்து:— ஸ்ரீ ஸ்வாமிகளின் கீர்த்தனையில் தேவி யின் "பரா" என்ற பர்வம் அழகாக விளங்குகிறது. நம்மிடத்தில் உள்ள அத்வைத நிலையே அவள் என்ற ஸ்ரீமத் சங்கர பகவத் பாதர்களின் உபதேசம் ஸ்ரீஸ்வாமி களின் மனத்தில் பிரதிபலிக்க அவர் வாய் மொழியாக இந்த க்ஷேத்ரத்தில் அம்பிகையை ஸ்ரீ மதாசார்யாள் உபா ஸித்து ஸ்ரீ சக்ர ப்ரதிஷ்டை செய்ததை கருத்தில் கொண் டிருப்பதை, பிற்காலத்தவர்களான நமக்கும் புரியவைக் கிறார், ஸ்ரீ ஸத்குரு தியாகராஜ ஸ்வாமிகள்.



# அம்பாளின் வர்ணனை.

அம்பிகையின் ஸ்தோத்திரத்தை எவன் சொல்ல நினைக்கிறானோ, அவன் அம்பிகையாகவே ஆகிறான் என்று ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் भवानि त्व என்ற ஸௌந்தர்ய லஹரிஸ்லோகத்தில் ஒரு ரஹஸ்யத்தை வெளியிட்டுள்ளார்கள் அந்த ரஹஸ்யத்தின் ப்ரத்யக்ஷ அனுபவம், ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளுக்கு திருவொற்றியூர் திரிபுரஸுந்தரி அம்பாளின் முன்பு கிடைத்துவிட்டது என்பதற்கு அவருடைய அபார ஸங்கீத ஸூக்ஷ்ம தரிசனமும், அம்பிகையின் தத்வ ரஸமான ஆனந்த பூர்த்தியும் வெளியாகி, ஐந்து கீர்த்தனங்களில் ஐந்து லக்ஷம் ரொவணைகளைக் கொட்டியிருக்கிறார். இஷ்ட தெய்வம் ராமன் என்ற நினைவில் திளைக்கும் ஸ்ரீ ஸ்வாமிகளும் அம்பிகை பிரஸாதத்தை அபரிமிதமாகப் பெற்று நமக்கும் வழங்கிக் கொடுத்துள்ளார்.

ஸ்ரீ ஸ்வாமிகளின் ஆரபி ராகத்திற்குத்தான் என்ன கௌரவம், அழகு, அதில் எத்தனைவிதம்; ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு அசைவுகளில் பரம ஸங்கேதமான (ரஹஸ்யமான) சொந்த அனுபவ இன்பத்தைக்காட்டியிருப்பதை நாம் பாடித்தான் அனுபவிக்க இயலுமே அன்றி படித்தோ சொல்லியோ வருவதன்று ராகங்கள் ஸ்வரங்களின் கோர்வை மாத்ரங்கொண்டதல்ல. அதில் அமைந்த ஒவ்வொரு ஸ்வர ஸப்தங்களின் சிறியதும் பெரியதுமான அசைவுகளாலேயே யன்றி ராகம் தனிப்பட்டு காணப்படுவதல்ல. இதற்கு ஸ்ரீ ஐயரவர்களின் "ஸாதிஞ்சினே" "சூதா முராரே" என்ற கிருதிகளின் ஆரபியின் ஜ்வலிப்பையும், "நாதஸுதாரஸம்" "ஓரா ஜீவாக்ஷா" என்ற கிருதிகளின் ஆரபியின் எழில் நிறைந்த நடையையும் காண்கின்ற பொழுது இந்த

ராகத்வம் நன்றாக நிருபிக்கப்படுகிறது. அதே போலவே, தோடி, கல்யாணி, ஹரிகாம்போதி, பைரவி என்று கனராகங்களிலும், ஜன்ய ஜனனராகங்களிலும் பொன்னுல் செய்து மரகதப் பொட்டிட்டதுபோல் அமைந்துள்ளது.

அவ்வாறே இந்த ஆரபி கீர்த்தனத்தால் திரிபுர ஸுந்தரித்தாயை அவர் வர்ணிக்கிற அழகு. உண்மையான ஸங்கீதம். அப்படி இப்பொழுது பாடப் பெறுமென்றால் தேவியின் ப்ரத்யக்ஷ தரிசனம் கிடைக்கும் என்பதில் யாதொரு ஐயமும் இல்லை.

## திருவொற்றியூர் பஞ்சரத்ன கீர்த்தனம்-4

ராகம்-ஆரபி] [தாளம்-சாபு

### பல்லவி

சுந்தரி நினு வர்ணிம்ப
ப்ரும்மாதி ஸுருலகைன தரமா— (சு)

### அனுபல்லவி

குந்தரதனே ஸனந்தனுதி
வந்திதே நேநெந்த த்ரிபுர— (சு)

### சரணங்கள்

கலகலமனு முக களலனு கனிகலு
வலராஜு பூமிகி ராடாயே
செலகு நீலாவண்ய முனுகனி
அலநாடே வல ராஜுகானக போயே
நிலுவரமகு நீ கம்பீரமுனு கனி
ஜலராஜு ஜட வேஷுடாயே
பலமைன தீரத்வமுனுகனி கனகா
சலுடு தாசில ருபுடாயே த்ரிபுர— (சு)

2 கனுலனு கனி ஸிக்குபடி கண்டு மீனுலு
வன தி வாலமு ஸேயகாயே—
ஜனனீ நீ சிறு நவ்வு காந்தி ஸோகி சிவு
டனுபமென சுப்ருடாயே
மினுகு ஸொம்முல சேல காந்துல மெறபுலு
கனி நிமிஷமு நிலுவதாயே
கனகாங்கி நீ ஸ்வரமுனு வினி வாணி
மகனி ஜிஹ்வானு தா பூனிகாயே த்ரிபுர— (சு)

3 பாவனமு ஸேயு பிருதுனி கனி பக்த
பாபமு பாரிபோ நாயே—
ஏவளே நீ தயசேத ஸத்கவுலெல்ல
காவ்ய முலனு ஸேய நாயே—
மாவருனிகி செல்லலனி ஸந்தோஷமுன
தேவி பெத்தலு பல்க நாயே
பாவுக விஞ்சிநீ பாதமுன த்யாகராஜு
பாவுக மனுகோ நாயே த்ரிபுர— (சு)

பொருள்:— பல்லவி: த்ரிபுரஸுந்தரி அம்மா, உன் அழகை வர்ணிக்க பிரும்மாதி தேவர்களாலும் முடியுமா?

அனுபல்லவி: முல்லை மலர் போன்ற பற்களை உடைய தாயே! ஸனந்தனர் (ஸனகர், ஸனத்குமாரர், ஸனத்ஸுஜாதர்) முதலானவர் போற்றும் பெருமை உடையவளே, நான் எம்மாத்திரம்?

சரணம்: 1 கல கலவென்ற உன் முகக்களையைக் கண்டு, சந்திரன், பூமிக்கு வராமல் ஆகாசத்தில் நிற்கின்றான். விளங்கும் உனது லாவண்யத்தைக் கண்டு அன்றைய தினமே மன்மதன், காணமல்போய் விட்டான்.

நிலை பெற்றதான உன் கம்பீரத்தைக்கண்டு, சமுத்ர ராஜன், ஜடமாகி விட்டான். பலமுள்ள உனது தைரியத்தைக் கண்டு, கனகாசலனென மேருமலைதான் கல்லாக நின்று விட்டான்.

2 கண்களின் அழகைக்கண்டு வெட்கமடைந்த கயல் மீன்கள், கடலில் மறைந்து வாழ்கின்றன. ஜனனீ, தாயே! உன்னுடைய புன்னகையின் காந்தி மேலே படப்பட சிவபெருமான் உவமையற்ற வெண்மை நிறம் பெற்றான். மின்னுகின்ற உன் ஆபரணங்களின் ஒளியும், பொன்னுடையின் ஒளியும் காண, மின்னல் கணத்தில் மறைந்து விடுகிறது. கனகாங்கி! உன் குரலின் இனிமையைக் கேட்க ஸரஸ்வதி ப்ரும்மாவின் நாக்கில் மறைந்து விட்டாள்.

3 பாவனமாக்கும் உன் புகழைக் கேட்டு பக்தர்களின் பாவங்கள் ஓடி விட்டது. எந்த வேளையிலும் உன்னுடைய திருவருளால் மஹாகவிகள் சிறந்த காவ்யங்களை செய்யத் தகுதி பெற்றனர். லக்ஷ்மிபதிக்கு தங்கை என்ற சந்தோஷத்தால் தேவி! உன்னைப் பெரியோர்கள் புகழ்ந்து கூறுகின்றனர். உன் பாதங்களின் நினைவு தியாகராஜனுக்கு பரம மங்களமாக ஆகியது.

கருத்து:— அதிக நுட்பமான உட்கருத்துக்களைக் கொண்ட இந்த ஸாஹித்யத்தின் பெருமையை சுருக்கமாக இங்கு எழுதுவது கடினம். ஸௌந்தர்ய லஹரியில் இரண்டாவது சுலோகமான—

तनीयांसं पांसुं तव चरणपङ्केरुहभवम्
विरिञ्चिः सञ्चिन्वन्विरचयति लोकानविकलम् ।

ப்ரும்மாவுக்கு ஸ்ருஷ்டிக்கும் தன்மை உன் பாததூளி ஸேவையால் ஏற்பட்டது என்றபடி ப்ரும்மாவும் அறியா உன் மஹிமையை யான் எவ்வாறு சொல்வேன் என்கிறார்.

மன்மதனுக்கு உலகை வசப்படுத்தும் சக்தி உன் கடாக்ஷத்திலிருந்து கிடைத்துள்ளது.

अपाङ्गात्ते लब्ध्वा जगदिदमनङ्गो विजयते ॥

ஸௌந்தர்ய லஹரி (6-வது சுலோகம்)

அதேபோல் 12-வது சுலோகத்தில் त्वदीयं सौन्दर्यं அம்பிகையின் ஸௌந்தர்யம் ஒப்புயர்வற்றது என்றபடி 'கெகெந்த' நான் எம்மாத்திரம் என்கிறார். சந்த்ர கலையையே தரித்து, சந்த்ர மண்டலமென்னும் அமிருத ஸ்தானத்தில் ஆதார சக்தியாக இருப்பவளா சந்திரன் காண பயப்படுகிறான். த்ரிபுரசுந்தரி மஹாமந்திரம் பதினறு அக்ஷரங்கள் கொண்டது. அதில் பதினறாவது அக்ஷரம் सादा परा என்று சந்திர கலாரூபமாகக் கருதப் படுகிறது.

தேவியின் சிவந்த நிறம் அர்த்தநாரீச்வரரான சிவனுக்கு வெண்மை நீங்கி ஒரே சிவப்பாக சிவனைத் தோன்ற செய்கிறான் என்று त्वयाहृत्वा वामं என்று ஆசார்யாள் சொன்ன அலங்காரத்தை அனுசரித்து தேவியின் புன்னகையின் வெண்மை ஒளி திருவொற்றியூர் தியாகேசனை வெண்மையாக்கி விட்டது என்று ஸ்ரீ ஸ்வாமிகள் போற்றுகிறார்.

ஸரஸ்வதி, திரிபுரஸுந்தரியான பராசக்தியின் மதுர வாக்கை அனுபவிப்பதை 60-வது சுலோகத்திலும், 66 வது சுலோகத்திலும் ஸ்ரீ ஆசார்யாள் வர்ணிக்கிறார். இங்கு ஸ்ரீ ஸ்வாமிகள், வாணி தன் பதியிடம் போய் நாக்கில் வெட்கி மறைந்து கொண்டாள் என்கிறார்.

கவிகள் அம்பிகையால் பெருமை அடைவதை

तवस्तन्यं मन्ये

— என்ற சுலோகத்தாலும்

फणीन्द्राणां चेतः

— என்ற 16-வது சுலோகத்திலும்

ஸ்ரீ ஆசார்யாள் உணர்த்தியதை இங்கு ஸ்வாமிகள் "ஸத் கவுலெல்ல காவ்யமுலனு ஜேய காபெ" என்றார். கடைசி யாக உன்பாத கிளைவே எனக்குப் பரம மங்களம் கொடுக்கின்றது. வேறு நான் விரும்புவது என்ன? என்று ஸமர்ப்பணம் செய்கிறார்.

त्वदी याभि र्वाग्भिस्तव जननि

चस्तुतिरियम् ॥

## அம்பிகையின் துதி.

ஆதிபுரி என்னும் திருவொற்றியூரில் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ திரிபுரஸுந்தரி அம்பிகையின் பெருமை களைப்பாடி சுக்ரவாரம் அன்று அம்பிகையின் தரிசனத் தை அடைந்த இன்பத்தை முன்புள்ள நான்கு கீர்த் தனங்களில் வழங்கிய ஸ்ரீஸத்குரு கீழ்க்கண்ட கீர்த்தனத் தின் வாயிலாக அம்பிகையை துதிக்கிறார்.

### திருவொற்றியூர் பஞ்சரத்ன கீர்த்தனம்-5

ராகம் – பேகடா] [தாளம்—ருபகம்

பல்லவி

ஸுந்தரி நன்னிந்தரிலோ ஜூசி

ப்ரோவவம்ம த்ரிபுர — (ஸு)

## அனுபல்லவி

ஸந்தடியனி இந்துமுகி
ஜாலமு வத்தம்ம! த்ரிபுர (ஸௌ)

## சரணங்கள்

1 பாலே! பாலித ஸுர ஜாலே—கமனஜித-ம
ராலே ஸ்வக்ருதாகில லீலே! தில காங்கித
பாலே! நீ பக்தியு மேலே! நீதய-ரா
தேலே! தல்லி! த்ரிபுர— (ஸௌ)

2 வாணி விநுதே சுகபாணி! வரசேஷ
வேணி! லலிதே—கல்யாணி ஸாம்ப சிவுனி
ராணி! மாதுர்ய வாணீ நம்மிதி பூ
போணி! தல்லி த்ரிபுர— (ஸௌ)

3 வாரீச ஸ்துத கம்பீரே ஆதிபுர-வி
ஹாரீ! தீனஜநதாரீ! நாகராஜ-கு
மாரீ! துஷ்கர்ம விதாரீ! த்யாகராஜு
கோரி யுன்ன த்ரிபுர — (ஸௌ)

பொருள் :— பல்லவி: *திரிபுர ஸுந்தரி! என்னை இந்த உலகத்தில் உள்ளவர்களுள் கண்டு காப்பாற்று வாய் அம்மா.*

அனுபல்லவி : *அதிக இறைச்சலாய் இருக்கிறது என்று ஜால வார்த்தைகள் சொல்லி என்னை கைவிட வேண்டாம் இந்து முகி! (சந்திரனைப் போன்ற முகத்தை உடையவளே.)*

சரணம் : *1 பாலாம்பிகையே! தேவர்களைக்காத்த வளே! அன்னத்தைப் பழிக்கும் நடையுடையவளே! அகில உலகங்களையும் விளையாட்டாய் உண்டாக்கிக் கொண்டவளே! நெற்றியில் திலக மணிந்து விளங்கு பவளே! உன்னிடம் வைக்கும் பக்திதான் மேன்மை யானது. அதை நீ அருள, தாயே! ஏன் வரவில்லை.*

2 கலைமகள் போற்றும் தாயே! கிளியைக் கையில் வைத்திருப்பவளே! பாம்புபோன்ற இடை பின்னலைக் கொண்டவளே! அழகியவளே! சுபத்தைக் கொடுப்பவளே! சாம்பசிவனின் ராணியே! இனிமையாய்ப் பேசுபவளே! மலர்போன்ற மென்மையுடையவளே! உன்னை நம்பினேன் தாயே!

3 வருணன் போற்றும் மகிமையுடையவளே! ஆதிபுரத்தில் வசிப்பவளே! ஏழை எளியவர்களுக்கு ஆதாரமானவளே! மலையரசன் புதல்வியே! துஷ்ட காரியங்களை நீக்குபவளே! தியாகராஜன் விரும்பிப் போற்றும் திரிபுரசுந்தரியே!

கருத்து :— இவ்வுலகத்தில் உள்ள எல்லா ஜீவராசிகளுக்கும் தாயென விளங்கும் திரிபுரஸுந்தரி அந்த ஜீவராசிகளில் ஒருவனான தன்னையும் பார்த்து, இவன் உண்மையுள்ள ஒரு பக்தன், நம்மை வேண்டி வந்துள்ளான் என்று கருணை காட்டி காப்பாற்றுவாள் என்ற முழு மன உறுதியுடன் உள்ளம் குழைந்து அவ்வன்னையின் சந்நிதியிலே அன்னை தரிசனத்தையே தனக்கு வரமாக வேண்டிக் கொள்கிறார்.

[ இந்த கீர்த்தனைத்தில் அம்பிகைக்கு தனி அழகு பொருந்திய நாமாக்களை சூட்டியிருப்பதைப் பார்க்கலாம். பாலே, பாலிதஸுரஜாலே, கமன ஜிதமராலே, ஸ்வக்ருதாலீலே! திலகாங்கித பாலே! வாணி விநுதே, சுகபாணி! வரசேஷவேணி! லலிதே-கல்யாணி சாம்சிவராணி! மாதுர்ய வாணி, பூபோணி, வாரிஷ ஸ்துத கம்பீரே, ஆதிபுரவிஹாரீ, தீனஜனதாரீ, நகராஜ குமாரீ, துஷ்கர்ம விதாரி, போன்ற உயர்ந்த அம்பிகையின் திருநாமங்கள் பாடப்பாட பக்தி பரவசமும் புண்யமும், அளிக்க வல்லவை.]

